

# பரிபூரண அழகு பராமரிப்பு—

## எவ்வேளையிலும் எங்குமே

**க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் துணையுடன் வேனிஷிங் க்ரீமாக உபயோகிக்க வேண்டுமா?**

**ஓ...தாராளமாக**

ஏனெனில் லாக்டோகாலமைன் ஒரு உயர்ந்த வேனிஷிங் க்ரீம் போலவே உங்கள் சருமத்தை மிருதுவாக்கி, வெயில், காற்று தூசு, இவற்றிலிருந்து பாதுகாக்கிறது.

ஆனால்... இதுமட்டுமல்ல லாக்டோ-காலமைனின் பெருமைக்கு காரணம். காலமைன் மற்றும் விட்ச்ஹேஸல் கொண்ட லாக்டோ-காலமைன் உங்கள் சருமத்தை இதமாக பேணுகிறது ...சுத்தீகரித்து,ஈரத்தன்மை-யளித்து சுயமான மென்மையும் தருகிறது.மேலும் பகல், இரவு எந்நேரத்திற்கும் உகந்த அருமையான ஒப்பனைசாதனம் க்ருக்ஸ் லாக்டோ காலமைன்

உங்கள் முக எழிலுக்கு உண்-மையில் லாக்டோகாலமைன் தவிர வேறு எதுவுமே வேண்டாம்.

க்ருக்ஸ்

**லாக்டோ-காலமைன்**

மாசில்லா அழகுக்கு !




**க்ருக்ஸ் இன்டர்ப்ரான் லிமிடெட், பம்பாய்-25.**



CIL 8 TM


வீட்டுச் சலவையின்
பெருமை:
ஸர்ப் சலவையின்
அருமை
Surf
AMAZING BLUE POWDER
FOR THE WHITEST WASH!



# கல்கி
## பொருளடக்கம்

இலக ஆனி 17 :: ஜூன் 30



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

படவிளக்கம் 6-ம் பக்கம்

இந்தியக் காக்கைகளுக்கு பயமில்லை!





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 □ இதழ் 48

# பாங்குகளும் சர்க்கார் ஆதிக்கமும்

பாங்குகளைச் சர்க்கார் உத்தரவுகளுக்கு முற்றிலும் அடங்கி நடைபெறச் செய்ய வேண்டும் எனப் பேச்சுக்கள் காங்கிரஸ் வட்டாரங்களில் நடைபெற்று வருகின்றன.

இன்று பாங்குகள் ரிஸர்வ் பாங்கின் உத்தரவாதத்தின் பேரிலும் அரசாங்கத்தின் பாதுகாப்புடனும்தான் இயங்குகின்றன.

ரிஸர்வ் பாங்கும் அரசாங்கமும் பாங்குகளின் மீது பலமான மேற்பார்வையையும், கட்டு திட்டங்களையும் வகுத்து பாங்குகள் தவறுகள் இழைக்காமலும், மோசம் போகாமலும் கண்காணித்து வருகின்றன. அவை கண்காணிப்பதனாலேயே இன்று பாங்குகள் திறம்பட நடக்கின்றன என்று சொல்லலாம். கண்காணிக்கும் அரசாங்கம் தானே பாங்குகளை நிர்வகிக்கும் பொறுப்பு முழுதும் ஏற்றுக் கொண்டு விட்டால் நாட்டின் பொருளாதாரமே சீர்குலையும் என்பதில் ஐயமில்லை. மக்கள் பாங்குகளின் நிர்வாகத்தில் நம்பிக்கை யிழந்து விடுவார்கள். அப்படி நம்பிக்கை யிழந்தால் சேமிக்கும் பணத்தைப் பாங்குகளில் போடமாட்டார்கள். அதன் பலனாகச் சேமிக்கும் பழக்கமே நின்று போகும்.

இன்று சர்க்கார் ஏற்று நடத்தும் பல ஸ்தாபனங்களில் ஒன்றாகிலும் சரியாக நடைபெறவில்லை. கோடிக் கணக்கில் ஆண்டு தோறும் ஒவ்வொரு ஸ்தாபனமும் நஷ்டமடைந்து வருகிறது. இந்த அழகில் யாருக்காவது சர்க்கார் பாங்குகளை ஏற்று நடத்துவதாக முன்வந்தால் நம்பிக்கை இருக்குமா?

அரசாங்கம் இன்று ஏன் பாங்குகளை ஏற்று நடத்தத் துடிக்கிறது?

இன்று பட்டிதொட்டிக் கிராமங்களில் உள்ள விவசாயிகளுக்கு, அவர்களுக்குத் திருப்பித்தரும் வசதியும் சக்தியும் இருக்கிறதா என்று பார்க்காமல் கடன் கொடுக்க எண்ணுகிறது. பாங்குகளில் உள்ள பணத்தைக் கட்டாயப்படுத்தி இப்படிச் செலவழிக்கச் செய்தால் பாங்குகள் நஷ்டமடைவது நிச்சயம். மக்கள் கஷ்டப்பட்டுச் சேமித்துக் கொடுத்த பணத்தை விரயப்படுத்தினால் அரசாங்கம்தான் பொறுப்பு எடுத்துக் கொள்ள வேண்டும். அந்தப் பொறுப்பின் பாரத்தை மக்கள் கொடுக்கும் வரியைக் கொண்டுதான் தீர்க்க வேண்டியதாகும்.

ஏற்கெனவே விவசாயிகளின் திருப்பிக் கொடுக்கும் திறமையை யோசிக்காமல், அரசாங்கங்களும் கூட்டுறவு பாங்குகளும் கொடுத்திருக்கும் கடன்களில் திரும்பி வராமல் நிற்கும் தொகைகள் எவ்வளவு என்பது சர்க்கார் கணக்கைப் பார்ப்பவர்களுக்குத் தெரியும்!

கடன் திரும்பி வராமல் போனால் சர்க்காராவது பாங்குகளாவது நிலங்களை எடுத்துக்கொண்டு பயிர் செய்ய முடியுமா? விவசாய மக்கள் எல்லாருக்கும் கடன் கொடுத்துக் கடன் திரும்பி வராமற்போனால் ஏலம் போட்டு யாருக்கு விற்பது? நிலத்தின் மதிப்பு குறைந்து போகும்.

ஏலம் போடுவது போன்ற நடவடிக்கைகளை எடுக்கவே தேர்தல் மூலம் பதவிக்கு வரும் மந்திரிகளால் முடியவே முடியாது. தள்ளுபடி (ரைட் ஆப்) செய்ய வேண்டியதாகத்தான் முடியும்!

பாங்குகளைச் சர்க்காரின் முழு ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வரும் திட்டம் இப்படிப் பல விதங்களில் நாட்டு மக்களுக்கு நஷ்டத்தையும் கஷ்டத்தையும் விளைவிக்கும். இந்த யோசனையைக் கைவிட வேண்டும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் வெள்ளி விழாக் கொண்டாடும் ஒரு பாங்கின் வரலாற்றை இவ்விதழின் வேறு பக்கங்களில் காணலாம். ''யூகோ'' பாங்கின் அவ்வரலாற்றைப் படிக்கும்போது எவ்வளவு கஷ்ட நஷ்டங்களினிடையில் தீரமாகப் பாங்கைப் பேணிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள் என்பதனை அறிகிறோம். இது ஒரு பாங்கின் சரித்திரம். இப்படி வளர்ந்த பாங்குகளை அரசாங்கத்தின் பிடிக்குள் சிக்க வைத்து, திணறச் செய்யவேண்டுமா என்பதனை ஒவ்வொருவரும் தீர யோசிக்க வேண்டும்.

# ஒரிஸ்ஸாவில் நடப்பதென்ன?

ஒரிஸ்ஸாவில் மதுவிலக்கு சட்டபூர்வமாக ஏற்கப்படாவிடினும் அங்கு மதுபானம் விற்க அனுமதிக்கப்படுவதில்லை என்று ராஜ்ய முதன்மந்திரி ஸ்ரீ ஆர். என். ஸிங் தேவ் தெரிவித்தார். ராஜ்யம் முழுவதும் கள் விற்பனை தடுக்கப்பட்டுள்ளது. அந்த ராஜ்யத்தில் பனை, ஈச்சை ஆகிய மரங்களிலிருந்து மட்டுமே பதநீர் இறக்கவும், வெல்லம் காய்ச்சவும் அனுமதிக்கப்படுகிறது. தென்னை மரத்திலிருந்து பதநீர் எடுக்க அனுமதிப்பதில்லை. இவ்விஷயத்தில் தமிழக அரசாங்கம் ஒரிஸ்ஸா முதல்வரைக் கலந்தாலோசிக்க வேண்டும். தென்னை என்பது மிகுந்த விலை மதிப்புள்ள காய்களை அளிப்பது. இக்காய்கள் முற்றாமல் சிதைத்து, பதநீர் இறக்கி வெல்லம் காய்ச்சுவது எப்படி லாபகரமாக இருக்க முடியும்? வெல்லம் காய்ச்சுவதாகச் சொல்லிக் கொண்டு, சிறிய அதிகாரிகளுடன் சதிசெய்து சட்டவிரோதமாகக் கள் காய்ச்சும் உத்தேசம் இருந்தாலொழிய, தேங்காயை முற்ற விடாமல் பதநீர் எடுக்க மாட்டார்கள் என்று சுலபமாகக் கண்டு கொள்ளலாம். சட்ட விரோதமான கள் நிறையக் காய்ச்சப்பட்டால் ராஜ்யத்திலுள்ள ஏழை மக்கள் நாசம் அடைவார்கள்.

# குடும்பக் கட்டுப்பாட்டின் விபரீத பலன்

நிர்வாகத்தினரின் லஞ்ச ஊழல்கள் இல்லாமல் கருத்தடைச் சாதனங்கள் திருப்திகரமாக விநியோகிக்கப்படுகின்றன என்றே வைத்துக் கொள்வோம். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டக்காரர்கள் விரும்புவது போலவே விளைவுகள் ஏற்படுகின்றன என்று வைத்துக் கொள்வோம். ஆயினும் குடும்பக்கட்டுப்பாடு வேறு; இயற்கையான இன்ப வாழ்வு வேறு.

கட்டுப்பாடின்றியும், யோசனை இல்லாமலும் கருத்தடைச் சாதனங்களை உபயோகிப்பதால் பயங்கரமான தார்மிக வீழ்ச்சி ஏற்படும். இந்தத் திட்டத்தில் ஜாக்கிரதையின்றி இவ்வளவு ஈடுபாடு காட்டியது சரிதானா என்று நினைக்கும் அளவுக்கு விஷயம் போகும்.

வாழ்க்கை என்பது ஓர் எளிய சூத்திரமல்ல. மக்கட் தொகை — உணவு உற்பத்தி இவ்விரண்டையும் ஈடுகட்டிவிடலாம். ஆனால் அதே சமயத்தில் தர்மச் சீர்குலைவும், வாழ்க்கையின் தூய்மைக்கு நாசமும் ஏற்பட்டுவிடும்.

# என்ன சேதி?

## ஹாலிவுட்டில் நல்ல திருப்பம்

சமீப காலத்தில் அமெரிக்காவில் ஏராளமான படங்கள், துப்பாக்கி சுடுதல், சண்டை, பால் உணர்ச்சி தூண்டிவிடுதல் ஆகியவற்றையே பிரதானமாகக் கொண்டு எடுக்கப்பட்டு வந்திருக்கின்றன. அன்பு, பாசம், தியாகம் முதலிய உயர்ந்த உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய படங்களுக்குப் பதில் மட்டரகமான படங்கள் எடுக்கப்பட்டு வந்திருக்கின்றன. ராபர்ட் கென்னடி ஓர் இளைஞனால் சுடப்பட்டதைக் கண்டதும் அமெரிக்கத் திரைப்பட உலகினருக்கு மனச்சாட்சி உறுத்தியிருக்கிறது. அமெரிக்கத் திரை உலகுக்குக் கேந்திர ஸ்தானமான ஹாலிவுட்டில் திரைப்படத் தொழிலில் ஈடுபட்டுள்ள நடிகர்களும், மற்றவர்களுமாக 350 பேர் கொண்ட ஒரு கமிட்டி அமைத்து, ஹிம்சை, கொலை இவைகளையே பிரதானமாகக் கொண்டு எடுக்கப்படும் படங்களில் இனி பங்கு பெறுவதில்லை என்று முடிவு செய்திருக்கிறார்கள். இந்தக் கமிட்டியில் மெர்லன் பிராண்டோ, ஜாக் லெம்மன், ஷெல்லி விண்டர்ஸ், ஹ்யூ ஓ' பிரியன் போன்ற பிரபல நடிகர்கள் இருக்கிறார்கள்.

அமெரிக்கத் திரைப்படங்கள் ஏராளமாக இந்தியாவிலும் இறக்குமதியாகின்றன. அதனால் இந்தியாவிலும் இளைஞர்கள் பாதிக்கப்படுவார்களோ என்ற அச்சம் இங்கு நல்லவர்கள் உள்ளத்தில் எழுந்து வந்தது. நோய்க்கு ஆதாரமான ஹாலிவுட்டிலே நல்ல திசைக்குத் திருப்பம் ஏற்படவிருப்பதைக் கண்டு மகிழ்கிறோம்.

"இலையுதிர்ந்து விட்டாலும்
இவ்வையத்தில்
தலைநிமிர்ந்து நிற்போம்
நாங்கள்"

பொருளடக்கப் பகுதிக்குப்
படம் அனுப்பியவர்:
செ. குப்பணன்

## ருஷ்யாவில் நமது சரித்திரம்

ருஷ்யாவில் தென்னிந்திய வரலாற்றை அறியவும், ஆராயவும் ஆர்வம் எழுந்துள்ளதாக ருஷ்யாவிலிருந்து வந்திருந்த சரித்திர ஆராய்ச்சியாளர் டாக்டர் ஆலயேவ் கூறினார். மைசூரை ஆண்டு, ஆங்கிலேயர்களுக்குக் கனலாக விளங்கிய திப்பு சுல்தான், நெப்போலியனுக்கும், பிரெஞ்சு அரசாங்கத்துக்கும் பிரெஞ்சு மொழியில் எழுதிய கடிதங்கள் கண்டெடுக்கப்பட்டு, மாஸ்கோ புத்தகசாலை (மியூஸியம்) யில் பத்திரமாக வைக்கப்பட்டுள்ளன

## காமகோடியின் கருணைமொழி



வேதம் என்பது எல்லோருக்கும் பொதுவான சட்டம். அது அநாதி காலமாக வந்தது. எல்லை இல்லாதது. ஆதி அந்தமில்லாத நித்தியமான சட்டம் (Eternal law). தேசம், காலம் என்ற வரையறை அதற்கில்லை. சுவாமியும் அப்படித்தான் இருக்கிறார். அவர் ஆதி அந்தம் இல்லாதவர். கால தேசம் இவற்றுக்குட்படாதவர். அவருக்கு எப்படி எல்லை கிடையாதோ அதே மாதிரி தான் அவருடைய சட்டமாகிய வேதத்துக்கும் எல்லை கிடையாது. வேத வாக்கியம் இடத்தாலோ, காலத்தாலோ ஒருபோதும் மாறுவதில்லை. அதனால்தான் ஒருவன் ஒன்று சொன்னால், 'நீ சொல்வது என்ன வேத வாக்கோ?' என்று கேட்கிறோம். வேத வாக்கியம் என்றால் மாறாதது.

வாம். நம் நாட்டுச் சரித்திர சம்பந்தமான பொருள்களை மேல் நாடுகளில் இவ்வளவு கண்ணும் கருத்துமாகப் போற்றி வருகின்றனர். ஆனால் நம் நாட்டில் நிலவும் அசிரத்தை பற்றி என்னவென்று சொல்ல!

ஔவைக்குச் சிரஞ்சீவித் தன்மை நல்கும் நெல்லிக் கனியை ஈந்த அதியமான் எங்கள் தமிழ் மன்னன் என்று பெருமை பேசுகிறோம். அந்த அதியமான் வாழ்ந்த தகடூர், தர்மபுரிக்கு அண்மையில் உள்ளது. அந்த ஊரில் அஜந்தாவையும், சித்தன்னவாசலையும் நினைவூட்டும் வண்ண ஓவியங்கள் அங்கிருந்த பழங்காலக் கோயிலில் இருந்தன. இவ்விஷயம் சென்னை அரசாங்கத்துக்கும் தெரியும். கலை அழகும், சரித்திர முக்கியத்துவமும் வாய்ந்த அச்சித்திரங்களைச் சமீபத்தில் (ஓராண்டு, ஈராண்டுக்குள்) சுண்ணாம்பு பூசியும், பென்சிலால் கிறுக்கியும், பாழ்படுத்தியிருக்கிறார்கள் என்று திரு வி. ஆர். நரசிம்மன் பத்திரிகைகளுக்கு எழுதியிருக்கிறார். இது என்ன பரிதாபம்!

## யாருக்குக் "கிதாப்"?

தமிழக காங்கிரஸ் தலைவர் திரு சி. சுப்பிரமணியம், 'தமிழ்நாட்டில் அமோகமாக நெல் விளைந்திருக்கிறதென்றால் அதற்குக் காரணம் தி.மு.க. அல்ல. இவர்கள் ஆட்சிக்கு வருவதற்கு முன்னதாக இருந்த காங்கிரஸ் கட்சி வகுத்திருந்த திட்டத்தை அப்படியே அமுல் படுத்தியதால்தான் சாத்தியமாயிற்று. ஆகவே இதற்கு முழுப் பொறுப்பும் முந்தைய காங்கிரஸ் அரசாங்கம்தான்' என்று கூறுகிறார்.

காங்கிரஸ், தனது ஆட்சிக் காலத்தில் கட்டிய பல அணைகள், அமுலாக்கிய நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்கள் எல்லாம் இவர்களுக்கு முந்தி ஆட்சி நடத்திய ஆங்கிலேய அரசாங்கப் பொறி இயல் நிபுணர்கள் வகுத்து வைத்து விட்டுச் சென்றவைதான். இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்களா? எல்லாம் தங்கள் அறிவாற்றலால் உதயமான திட்டங்கள் என்றல்லவோ பெருமைப்பட்டுக் கொண்டிருந்திருக்கிறார்கள்! இப்படிப் பேசியவர்கள் இன்று தி. மு. க.வை நோவானேன்?

## மலேசியாவின் பாராட்டு

வெளி நாட்டுக்குச் சென்று அங்கு வாழ் மக்களுடன் இரண்டறக் கலந்து, அவர்கள் வாழ்விலும், தாழ்விலும் பங்கு கொண்டு, பணியாற்றி, அங்கு வாழ் மக்களின் மதிப்பையும் பாராட்டையும் ஒருவர் பெறுகிறார் என்றால் அவரது தாய்நாட்டில் உள்ள ஒவ்வொருவர் உள்ளமும் பெருமிதம் கொள்ளத் தான் செய்கிறது.

மலேயாவில் மிகவும் முக்கியமான பத்திரிகையான தமிழ் நேசன் சென்ற நாற்பதாண்டுகளுக்கு மேலாக மலேயா வாழ் மக்களுக்கு அருந் தொண்டாற்றி வருகிறது. அதன் ஆசிரியராகத் தற்சமயம் பணியாற்றி வருபவர் திரு முருகு சுப்பிரமணியம். தமிழ் நாட்டில் குமரன், பொன்னி முதலிய பத்திரிகைகளில் பணியாற்றிவிட்டு, மலேயா சென்று இந்தப் பொறுப்பை ஏற்றுத் திறம்படப் பணி புரிந்து வருகிறார். அத்துடன் மலேசியா பிரஜா வுரிமை பெற்று அந்நாட்டுப் பிரஜையாகவே ஒன்றி விட்டார். அவரது சீரிய பணியைப் பாராட்டி, மலேசிய மன்னர் மாட்சிமை தங்கிய யாங்—டி—பெர்த்துவான் அகோங் அவர்கள் தமது 61வது பிறந்த நாளை யொட்டி, ஜூன் 5ந்தேதி முருகு சுப்பிரமணியம் அவர்களுக்கு "அஹ்லி மங்கு நெகாரா" என்ற விருதினை வழங்கிக் கௌரவித்திருக்கிறார். இனி திரு முருகு சுப்பிரமணியனை அவரது பெயரின் கடைசியில், ஏ. எம். என். என்ற எழுத்துக்களையும் சேர்த்துக் கௌரவமாக விளிக்கலாம்.



திரு முருகு சுப்பிரமணியன்

# ராஜாஜியின் கருத்துக்கள்

சேரிகளில் வரிசையாக அடுத்தடுத்துத் தீப் பற்றிக் கொண்டதை விபத்து என்று கூறி விட முடியாது. தமிழக அரசாங்கத்துக்கு ஒரு தர்மசங்கடமான நிலைமையை உருவாக்குவதுடன் அதற்கு அதிகப்படியான செலவையும் புதிய சிக்கல்களையும் ஏற்படுத்தும் நோக்கத்துடன் சிலர் திட்டமிட்டுத் தீ வைக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது தெளிவு. இந்தத் தீ வைக்கும் திட்டத்தின் அரசியல் தலைமை மிகத் திறம்படப் போலீஸாரால் கண்டுபிடிக்க முடியாத படி பின்னணியிலிருந்து செயல்படுகிறது. இந்தத் தலைமை இல்லை என்றால், இது வெறும் சமூக விரோதிகளின் செயல்தான் என்றால் இந்தத் திட்டத்தினால் சமூக விரோதிகள் அடையும் லாபம் என்ன? தீ வைப்பதுடன் கூட, கொள்ளை யடிப்பதும் இருந்திருந்தால் இவை அரசியல் கலப்பற்ற குற்றங்கள் என முடிவு கட்டலாம். இத்தனை தீப்பிடித்தலும் எதேச்சையாக நேர்ந்தவையாக இருக்க முடியாது; மூளை பிசகியவர்கள் எந்த விதமான உள் நோக்கமும் இல்லாமல் இழைத்த கொடுமையாகவும் இருக்க முடியாது.

ஃஃஃ

சேரிகள் பிரச்னைக்கு நீண்ட காலத் தீர்வு காண வேண்டுமானால் நகர்ப்புறங்களுக்கு மக்கள் வந்து சேரிகளில் குடியேறுவதன் காரணங்களை ஆராய வேண்டும். நகரில் சேரிகளில் வாழ்வோர் என்ன விதமான வேலைகளில் ஈடுபடுகிறார்கள் என்பதையும் கவனிக்க வேண்டும்.

பிரச்னைக்குத் தீர்வு காண்பதானால் என்னைப் பொறுத்தவரையில் நகரில் தோட்டத்துடன் கூடிய பங்களாக்களில் வசிப்பவர்கள் எல்லாரும் தோட்டத்துக்குள் ஒரு பகுதியில் சிறு வீடு அமைத்து அதனைத் தங்களிடம் வேலை செய்வோருக்குக் குடியிருப்பாகத் தர வேண்டும் என்பேன். பங்களாக்களில் வேலை செய்வோர் சேரிகளில் வாழ்வதை இதன் மூலம் தவிர்க்கலாம். இத்திட்டம் கொள்கை அளவில் ஒப்புக் கொள்ளப்படுமானால் காலதாமதம் அதிகமின்றியும் அதிகச் சிரமமின்றியும் அமுலாக்கப்படலாம். தொழிலகங்களில் வேலை பார்ப்போருக்குக் குடியிருப்புக்கள் அமைத்துத் தருவதென்பது வேறு தன்மையானது; அந்தப் பிரச்னையைத் தனித்து அணுகித் தீர்வு காண வேண்டும். ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரி, சேரியில் வாழ்வோரில் பெரும்பான்மையினர் நகரில் உயர்தர, மத்தியதர வகுப்பினரின் இல்லங்களில் வேலை பார்ப்பவர்களே. ஆகவே நகரில் வீடு கட்டிக் கொள்வோருக்கு நான் மேலே குறிப்பிட்டது போல் ஒரு நிபந்தனை விதிப்பது நியாயமே.

ஃஃஃ

''யூ. எஸ். நியூஸ் அண்டு வோர்ல்ட் ரிப்போர்ட்'' என்ற பத்திரிகை பின்வருமாறு நிலைமையைச் சுருக்கமாகக் கூறுகிறது:

சோஷலிஸமே சிறந்த முறை என்று ஸ்காண்டிநேவியாவில் நீண்ட காலமாக நினைக்கப்பட்டு வந்தது. இன்று அந்த எண்ணம் உலுக்கப்பட்டு ஆட்டம் கண்டிருக்கிறது. நார்வே மக்கள் சோஷலிஸ பாணித் திட்டங்களை எதிர்த்து மூன்றாண்டுகளுக்கு முன் வோட்டளித்தார்கள். அதனால் நல்ல பலன்களைப் பெற்றார்கள். இப்போது நார்வேயின் அண்டை ராஜ்யங்களும் இவ்விஷயத்தில் நார்வேயைப் பின்பற்றத் தொடங்கியுள்ளன.

ஃஃஃ

அயல் நாடுகளிலிருந்து வரும் மதப் பிரசாரகர்களைச் சமாளிக்க வழி, அவர்களைத் திருப்பி அனுப்புமாறோ அல்லது அவர்கள் வருவதற்குத் தடை விதிக்குமாறோ கிளர்ச்சி செய்வதல்ல. தகுந்த உபாயம், அவர்கள் செய்யும் சேவையைப் போல் போட்டி போட்டுக்கொண்டு சேவை புரிவதும் நல்ல ஹிந்து வாழ்க்கை முறையை அனுசரித்து உதாரண புருஷர்களாக விளங்குவதுமே.

அமெரிக்காவில் ஒரு மதப் பிரசார ஸ்தாபனம் நன்கொடைகள் கோரி அங்கு விடுத்துள்ள ஓர் அறிக்கையை அண்மையில் நான் பார்த்தேன். இந்தியாவில் வறுமையாலும் பசியாலும் வாடும் குழந்தைகளைக் கிறிஸ்துவ அனாதையாசிரமங்களுக்குக் கொணர்ந்துசேர்க்கும் பணியில் ஈடுபட மதப் பிரசாரகர்களை அனுப்பி வைக்க அந்த ஸ்தாபனம் தயாராக இருப்பதாக அறிக்கை கூறியது.

இது கோபத்தைத் தருவிக்கலாம். ஆனால் பிரச்னையைச் சமாளிப்பது எப்படி? கிறிஸ்தவப் பிரசாரகர்களுக்குத் தடை விதிப்பதல்ல. ஹிந்து அனாதை ஆசிரமங்கள் ஏற்படுத்துவதே வழி. வீடு வாசலின்றிப் பசியால் வருந்தும் சிறுவர் சிறுமியருக்கு உணவும், ஹிந்து முறையில் எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டு நல்ல விதமாக வளர வசதியும் கொண்ட ஹிந்து அனாதை ஆசிரமங்கள் தேவை. நாம் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாது போனால் அந்த வெற்றிடத்தை நிரப்ப வேறு மனிதர்கள் வருவார்கள். அவர்கள் தங்களுக்கு எதில் நம்பிக்கை உள்ளதோ, எந்தவிதமாகச் செயல்பட வேண்டும் என்று அவர்களைக் காப்பவன் விதித்தானோ அதன்படி செயல்படுவார்கள். ராமகிருஷ்ண மிஷன் வழிகாட்டியிருக்கிறது. ஆனால் நல்ல ஹிந்துக்கள் மேற்கொள்ளவேண்டிய இன்னும் எத்தனையோ பணிகள் இருக்கின்றன. அயல் நாட்டு மதப் பிரசாரகர்கள் செய்யும் காரியங்கள் ஹிந்துக்களின் மனச்சாட்சியைக் கிளறித் தியாகத்தில் அவர்களை ஈடுபடுத்தட்டும்.

ஃஃஃ

கைத்தறி நெசவுத் தொழிலின் பெரிய கேந்திர ஸ்தானமான சேலத்தில் ஸ்ரீ வி. வி. கிரி, ஆலைகளுடன் போட்டிபோட நேர்ந்

தாலும் கைத்தறி வாழும் என்று நெசவாளர்களுக்கு உறுதி அளித்தார். இதற்கான காரணங்கள், கைத்தறித் துணியின் நீடித்த உழைப்பு, கவர்ச்சி, துணி முழுவதிலும் காணப்படும் ஒரே சீரானதரம் ஆகியவையே என்ருர். அவர் கடைசியாகக் கூறிய காரணம் முக்கியமாக வலியுறுத்தப்பட வேண்டிய விஷயமாகும். ஏனெனில் கைத்தறி நெசவாளர்கள் இதற்கு அதிக மதிப்புத் தராமல் வேலையை மிச்சப்படுத்தவும், தயாரான துணியை மார்க்கெட்டில் தள்ளிவிடவுமே சிரத்தை காட்டுகிருர்கள்.

முன்னுட்களில் அனுபவம் வாய்ந்த தனி நபர்கள் வியாபாரிகளாக இருந்தார்கள். கைத்தறியாளர்களிடமிருந்து துணியை வாங்கும்போது ஒரே சீரான தரம் கொண்டதாக இருக்கிறதா என்று பார்ப்பதில் திறமை மிக்கவர்களாக விளங்கினர்கள். அவர்களது இந்த ஆற்றல் கைத்தறி நெசவாளர்களைத் திறம்படச் செயலாற்றுகிற விதத்தில் கண்காணித்து வந்தது. ஆனல் இப்போதெல்லாம் கூட்டுறவு ஸ்தாபனங்களே கைத்தறி நெசவாளர்களின் துணிகளை வாங்குகின்றன. இவை போதுமான ஆற்றல் உடையவர்களால் நிர்வகிக்கப்படவில்லை. தரக் குறைவான சரக்கை ஏற்றுக் கொள்வதில் லஞ்ச ஊழல் எளிதாகப் புகுந்து கொள்ளுகிறது.

மத்திய அரசு கைத்தறிக்கென்று சில துணி வகைகளை ஒதுக்குவதன் மூலம் நெசவாளர்களுக்குக் காப்பளிக்க முன்வரவில்லை.

ஆலைகளில் நிர்வாகத்தினருக்கும் ஊழியருக்கும் இடையே நிலவும் புகைச்சலே அதன் பலவீனம். இந்தப் பலவீனம் குடிசைத் தொழிலான கைத்தறியில் இல்லை. இதுவே கைத்தறி நெசவாளியின் பலமும் வீரியமும் ஆகும்.

ஃஃஃ

இந்தியாவில் இப்போது மிகவும் சிக்கலான தன்மை கொண்ட ஒரு நெருக்கடி நிலைமை உள்ளது. இதனைச் சமாளிக்க வேண்டுமாயின் அது அரசியல் நிர்ணயச் சட்டம் இடம் கொடாத ஒரு சர்க்காரை ஆட்சியில் அமர்த்துவதன் மூலமே சாத்தியமாகும். அரசியல் சட்டத்தில் உள்ள இந்தக் குறைபாடு ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணரையும் மற்றும் சிலரையும் திணற அடித்து வருகிறது. இவர்கள் அதிகாரப் பசியற்ற அறிஞர்களின் சர்க்கார் இன்றைய இந்தியாவுக்கு அவசரத் தேவை என்பதை உணர்ந்திருக்கிருர்கள். இதற்கு மாருக இன்று தனி ஒரு கட்சியின் ஆட்சியாயினும் சரி, கூட்டாட்சியாயினும் சரி, அதிகார ஆசை ஆட்சியில் உள்ளோரை ஆட்டிப் படைத்து வருகிறது.

மேற்கு ஜெர்மானிய அதிபர் சமீபத்தில் அந்நாட்டின் பாராளு மன்றத்தில் பேசும் போது அவசர காலச் சட்டங்கள் ஜனநாயகத்துக்கு விரோதிகளாகா வென்றும் ஜனநாயகத்தைக் காப்பதற்கே கூட அவை தேவைப்படும் என்றும் கூறினர்.

இந்தியாவில் பாராளுமன்றத்தில் ஓர் அவசரச் சட்டம் கொண்டு வரலாம். இச்சட்டம் கட்சிச் சார்பற்ற அறிஞர்களின் குழு ஒன்று ஆட்சிப் பொறுப்பை ஏற்க வசதியாக இன்றைய சர்க்கார் ராஜிநாமாச் செய்ய வழி வகுக்கலாம்.

கட்சிகளைச் சேர்ந்த அரசியல்வாதிகள் நெருப்புக் கோழி போல் முகத்தை மண்ணுக்குள் புதைத்துக் கொண்டு இந்தியாவில் நிலவும் இன்றைய நெருக்கடி நிலைமையைக் காணத் தவறலாம். ஆனல் கட்சிச் சார்பற்ற அறிஞர்கள் அடங்கிய தேசிய அரசாங்கம் இன்றைய நெருக்கடியை உணர்ந்து அதைச் சமாளிக்க நடவடிக்கைகள் எடுக்கும்.

கேரளாவில் ஸ்ரீ நம்பூதிரிபாடு புதிய அரசியல் நிர்ணய சபை தோன்ற வேண்டும் என்கிருர். இன்றைய பாராளுமன்றமே தன்னை அரசியல் நிர்ணய சபையாக அமைத்துக்கொண்டு நான் கூறுகிற அவசர காலச் சட்டத்தை நிறைவேற்றலாம். ஆனல் இதற்கு முதற் படியாகப் பாராளுமன்ற அங்கத்தினர்கள் தங்கள் கட்சிச் சார்புகளை மறந்து விட்டுத் தேசம் முழுமைக்காகவும் சிந்திக்கவும் செயலாற்றவும் முன்வர வேண்டும்.

ஃஃஃ

அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் உடன்படிக்கையில் இந்தியா கையெழுத்திட மறுத்து வருகிறது. அணு ஆயுதங்களைத் தயாரிக்காத நாடுகளுக்குக் காப்பு அளிக்கப்படும் என்று உத்தரவாதம் அளிக்கும் அம்சம் உடன்படிக்கையில் சேர்க்கப்பட்ட பின்னரும் கூட இந்தியா இதில் கையெழுத்திடவில்லை. இந்த உத்தரவாதம் பட்சபாதமானது என்று இந்தியா வாதாடுவது அபத்தமாகும். இந்தியா இதில் கையெழுத்துப் போடாததால் உலகுக்கு ஒரு நஷ்டமுமில்லை.

ஆக்கிரமிப்பாளராகக் கருதப்படும் நாட்டின் மீது எதிர்த் தாக்குதல் நடத்துவதன் தன்மையை இந்தியா உணரத் தவறி விட்டது. அணு ஆயுதங்கள் தயாரிக்காத நாட்டினருக்கு இந்த ஒரு காப்பினைத்தான் தர முடியும். அணு ஆயுதங்களைப் பிரயோகிக்க விடாமல் ஒரு நாட்டினைத் தடுப்பதென்பது கையிருப்பிலுள்ள ஆயுதங்களைப் பயன்படுத்தாமலே நடக்கிற காரியம்.

இந்த விஷயத்தில் இந்தியா ஞான சூன்யத்தைக் காண்பித்துக் கொண்டது மிகவும் விசனிக்க வேண்டியதாகும். அணு ஆயுதங்கள் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவது இந்தியாவின் கடமையாகும். அத்துடன் இப்போதுள்ள அணு ஆயுதங்களைக் கழற்றிப் பிரித்து ஒழிப்பதற்கும் மறுபடியும் தயாரிப்பதைத் தடுப்பதற்கும் ஓர் இயக்கத்தை இந்தியா ஆரம்பிக்க வேண்டும். இந்தியாவின் இப்போதைய கொள்கை நல்ல நண்பர் கூட்டத்தை விட்டுப் பிரிந்து போகச் செய்யத்தான் உதவும்.

# நீங்கள் பெறும் சம்பாத்தியம் போல விலை கொடுங்கள்

## 25 சத விகிதம் தாழ்ந்த விலைத் தொகை மட்டும் கொடுத்து இப்பொழுதே

## ஹிந்துஸ்தான் J6 7½ டன்னர் டிரக் ஒன்று நீங்கள் பெற முடியும்

## பாக்கித் தொகையினை 24லிருந்து 30 குறைந்த மாதத் தவணையாக அளிக்கலாம்




உடனே அருகாமையில் இருக்கும் உங்கள் ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் டீலர்கள் மூலம் ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் கார்ப்பொரேஷன் லிட்., டைத் தொடர்பு கொள்ளுங்கள்

ஹிந்துஸ்தான் J6 7½ டன்னர் டிரக்ஸ்

உங்களுக்கு அதிகமான சுமையை ஏற்றிக் கொள்ளவும்.

அதிகமான லாபத்தையும் தருகின்றது. மேலும் டிரக்குகளில் மிகவும் குறைந்த விலை டிரக் இது என்பதையும் நினைவில் கொள்ளவும்.

J6 என்பது

- இறக்குமதி செய்யப்பெற்ற சக்தி வாய்ந்த புதிய பெட்போர்ட் டீசல் என்ஜின் (5420 c.c. 330 cu. in) கொண்டு 112 H. P. (SAE) சக்தியை அதிகரிக்கச் செய்வது.
- கனமான முன் அச்சு 3728 கிலோ கிராம் எடை கொண்டதும் (8200 பவுண்டுகள்), பின் அச்சு 8182 கிலோ கிராம் (18000) பவுண்டுகள் எடையும் கொண்டது.
- பாதுகாப்பு செர்வோ - அஸிஸ்டெட் காற்று அமுக்க ப்ரேக்குகள் கொண்டது.

G. V. W. 1100 கிலோ கிராம் (24250) பவுண்டு கள்
W. B. 3.94 m. (155") 4.24 (167") 4.55 m. (179")

**HM** ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட், கல்கத்தா

இந்தியா முழுவதும் டீலர்கள் உள்ளனர்

# அமெரிக்கத் தமிழர்

'தோடி' ராகம் என்றால் என்ன என்று தெரியாதவர்களும், ராமாயண காவியத்தின் அடிப்படை கூடத் தெரியாதவர்களும் வெளி நாடுகளிலிருந்து பாரதத்தின் தென் பகுதிக்கு வந்து பெரிய பெரிய உத்தியோகங்களில் ஈடு பட்டிருந்த காலம் ஒன்று உண்டு. ஆனால் தென்னிந்திய கலாசாரத்தினூடே மனத்தைப் புகுத்தி ரசித்து அதன் தன்மைகளை உணர்ந்து கொண்ட வெளிநாட்டார்களில் இவர் தலையானவர். இத்தகைய ஒரு ரசிகரை நம்மிடையே அமெரிக்கா அனுப்பி வைத்திருக்கிறது.

—பிரதம நீதிபதி அனந்தநாராயணன்

பூர்வ ஜன்ம ஞானம் என்பதை விஞ்ஞான ரீதியாக ஆராய்ச்சி செய்யும் காலம் இது. இவர் பூர்வ ஜன்மத்தில் இந்தியராகத்தான் இருந்திருக்க வேண்டும். அதனால்தான் நம் கலாசாரங்கள் மீதும் மொழிகள் மீதும் இவருக்கு இத்தனை பற்றுதல். இவர் இப்போது தாயகத்திலிருந்து வெளிநாடு செல்லவிருக்கிறார் என்றுதான் நான் சொல்லுவேன்.

—ஸ்ரீமதி ருக்மிணிதேவி

நாம் இதுவரை பார்த்திராத எத்தனையோ கோவில், குளங்களை ஒன்றுகூட விடாமல் பார்த்து ரசித்தவர். அவைகளின் கலை நுட்பங்களிலே மனத்தைப் பறி கொடுத்தவர். ஒரு சராசரித் தமிழனை விடக் கூடுதலாகவே கோவில்களைத் தேடிப் போயிருப்பவர். அன்பு, அனுசரித்துப் போதல் என்ற இரண்டு பதங்களுக்குமே இலக்கணமாக நம்மிடையே வாழ்ந்து வருகிறவர்.

—திரு சித்ரா நாராயணசாமி

சாதாரணமானவராக இருந்திருந்தால் இவர் விடைபெறுவது நம்மைப் பாதித்திருக்காது. ஆனால் அறிவாலும், அன்பாலும் தமிழிலேயே பேசிப் பழகியும் நம் அபிமானத்துக்குப் பாத்திரமாகி விட்டிருப்பதால் இவரை வழியனுப்புவது வேதனை தருகிறது.

—ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம்

நம் சார்பில், இந்தியர்களின் சிறந்த நண்பன் என்ற முறையில் நம் பிரதிநிதியாக அமெரிக்கா போகிறார் இவர்.

—திரு கே. சந்தானம்

சென்னை நகரின் மிகச் சிறந்த நண்பர்.

—திரு எஸ். பார்த்தசாரதி ஐயங்கார்.

பிறரைப் புரிந்து கொள்வதிலும், பிறரால் எளிதில் புரிந்துகொள்ளப்படுவதிலும் மிகச் சமர்த்தர். —திரு டி. எஸ். ராமஸ்வாமி ஐயர்

ஃ ஃ ஃ

மேலே குறிப்பிட்ட இத்தனை பாராட்டுக்களையும் ஏககாலத்தில் ஒரே மேடையில் பெற்று உயர்ந்து நிற்கும் நபர் யார் என்று உங்களால் ஊகிக்க முடிகிறதா?

கடந்த ஐந்து ஆண்டுகளாக அமெரிக்க கான்ஸல் ஜெனரலாகச் சென்னையில் பணியாற்றிவிட்டு இப்போது தாயகம் திரும்பி அங்கே, கான்ஸாஸ் ஸ்டேட் சர்வகலாசாலையில் தலைமைப் பொறுப்பை ஏற்க விருக்கும் டாக்டர் ஆல்பெர்ட் பி. ஃபிராங்ளின்தான் இத்தனை புகழ் மாலைகளையும் மயிலாப்பூர் அக்காடமி உறுப்பினர்கள் அளித்த பிரிவுபசார நிகழ்ச்சியில் அணிந்து கொண்டவர்.

மொழி ஆராய்ச்சியில் ஈடுபாடு கொண்ட இவர், தமிழை அழகாகப் பேசக் கற்றுக் கொண்டுவிட்டார். 'ஆனால்', 'அப்பொழுது' 'உங்களை' என்ற பதங்களை யெல்லாம் வெகு லாகவமாக, சந்தர்ப்பத்திற்கேற்ற தொனி

பிரதம நீதிபதியும் அமெரிக்கத் தமிழரும்.



யோடு, ஓசை நயத்தோடு சராசரி தமிழ்க் குடும்பத்தினர் பேசுவது போலவே பேசும் திறமை வாய்ந்தவர். தென்னாட்டுச் சிற்பங்களிலும், கலைகளிலும், இசைகளிலும் மூழ்கி விருப்பவர். ஐந்து ஆண்டுகளாக இடைவிடாது தம் நண்பர்கள் ஜாபிதாவைப் பெருக்கிக் கொண்டிருப்பவர். ஆசனங்கள், யோகம், தியானம் எல்லாவற்றிலும் ஈடுபாடு உள்ளவர். தமிழர் குடும்பங்களில் விருந்தினராக வந்து இலை போட்டுச் சாப்பிட்டு, ரசம் சாதத்தையும், பாயசத்தையும் கையால் அள்ளி அள்ளிச் சாப்பிட்டுச் சுவைப்பதைக் கூடப் பழக்கத்துக்குக் கொண்டு வந்தவர்.

''ஐந்து ஆண்டுகளுக்கு முன் இங்கே வந்த போது, 'தென்னிந்தியர்களுக்கு இசை என்று ஒன்று இருக்கிறதா?' என்ற அசட்டுத்தனமான கேள்வியை என் மனத்திலேயே எழுப்பிக்கொண்டவன் நான். நல்ல வேளையாக இரைந்து யாரிடமும் கேட்டுவிடவில்லை. நாளடைவில் தென்னிந்தியர்களிடம் எத்தனை அற்புதமான இசைக் கலை இருக்கிறது என்று தெரிந்து மகிழ்ந்தேன். இங்கே நான் பழகிய அன்பர்கள் எல்லோருமே எனக்குப் பேராசிரியர்களாகத்தான் விளங்கினார்கள்'' என்று மனம் விட்டுப் பேசும் துணிவு கொண்டவர் டாக்டர் ஃபிராங்ளின்.

நண்பர்களிடம் விடைபெறுவதோடு நிற்கவில்லை டாக்டர் ஃபிராங்ளின். ஹைதராபாத்போய், அங்கு தங்கியிருக்கும் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்களிடமும் விடைபெற்றிருக்கிறார்.

தென்னாட்டவர்களின் அன்பையெல்லாம் சுமந்துகொண்டு அமெரிக்கா திரும்பவிருக்கும் டாக்டர் ஃபிராங்ளினுக்கும் அவர் மனைவியாருக்கும், என்றும் சென்னையின் நினைவு இருக்குமென்று நம்புவோமாக.

— பட்டினத்தார்

---

## போக்கிஷம்!

வியாபாரத் துறையில் ஈடுபட்டிருக்கும் தாரமங்கலம் தர்மராஜன், மளிகைக் கடையில் இருக்கும் எதையும் விற்கத் தயார் — விலை மதிக்க முடியாத ஒரே ஒரு பொக்கிஷத்தைத் தவிர. பெருமிதத்துடன் அவர் பாதுகாக்கும் அந்தப் பொக்கிஷம் ராபர்ட் கென்னடியின் புகைப்படம் ஒன்று.

அண்மையில் கொடியவனின் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியான ராபர்ட் கென்னடி தமது கையெழுத்திட்டுத் தாரமங்கலம் திரு டி. கே. தர்மராஜனுக்கு அனுப்பிய புகைப்படத்தையே அருகில் காண்கிறீர்கள்.



கென்னடி குடும்பத்தினரிடம் வேறு பல்லாயிரக் கணக்கானவர்கள்போல் அளப்பரிய ஈடுபாடு கொண்டிருந்த தர்மராஜன் பேசாமலிருக்காது ராபர்ட்டுக்குக் கடிதம் எழுதி, சகோதரரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அவரும் ஜனாதிபதியாக வரவேண்டும் என்று வாழ்த்தினார்! அத்துடன் ஒரு புகைப்படமும் அனுப்பி வைக்கும்படி கோரியிருந்தார்.

நான்கு வாரங்களுக்குப் பிறகு ராபர்ட் கென்னடியின் கையெழுத்துடன் புகைப்படம் வந்து சேர்ந்தது. அதைப் பெற்றுக் கொண்டதும் தர்மராஜனுக்கு ஏற்பட்டது மகிழ்ச்சியா? வியப்பா?

''மகிழ்ச்சிதான்! படம் வராமல் இருந்திருந்தால்தான் வியப்படைந்திருப்பேன்'' என்கிறார் தர்மராஜன்.



# என் தம்பி

என்னதான் ஜமீந்தார்களை ஒழித்துவிட்டாலும், அவர்களைத் திரை உலகிலிருந்து ஒரு நாளும் ஒழிக்க முடியாது. அதற்கு நம் படாதிபதிகள் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டார்கள்.

இந்தப் படத்தில் ஒரு சாதாரணக் கதையை: எவ்வளவு முடியுமோ அவ்வளவு நீட்டியிருக்கிருர்கள்! நீரைக் கண்டால் பயந்து நடுங்கும் கண்ணன் — நீந்தத் தெரியாதவன் — ஏறி விரையும் விசைப் படகு பாறையில் மோதித் தூளான பிறகு அவன் பிழைத்து வருவது நம்ப முடியாததென்ருல், அதன்பிறகு அவனை அவன் வீட்டைச் சேர்ந்தவர்களே வேறு யாரோ என முடிவு செய்து வெளியே அனுப்புவது அதைவிட நம்பமுடியாத விஷயம்.

ஓட்டைத் தொன்னையில் பானகம் அருந்துவது போன்ற கதையில் புதுமையான அம்சம் ஜமீன்தார் கலகலவென்று சிரித்துக்கொண்டே உயிரை விடுவதுதான்! அந்த இடம் நன்ருக இருக்கிறது.

கும்கும்மைக் கேட்டு அலுத்த காதுகள் கத்திச் சண்டையின் கணகண ஒலியை வரவேற்கின்றன.

விகடமாக வரும் பாலாஜி நன்ருய் நடித்திருக்கிருர். உணர்ச்சி பொங்கும் பேச்சு, மிடுக்கான நடை, குரூரமான பார்வை எல்லாமாகச் சேர்ந்து அவரை வில்லனுகவே மாற்றி விட்டன. சபாஷ் பாலாஜி!

வழக்கம் போல் நடிகர் திலகத்துக்கு ஆடவும், பாடவும், கத்திச் சண்டை போடவும், கண்ணீர் விடவும், காதலிக்கவும், இரட்டை வேடம் போடவும், தம்பியைத் திருத்தவும், நிறையச் சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. உயிரை விட்டுக்கொண்டிருக்கும் கதைக்குக் 'கொராமின்' ஊசி போடுகிருர் சிவாஜி தமது திறமையான நடிப்பின் மூலம். தெருக்கூத்து மேடை நடிகனுக வரும் கட்டங்கள் பிரமாதம்! பேச்சு, நடை, உடை, பாவனை எல்லாமே தனிப்பட்ட முறையில் பாராட்டத் தூண்டுகின்றன. இதற்கொன்றும் காப்பிரைட் கிடையாதுதான் என்ருலும் கள்வனின் காதலி நாடகத்தில் திரு டி. கே. ஷண்முகம் சதாரம் வேஷம் போட்டு ஆடிய அந்த நாளை நினைவுகூருகிறோம்.

சரோஜாதேவி தம் திறமையை வெளிப்படுத்தக் கதையில் வாய்ப்பில்லாதது பெருங் குறை.

படத்தில் ரசிக்க வேண்டிய விஷயம் நகைச்சுவைக் காட்சிகள். நாகேஷ், மாதவி, வி. கே. ராமசாமி எல்லாருமாகச் சேர்ந்து என்னவெல்லாமோ செய்து அரும்பாடுபட்டு ரசிகர்களைச் சிரிக்க வைக்கப் பார்க்கிருர்கள். பலன் பூஜ்யம். நாகேஷும், வி. கே. ராமசாமியும் ஸ்நானத்தொட்டியில் விளையாடுவது நகைச்சுவை அல்ல; ஆபாசம்.

பேபி ரோஜா ரமணி நன்ருய் நடிக்கிருள்.

"என் தம்பி" இதுவரையில் நாம் பார்க்காத தம்பியல்ல. கெட்ட தம்பியை நல்ல தம்பியாக்க முயன்ற அண்ணனும் நமக்குப் புதியவனல்ல. ஜமீந்தார் குடும்பத்தின் உயில் விவகாரமும் நமக்குப் புதியதல்ல. மொத்தத்தில், 'என் தம்பி' ஆறின கஞ்சி; பழங் கஞ்சி!

# துப்பாக்கி நிழலில்



ராபர்ட் கென்னடியின் பின்னோடு எப்போதுமே நிழல் போல் இரண்டு மெய்க்காவலர்கள் இருந்தார்கள். அவர்களையும் மீறித்தான் நடந்து விட்டது துயரச் சம்பவம். ராபர்ட் கென்னடி சுடப்பட்டு இறந்தார். மெய்க்காவலர்களின் பணி எவ்வளவு சிரமமானது என்பதை உணர்த்துகிறது இக்கட்டுரை.





— கதிர் —

ஜனாதிபதி ஜான்ஸனைப் பயமுறுத்தி மாதம் 1500 கடிதங்களுக்குக் குறையாமல் வருவதாக அங்குள்ள உயர்தரப் பாதுகாப்பு அதிகாரி திரு பாக்மன் சமீபத்தில் கூறியுள்ளார்! இம்மாதிரி ஒரு சூழ்நிலையில், அமெரிக்கத் தலைவர்களையும், மற்றப் பிரபலஸ்தர்களையும் அவர்கள் எப்படியெல்லாம் பாதுகாத்து வருகிறார்கள் என்ற விவரங்களைக் கேட்டால் அவை பிரமிப்பூட்டுவதாயிருக்கும். ஜனாதிபதி ஜான்ஸன் சமீபத்தில் சிறுகுடல் சிகிச்சைக்காக மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட போது யாருக்கும் தெரியாமல் இரண்டு இரகசியப் பாதுகாவலர்கள் திரு ஜான்ஸனைப் பாதுகாத்து வந்தார்கள். ரண சிகித்ஸை செய்யும் டாக்டர்களைப் போன்று நீள அங்கியும், முகத்துக்கு மூடியும் தரித்திருந்ததால், அவர்களை யாரும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லையாம்!

திரு ட்ருமன் ஜனாதிபதியாக இருந்தபோது பாதுகாப்புத்துறை அதிகாரி ஒருவர் அவருடன் ப்ளோரிடாவுக்குச் சென்றார். அங்கு கடலில் நீராடிக் கொண்டிருந்த ட்ருமனைச் சுறா இனத்தைச் சேர்ந்த பெரிய மீன் ஒன்று தாக்கவிருந்தது. நல்ல காலமாக, அவரை நிழல்போல் தொடர்ந்து வந்து கொண்டிருந்த பாதுகாப்பு அதிகாரியின் கண்களில் இந்த மீன் பட்டுவிட்டது. அவ்வளவுதான்; உடனே தண்ணீரில் அந்த அதிகாரி, ட்ருமனுக்கும் மீனுக்கும் இடையே தம்முயிரையும் பொருட்படுத்தாமல் தாவினார். அந்த ராட்சஸ மீனுடன் கடும் போராட்டம் செய்து அதை விரட்டியடித்து, ட்ருமனின் உயிரைக் காப்பாற்றினார்!

ஒரு சமயம் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் தமது பேத்தி பார்பாராவின் பாதுகாப்புக்காக இரு இரகசிய அதிகாரிகளை வர்ஜீனியா மாகாணத்துக்கு அனுப்பி வைத்தார். வர்ஜீனியாவில் அலிகெனி என்ற இடத்தில் சாரணப் பெண்கள் நடத்திய கேளிக்கை வைபவம் ஒன்றில் பார்பாராவும் கலந்து கொள்ளச் சென்றிருந்தார். செவ்விந்தியர்கள் அதிகமாக வாழும் இடம் அது. செவ்விந்தியப் பெண்களும் அதிகமாக அந்த விழாவில் கலந்து கொள்ள வந்திருந்தனர். அந்த இந்தியர் வழக்கப்படி இரவு, பெரிய தீ மூட்டி, அதைச் சுற்றி நடனம் ஆடி வந்தனர். அவர்களுடன் பார்பாராவும் கலந்து கொள்ளவேண்டியிருந்தது. ஆண்கள் இந்த நடன நிகழ்ச்சியைக் காண அனுமதிக்கப்படவில்லை. எனினும், பார்பாராவின் உயிரைப் பாதுகாக்கத் தாங்கள், பெண்களைப் போல் வேடம் தரித்து ஸ்திரீகள் கூட்டத்தில் வளைய வந்து கொண்டிருந்ததாகவும், சில சமயங்களில் தப்பும் தவறுமாக நடனமாடியதாகவும் அந்த இரு அதிகாரிகளும் கூறினார்கள்!

பிரிட்டிஷ் பிரதமராக விளங்கிய சர்ச்சில் பாதுகாப்பாளர்களைக் கண்டால் எரிந்து விழுவாராம். 1943ல் திரு சர்ச்சில் தலைமையில் கெய்ரோ மகாநாடு நடந்து கொண்டிருக்கிறது. அந்த மகாநாட்டுக்கு ஜனாதிபதி ரூஸ்வெல்டும் வந்திருக்கிறார். இரவு திரு ரூஸ்வெல்டுக்குப் பிரிட்டிஷ் பிரதமர் விருந்தளித்தாராம். விருந்து அறையில் வெறும் உடையில் பாதுகாப்பு அதிகாரிகள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் யார் என்று கேட்டார், சர்ச்சில் தமது காரியதரிசியிடம். அவர்கள் இரகசியப் பாதுகாப்பு அதிகாரிகள் என்று அவர் பதில் கூறியதுதான் தாமதம், ''சேச்சே! கட்டடத்தை விட்டு



வெளியே போகச் சொல்லு!'' என்று கர்ஜித்தாராம் சர்ச்சில். இரகசியப் போலீஸ் அதிகாரிகள் விருந்து அறையை விட்டு வெளியே சென்று விட்டனர். ஆனால், கட்டடத்துக்கு வெளியே சென்று விடவில்லை. பக்கத்திலேயே ஒரு கதவுக்கு அருகே விருந்து முடியும் வரையில் நின்று கொண்டிருந்தார்களாம்!

அதே கெய்ரோ நகரில் தமக்குப் பாதுகாப்பு உதவி எதுவும் தேவையில்லை என்று உதறித் தள்ளியதன் விளைவாக ஒரு பிரபல மந்திரி தமது உயிரை இழந்த சம்பவமும் நடந்ததுண்டு. 1944ல் பிரிட்டிஷ் வெளி விவகார மந்திரி திரு மாய்னே வந்திருந்தார். அப்போது யூதர்களுக்கும் அராபியருக்கும் நெருக்கடி வலுத்திருந்த நேரம். யூதர்களுக்குப் பாதகமாகப் பிரிட்டன் நடந்து கொண்டதென்று அரசியல்வாதிகளில் ஒருசாரார் ஆத்திரம் அடைந்திருந்தனர். திரு மாய்னேயின் உயிரைப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தை அதிகாரிகள் வற்புறுத்தியும் அவர் கேட்கவில்லை. தமக்குப் பாதுகாப்பு எதுவும் தேவையில்லை என்றும், இவையெல்லாம் வீண் ஆடம்பரம், பண விரயம் என்றும்





கடிந்து கொண்டார். தமது வாசஸ்தலத்திலிருந்த பாதுகாப்பாளர்களையெல்லாம் தாமே வெளியேற்றினார். அதன்பிறகு நான்கு மணி நேரம்கூட ஆகவில்லை. ! ஆத்திரம் அடைந்த யூதன் ஒருவன் மறைந்திருந்து சுட்டதில் திரு மாய்னே உயிர் துறக்க வேண்டியதாயிற்று.

இளவரசி மார்கரெட்டும் ஆர்ம்ஸ்டிராங்கும் சந்தித்துக் கொண்டபோதெல்லாம், காதலி – காதலன் இருவரும் ஒரு முகம் அடிக்கடி தென்படுவதைக் கண்டார்கள். 'காதலனுக்கு வேண்டிய நண்பர் போலும்!' என்று அவரைப் பார்த்துக் காதலி நினைத்துக் கொண்டாள். காதலியின் உறவினன் போலும் என்று காதலன் அந்த மனிதரைப் பார்க்கும்போதெல்லாம் நினைத்துக் கொண்டார். அவர் ஓர் இரகசியப் பாதுகாப்பாளர் என்பது பிறகுதான் வெளியாயிற்று - பத்திரிகை நிருபர்களின் சாகஸத்தால்!

பாதுகாப்பாளர்கள் பணிக்கு நன்கு சாப்பிடத் தெரிந்தவர்களும் வேண்டும். ரஷ்யப் பிரதமர் குருஷேவ் 1956ல் பிரிட்டனுக்கு வந்திருந்த போது அவர் எப்போது எங்கு சாப்பிட வந்தாலும் ஏற்கனவே உணவை ருசி பார்த்து விஷம் கலக்கப்படவில்லை என்று அவரது இரகசியப் பாதுகாவலர்கள் நிச்சயப்படுத்திக் கொண்டார்கள். குருஷேவுக்கு முன்னதாக அவர் உணவு வகைகளை ருசி பார்த்துப் பார்த்தே இரு பாதுகாவலர்களும் ஓரேயடியாகப் பருத்துவிட்டார்களாம்!

ஆதாரம்: வீக் எண்ட்



# அறுவடைக்கு ஓர் இயந்திரம்



மாங்காடு கிராமம். நெல் அறுவடைக் குரிய இயந்திரத்தை மணலி ராமகிருஷ்ண முதலியார் பண்ணை நிலத்தில் டிராக்டர் அண்ட் பார்ம் எக்யுப்மெண்ட் ஸ்தாபனத் தினர் இயக்கிக் காட்ட ஏற்பாடு செய்திருந் தனர். ஆந்திரா, சென்னையில் உள்ள பெரும் நிலக்கிழார்களும், சிறிய நிலச் சொந்தக் காரர்களும், சர்க்கார் உணவு அதிகாரிகளும் இதைக் காண வந்திருந்தனர். நிலத்தில் அறுவடை இயந்திரம் இயங்க ஆரம்பித்ததும் எல்லோரும் காலில் செருப்போடும் பூட்ஸோ டும் நிலத்தில் இறங்கிச் சென்று பார்த்தனர். மணலி ராமகிருஷ்ண முதலியார் காலில் செருப்பில்லாமல் நிலத்தில் கால் வைத்தார்.

''என்ன? செருப்பில்லாமல் நிலத்தில் இறங்குகிறீர்கள் ?'' என்று ஒரு நண்பர் வியப்புடன் கேட்டார்.

''எனக்கு வாழ்வளிக்கும் நில அன்னை மீது செருப்போடு நடக்கலாமா?'' என்று கேட்ட படியே பயபக்தியோடு நிலத்தில் இறங்கினார்.

ஃ ஃ ஃ

டிராக்டர் மீது அமர்ந்து ஆழ உழும் இயந்திரத்தை இயக்கிக் காண்பித்தார் 'டாஃபே' ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஒருவர். பிறகு கார் பயிர் செழித்திருந்த நிலத்தில் மாஸே பெர்குஸன் அறுவடை இயந்திரம் இயங்கத் தொடங்கியது. நெல் கதிர்களை உடையாமல் பிரித்தெடுத்து, வைக்கோலைப் பின்னால் வெட்டித் தள்ளியது. இந்த அறுவடை இயந்திரத்தை இயக்க ஒருவரே தேவை. அறுவடை செய்த நெல்லை ஒரு 'டாங்கி'யில் சேர்த்து விடுகிறது. பிறகு பக் கத்தில் டிராலியில் உள்ள சாக்கில் தானிய மணிகள் குழாய் வழியாக வந்து விழுகிறது.

ஃ ஃ ஃ

'' இந்த அறுவடை இயந்திரம் என்ன விலையிருக்கும்?''

''ஓர் இயந்திரம் இறக்குமதியாவதற்குச் சுமார் 70,000 ரூபாய் ஆகிறது. இது அதிகம் என்று தோன்றினால் நாலைந்து மிராசுதார்கள் கூட்டாக ஓர் இயந்திரத்தை வாங்கலாம். வருஷத்தில் 1200 மணி நேரம் இந்த இயந் திரம் இயங்கும் '' என்றார் டாஃபே மார்க் கெட்டிங் அதிகாரி.

''ஒரு மிராசுதார் இதை வாங்கிவிட்டால் பிறகு 1200 மணி நேரம் இதற்கு வேலை இருக்க வேண்டுமே? நில உச்ச வரம்புச் சட்டம் இதற்கு இடம் கொடாதே?''

''அந்த மிராசுதார் தம் நிலத்தில் அறு வடையான பிறகு மற்றவர் நிலங்களை அறு வடை செய்ய இதை வாடகைக்குக் கொடுத்து லாபம் ஈட்டலாம்!''

''நல்ல யோசனை; ஆனால் இப்படியெல்லாம் இயந்திரங்களை விவசாயத்தில் புகுத்தினால் வேலை வாய்ப்புக்களை இழக்கும் விவசாயிகள் என்ன செய்வார்கள்?''

''இன்று அறுவடையின்போது ஆட்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது என்பது பல மிராசுதார்கள் அநுபவத்தில் காணும் உண்மை. அப்படிப்பட்ட இடங்களில் இதைப் பயன்படுத்தலாம். சிறிய நிலப் பரப்புக்களே கொண்ட நமது நாட்டுக்கு ஏற்ற சிறிய அறுவடை இயந்திரம் இது.''

''இந்த இயந்திரம் நெல அறுவடை செய்ய மட்டும்தானா பயன்படும்? சோளம் கோதுமைப் பயிர்களையும் அறுவடை செய்ய ஏற்றதாக அமைந்தால்தானே நல்லது?'' என்று ஒரு நிலச் சொந்தக்காரர் வினவினார்.

''கோதுமை, சோளம், ஆகியவை அறுக்க இந்த மாஸே பெர்குஸன் அறுவடை இயந் திரத்தில் அதனதற்குரிய சாதனத்தைப் பொருத்தி அறுவடை செய்யலாம்!'' என்று விளக்கம் செய்தார் டாஃபே அதிகாரி.

''ஸார்! இந்த நெல் அறுவடை இயந் திரத்தை அதிகச் சேற்றுப் பாங்கான பகுதி களில் பயன்படுத்த முடியுமா?'' என்று தஞ்சை நிலக்கிழார் ஒருவர் கேட்டார்.

''சேற்றுப்பாங்கான பூமியானாலும் உயர மான வரப்புக்கள் உள்ள நிலங்களானாலும் இதனைப் பயன்படுத்தலாம். அதற்கேற்ற அமைப்புக்கள் கொண்டதுதான் இந்த அறு வடை இயந்திரம். இந்தியாவில் உள்ள சூழ்நிலைகளுக்கு மிகவும் ஏற்றது.''

இந்த இயந்திரத்தை இப்போது இந்தி யாவில் தயாரிக்கவில்லை. மேற்கு ஜெர்மனியி லிருந்து இறக்குமதி செய்ய அரசாங்கம் டாஃபே ஸ்தாபனத்தினரை அனுமதித் திருக்கிறது.



# இலங்கைக் காட்சி.11

இலங்கையின் ஆதிகுடிகள் சிங்களவர்களா, தமிழர்களா என்ற கேள்விக்குறியை எழுப்பும் பழைமையான இந்த அற்புதச் சிலை வடிவம் அழிந்துபோன பொலநறுவைப் பட்டணத்தில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

இலங்கையைப் புனருத்தாரணம் செய்த பராக்கிரமபாகுவின் சிலைதான் எனச் சிங்களவர்களும், அல்ல இலங்கையில் தமிழ் நாகரிகத்துக்கு வித்திட்ட புலஸ்திய மாமுனிவர் சிலைதான் எனத் தமிழர்களும் சொல்கிறார்கள்.

ஒரு காலத்தில் மகோன்னத நாகரிகத்தில் திளைத்திருந்த சிங்கள ராஜ்யத்தின் தலைநகராக இருந்த பொலநறுவை, புலஸ்தியர் நகராகப் பழங்காலத்தில் சிறப்புற்று விளங்கியது என வேறு சில சான்றோர்கள் சொல்கிறார்கள்.

எது எப்படியிருப்பினும் கதிர்காமக் கந்தன் எப்படிச் சிங்களவர்களுக்கும் தமிழர்களுக்கும் பொதுவாக இருக்கிறாரோ அதுபோல் இந்தச் சிலையும் பொதுவாக இருக்கிறது. இதன் காலத்தை நிர்ணயிக்க நவீன ஆராய்ச்சி சாதனங்களுடன் பரீட்சித்துப் பார்க்கும் துணிவு யாருக்காகிலும் இருக்குமா? இருக்காது என நம்புகிறோம்.

— கே. வி. எஸ். மோகன்

# உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்!

ஸ்ரீமதி ருக்மிணி தேவியை ஒரு சிறந்த பரதநாட்டிய நிபுணராகத்தான் பலர் அறிவார்கள். அவருக்கு ''பிராணி மித்ர'' என்ற கௌரவத்தை ராஷ்டிரபதி வழங்கியபோது ''இவருக்கு இந்த விருது எப்படிப் பொருந்தும்?'' என்று பலர் ஆச்சரியப்பட்டிருப்பார்கள். ஆனால் அவர் பிராணி நலனுக்காகச் செய்துள்ள சேவையைப் பற்றி அறிந்தவர்களோ நாட்டியக் கலையை விடப் பிராணி நலனுக்குத்தான் அவர் அதிக முக்கியத்துவம் அளிக்கிறார் என்பார்கள். ருக்மிணி [illegible] யைப் பொறுத்தவரையில் பிராணி நலன் வேறு, கலை வேறு என்பதில்லை. இரக்கமில்லாத ஒருவர் கலைஞராக இருக்க முடியாது என்பது அவர் கருத்து.

வாயில்லாப் பிராணிகளிடம் ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்கு உள்ள பரிவைத் தெய்வ பக்தியோடு ஒப்பிடலாம். பிரும்மஞான மகாநாடு ஒன்றில் இளம் பிரும்மஞானிகளுக்கு அவர் நிகழ்த்திய உரையில் பிராணிகளைத் தாம் எவ்வளவு உயர்வாக மதிக்கிறார் என்பதை வெளியிட்டார். ''எப்பொழுதாவது நான் இந்தியப் பார்லிமெண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதாக இருந்தால் மனிதர்களால் தேர்ந்தெடுக்கப்படுவதை விட வனவிலங்குகளால் தேர்ந்தெடுக்கப்படுவதையே விரும்புகிறேன். நிர்க்கதியான விலங்குகளின் சார்பில் பார்லிமெண்டில் பரிந்து பேசுவதை விடப் பெரிய பாக்கியம் வேறொன்றும் கிடைக்க முடியாது'' என்று ஸ்ரீமதி ருக்மிணி தேவி கூறினார்.

அவர் இந்தச் சொற்பொழிவை நிகழ்த்தியது 1939ம் வருஷத்தில். வியத்தகு விதத்தில் அவரது எண்ணம் நிறைவேறியது.



அன்புச் சிறைக்குள்ளே அருமைப் பூனை.

ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்குப் பிடித்தமான ஒரு காட்சி.



ராஜ்ய சபைக்கு 1952ல் ஸ்ரீமதி ருக்மிணி தேவி நியமிக்கப்பட்டார். மிருகங்களால் அவர் தேர்ந்தெடுக்கப்படா விட்டாலும் பிராணிகளுக்கு அவர் அதுவரையில் செய்திருந்த சேவைகளுக்காகவும், இனி செய்ய வேண்டிய சேவைகளுக்காகவும் அவர் ராஜ்ய சபை அங்கத்தினராக நியமிக்கப்பட்டார்.

சுமார் பத்து வருஷ காலம் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்து, பிராணி நலனுக்காக ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஆற்றிய தொண்டு இணையற்றது. ஜீவகாருண்யச் சட்டம் இயற்

றப்பட்டதற்கும், பிராணி நல போர்டு தோன்றியதற்கும் ஸ்ரீமதி ருக்மிணி தேவியே காரணம்.

''பிராணி நல வேலையில் ஒரு பெரிய இடையூறு உண்டென்றால் அது மனிதன்தான்; மனிதன் தன் சுயநலத்துக்காகப் பிராணிகளை ஹிம்சிப்பதைக் காணும்போது மனித ஜாதி முழுவதன் மீதுமே வெறுப்பு ஏற்படுகிறது'' என்கிறார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி. ஆனால் வெறுப்பதன்மூலம் மட்டும் மனித இனத்தைச் சீர்திருத்தி விடமுடியாது என்பதும் அவருக்குத் தெரியும். ''பிராணி நல சேவையில் எல்லாவற்றைக் காட்டிலும் மிகப் பெரிய எதிரி பிடிவாதம் என்பதை நான் அறிவேன்; இந்தச் சேவையில் ஈடுபடுவோர், பிராணிகளுக்குக் கொடுமை செய்பவர்களை வெறுக்காமல், கொடுமையை மட்டும் வெறுக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்'' என்றும் அவரே கூறியிருக்கிறார்.

நினைவு தெரிந்த நாள் முதலாகவே துன்பப்படும் பிராணிகளைக் கண்டு ஸ்ரீமதி ருக்மிணிதேவியின் மனம்நெகிழ்வது வழக்கம். இதில் உயர்ந்த பிராணி, தாழ்ந்த பிராணி என்ற பாகுபாடே அவருக்குக் கிடையாது.



''வாயில்லா ஜீவன்களிடம் நீங்கள் காட்டிய அன்புக்கு நன்றி !''



ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் தோட்டத்தில் கழுதைக்கும் இடமுண்டு !

கே.எம்.ரங்கசாமி

இன்னும் சொல்லப் போனால், பிராணிகள் எவ்வளவுக்கெவ்வளவு தாழ்ந்தவை என்று சாதாரண மக்களால் கருதப்படுகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு அவற்றினிடம் ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்குப் பரிவு அதிகம். எந்தப் பிராணியாவது அடிபட்டு அநாதையாக விழுந்து கிடந்தால் அதைக் கொண்டு வந்து சிகிச்சை செய்து வளர்க்கத் தொடங்கிவிடுவார். அப்படி அவர் தோட்டத்தில் ஆடு, மாடு, மயில், குயில், குருவி, அணில், கழுதை முதலிய பல ஜந்துக்கள் வளர்ந்திருக்கின்றன.

அப்படி வளர்ந்தவற்றில், ''தனகோடி'' என்ற ஆடு மரணத்தின் வாயிலிருந்தே தப்பி, ருக்மிணிதேவியிடம் அடைக்கலம் புகுந்தது. அது, கோயில்களில் மிருக பலி சட்டபூர்வமாகத் தடை செய்யப்படாத காலம். அப்பொழுது பலியை எதிர்த்து ஸ்ரீமதி ருக்மிணி தேவியும் அவருடைய சகாக்களும் தீவிரமாகப் பிரசாரம் செய்து வந்தனர். இந்தத் துறையில் அவருக்கு உதவி செய்து வந்த ஸ்ரீமதி பத்மாஸனி, பெஸண்ட் பள்ளி ஆசிரியர் ஸ்ரீ ஏ. கிருஷ்ணசாமி அய்யர் முதலியோர் பெரிய பாளையத்து அம்மன் கோயிலில் பிரசாரம் செய்யச் சென்றனர். அங்கு ஒருவர் ஓர் ஆட்டைப் பலியிடுவதற்காகக் கொண்டு

அட்டைப்படத்தில்: மானுக்கு அன்புடன் உணவளித்து உபசரிக்கும் நங்கையை வண்ணப் படமெடுத்து அனுப்பியவர்: ஸ்ரீ வரதன்.

வந்த பொழுது, அதைக் கொல்ல வேண்டா மென்று அவர்கள் மன்றாடிக் கேட்டுக் கொண்டனர். வந்தவருக்கு, தெய்வ குற்றம் வந்துவிடுமே என்ற பயம் ஒரு புறம்; தொண்டர்களின் வாதம் சரியானதே என்ற உணர்வு ஒருபுறம்; இவை இரண்டுக்கு மிடையே மிருந்த சங்கடப்பட்டுக் கடைசியில் ஒன்று சொன்னார் : ''சரி, இந்த ஆட்டைப் பலியிடாமல் விட்டுவிடுகிறேன்; அதனால் அம்மனுக்குப் பிரார்த்தனை செலுத்தத் தவறிய பாவத்தை ஏற்றுக் கொள்ள நீங்கள் தயாரா?'' என்று கேட்டார். தொண்டர்களுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. ஓர் உயிரைக் காப்பதற்காக எந்தப் பாவத்தையும் ஏற்க அவர்கள் தயாராக இருந்தனர். ஆட்டின் சொந்தக்காரர் தம் பாவத்தை அவர்களிடம் ஒப்படைப்பதற்கு அடையாளமாக அந்த ஆட்டையே அவர்களிடம் கொடுத்து விட்டார். பலித் தடைப் பிரசாரத்துக்கு வெறுங் கையுடன் போன தொண்டர்கள் ஆட்டுடன் திரும்பி வந்தனர். அந்த ஆடு ஸ்ரீமதி ருக்மிணிதேவியின் சரணாலயத்தில் நெடுநாட்கள் வாழ்ந்து வந்தது. ஆட்டின் சொந்தக்காரரான தனகோடி என்பவரின் பெயரையே அந்த ஆட்டுக்கும் வைத்து அழைத்து வந்தனர்.

இதே போல் அடையாற்றில் இருந்த இரு மாடுகள் கசாப்புக் கடைக்கு விற்கப் பட்ட பொழுது, அவற்றுக்கு அந்தக் கடைக்காரன் கொடுத்த பணத்தைவிட ஐம்பது ரூபாய் அதிகம் கொடுத்துத் திரும்ப வாங்கி வந்து காப்பாற்றினார். சமீபத்தில் அவர் கோயமுத்தூரில் ஒரு சொற்பொழிவாற்றுவதற்காகச் சென்றிருந்த பொழுது, வழியில் ஒரு கழுதை அடிபட்டு வீழ்ந்து கவனிப்பாரற்றுக் கிடப்பதைக் கண்டார். சொற்பொழிவுக்கு நேரமாவதைக்கூடப் பொருட்படுத்தாமல், அங்கு ஜீவரக்ஷக சங்கம் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து அதன் மூலம் அந்தக் கழுதையின் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்து விட்டுத்தான் மறு வேலை பார்த்தார்.

ஸ்ரீமதி ருக்மிணிதேவி ரயிலில் பிரயாணம் செய்யும்பொழுது வண்டி நிற்கும் ஸ்டேஷன்களில் உணவுப் பொட்டலங்கள் வாங்கி, அங்கு உள்ள நாய்களுக்கு உணவளிப்பது வழக்கம்.

ஸ்ரீமதி ருக்மிணிதேவியின் வாழ்க்கைத் தத்துவமே பிராணிகளுக்கு உதவி செய்வது தான் என்றால் பொருந்தும். ''வேறு எந்த வேலையிலிருந்து ஓய்வு பெற்றாலும், பிராணி நல வேலையிலிருந்து மட்டும் என்னால் ஓய்வு பெறவே முடியாது'' என்று அவர் ஓரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

**உயிர்களிடத்தில் அன்பு வேணும்–தெய்வம்**
**உண்மையென்று தானறிதல் வேணும்**

- பாரதியார்

---

## பந்து எங்கே?

ஆம், ஃபுட்பால்தான் ஆடுகிறார்கள்! இத்தனை கோணலும் நெளிவும் சுளிவும் எல்லாம் பந்தை உதைக்கத்தான். ஆனால் அந்தப் பந்து எங்கே இருக்கிறது? பேனாவை எடுத்துப் பந்து இருக்கும் இடத்தை ஒரு வட்டத்தால் குறிக்கவும். நீங்கள் சரியான இடத்தில்தான் வரைந்திருக்கிறீர்களா என்பதை 40ம் பக்கம் பார்த்து முடிவு செய்யவும்.



# உங்களுக்கான குளுமையான நறுமணத்தின் "முத்திரை"

# எக்லா உன்னதமான புதிய டால்க்



நிரந்தரமான நறுமணம்...எக்லாவின் புத்துணர்ச்சி அளிக்கும் உயர்ந்த தன்மை: உபயோகித்துப் பாருங்கள்: இதன் ஆனந்தமான புத்துணர்ச்சி உங்கள் உடம்பு முழுவதும் பரவி இருப்பதை உணருங்கள். இது தான் குளுமையான நறுமணத்தின் முத்திரை. நாள் முழுவதும் நீங்கள் நிகரற்ற அழகுடன் விளங்க தயாரிக்கப்பட்டது. இன்றே எக்லா வாங்குங்கள். தினமும் உபயோகியுங்கள்.




கால்கேட்டின் உன்னதமான தயாரிப்பு.

EC.G.4.TAM




## 37. பீமனும் ஹனுமானும்

"அருச்சுனன் இல்லாமல் இந்தக் காம்யக வனம் எனக்கு அழகாகவே காணப்படவில்லை. சவ்யாசாயியைக் காணாமல் எனக்குச் சந்தோஷமில்லை" என்று அடிக்கடி திரௌபதி சொல்லி வந்தாள்.

திவ்யாஸ்திரங்களைப் பெறுவதற்காக அருச்சுனன் இமயமலையில் தவம் செய்து கொண்டிருந்த காலத்தில் அந்தப் பிரிவைப் பொறுக்க முடியாமல் பாண்டவர்களுக்கும் பாஞ்சாலிக்கும் வனவாசம் மிக்க கஷ்டமாக இருந்தது.

பாஞ்சாலியைப் பார்த்துப் பீமசேனன், "கல்யாணி! நீ அருச்சுனனை நினைத்துச் சொல்லும் சொற்கள் என் உள்ளத்தில் அமிர்தம் போல் ஆனந்தமாய்ப் பாய்கின்றன. தம்பியைக் காணாத என் கண்களுக்கும் இந்த அழகிய வனம் ஒளியிழந்து இருட்டாகக் காணப்படுகிறது. பல்குனனைப்* பாராமல் என் மனத்தில் அமைதி இல்லை. எல்லாத் திசைகளும் இருட்டில் மூடப்பட்டது போல் தோன்றுகிறது. சகாதேவா, உனக்கு எப்படி இருக்கிறது?" என்றான்.

"அண்ணனில்லாத இந்த ஆசிரமம் சூனியமாக இருக்கிறது. இந்த இடத்தை விட்டு வேறு எங்கேயாவது போய் அவனை மறக்கப் பார்க்கலாம்" என்றான் சகாதேவன்.

யுதிஷ்டிரன், புரோகிதர் தௌம்மியரைப் பார்த்து, "அஸ்திரங்களைப் பெறுவதற்காகத் தம்பியைத் தேசாந்திரம் அனுப்பினேன். வீரனும் சமர்த்தனுமான அவன் இன்னும் திரும்பவில்லை. பீஷ்ம துரோணர்களையும், கிருபரையும், அசுவத்தாமரையும் ஜெயிக்கக்கூடிய அஸ்திரங்களைத் தேவராஜனிட

* பல்குனன் - அருச்சுனன்.

மிருந்து அடைவதற்காக அவனை இமய மலைக்கு அனுப்பினோம். பீஷ்மரும், துரோணரும், கிருபரும் திருதராஷ்டிர புத்திரர்களின் பட்சத்தில் நின்று யுத்தம் செய்வார்கள் என்பது நிச்சயம். கர்ணனும் திவ்விய அஸ்திரங்களை அறிந்த மகாரதன். அவன் அருச்சுனனுடன் போர் புரிவதில் அதிக விருப்பம் கொண்டவன். அர்ச்சுனன் இந்திரனை நேரில் கண்டு அஸ்திரங்களைப் பெற்று வந்தானேயாகில் இந்த மகாரதர்களை எதிர்த்து வெற்றி பெறலாம் என்று ஆசைப்பட்டு அவனைத் தேசாந்திரம் அனுப்பினேன். மிகவும் கஷ்டமான காரியத்துக்கு அவனை அனுப்பிவிட்டு, நாங்கள் இங்கே சுகமாக இருக்கிறோம். அவன் பிரிவை எங்களால் பொறுக்க முடியவில்லை. அவனோடு இருந்த இந்த இடத்தை விட்டு வேறு எங்கேயாவது போய் அவன் பிரிவை மறக்கப் பார்க்கலாம் என்று எண்ணுகிறேன். போகும்படியான இடங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும்'' என்று புரோகிதரைக் கேட்டான்.

தௌம்மியர் அநேக வனங்களையும் புண்ணிய தீர்த்தங்களையும் பற்றிச் சொன்னார். அந்த இடங்களுக்குச் சென்று அருச்சுனன் பிரிவை ஒருவாறு ஆற்றிக் கொள்ளலாம் என்று எல்லோரும் புறப்பட்டார்கள். பல ஸ்தலங்களுக்குச் சென்று அந்த இடங்களின் புண்ணிய கதைகளைக் கேட்டுக் கொண்டே பல ஆண்டுகள் கழித்தனர். சில இடங்களில் மலைகள் ஏறியும், காடுகள் தாண்டியும் சிரமம் தாங்காமல் திரௌபதி களைத்து விடுவாள். பீமன் அந்தச் சமயங்களில் எல்லோருக்கும் தைரியமுண்டாகும்படியான சேவை செய்து வந்தான். அவனுக்குத் துணையாகச் சிலசமயம் பீமனுடைய அசுர மனைவியின் மகன் கடோத்கஜனும் வந்து உதவுவான்.

இமயமலைப் பிரதேசத்தில் பல இடங்களைப் பார்த்துக் கொண்டே போனபோது ஓர் இடத்தில் பயங்கரமான காட்டில் பாதை மிகக் கடினமாக இருந்தது. அதைக் கண்டு கவலையுற்ற யுதிஷ்டிரன் பீமசேனனைப் பார்த்து, ''குந்தி நந்தன! திரௌபதி இந்த இடத்தில் நடப்பது கஷ்டம். நானும் நகுலனும் லோமச ரிஷியும் போவோம். நீ சகாதேவனுடன் ஜாக்கிரதையாகத் திரௌபதியைப் பாதுகாத்துக் கொண்டு கங்கா துவாரத்தில் வசித்துக் கொண்டிரு. திரும்பிச் சென்று அந்த இடத்தில் நாங்கள் வரும்வரையில் இருப்பாயாக'' என்றான்.

''மகாராஜாவே! திரௌபதி இதற்கு ஒப்புக்கொள்ள மாட்டாள். அருச்சுனன் ஒருவனுடைய பிரிவே உமக்கு இவ்வளவு வருத்தம் தந்திருக்க, சகாதேவனையும், என்னையும், திரௌபதியையும் பாராமல் நீர் மன வருத்தம் தாங்க மாட்டீர். ராக்ஷஸர்களும் மிருகங்களும் நிறைந்த இந்தக் காட்டில் உம்மைத் தனியாக அனுப்ப நான் ஒருபொழுதும் சம்மதிக்க மாட்டேன். பாஞ்சாலியும் இதற்கு ஒப்பமாட்டாள். அவள் நடக்க முடியாத இடங்களில் நான் அவளைத் தூக்கிச் செல்வேன். நகுல சகாதேவர்களையும் நான் தூக்கிச்



செல்வேன். நீர் அதைப்பற்றிக் கவலை பட வேண்டாம்'' என்றான் பீமசேனன்.

இவ்வாறு தம்பி சொன்னதை கேட்ட தருமபுத்திரன் அவனைக் கட டித் தழுவிக் கொண்டு, ''பீமனே உன்னுடைய தேக பலம் எப்போதும் வளர்ந்து கொண்டே போகக் கடவது'' என்று ஆசீர்வதித்தான்.

பாஞ்சாலி சிரித்துக் கொண்டு தருமராஜனைப் பார்த்து, ''என்னை யாரும் தூக்கிச் செல்ல வேண்டியதில்லை. நான் நடப்பேன். என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்'' என்றாள்.

இமயமலைப் பிராந்தியத்தில் சுபாகுவின் தேசமாகிய குலிந்த நாட்டை அடைந்தார்கள். அவ்விடம் அந்த அரசன் செய்த மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு களைப்பாறினார்கள். அதன் பிறகு மிக ரம்மியமான நாராயணாசிரம வனத்தை அடைந்தார்கள்.. அந்த இடத்தில் சிலநாள் தங்கினார்கள்.

ஒரு நாள் வடகிழக்கிலிருந்து வீசிக் கொண்டிருந்த காற்றில் அடிக்கப்பட்டு ஒரு திவ்வியமான மலர் பாஞ்சாலியிடம் வந்து விழுந்தது. அந்தப் புஷ்பத்தைத் திரௌபதி கையில் எடுத்து அதன் அழகினாலும் வாசனையினாலும் பரவசமானாள்.

''பீமசேனா! இந்த மலரைப் பார். என்ன வாசனை! என்ன அழகு! இதைத் தரும புத்திரனுக்குக் கொடுப்பேன். நீ சென்று இந்த வகையைச் சேர்ந்த இன்னும் சில புஷ்பங்களைப் பறித்துக் கொண்டு வா! நம்முடைய காம்யக வனத்தில் இந்தச் செடியைக் கொண்டு போய் வளர்க்க வேண்டும்'' என்றான். இவ்வாறு பீமனுக்குச் சொல்லிவிட்டுத் திரௌபதி புஷ்பத்துடன் யுதிஷ்டிரனிடம் ஓடினாள்.

காதலி சொன்ன சொல்லால் ஏவப்பட்ட பீமன், அந்த மலர் உண்டான செடியைத் தேடிக் கொண்டு சென்றான். மலரின் வாசனையைக் காற்றில் நுகர்ந்து கொண்டே அந்தத் திக்கில் வெகுதூரம் தனியாகப் போனான். வழியில் அநேக காட்டு மிருகங்களைக் கண்டாலும் லட்சியம் செய்யாமல் சென்றான்.

பருவதத் தாழ்வரையில் ஒரு பெரிய வாழைமரச் சோலையை அடைந்தான். சோலையின் நடுவில் வழியை அடைத்துக்கொண்டு நெருப்பைப் போல் பிரகாசித்துக் கொண்டு ஒரு வானரம் தனிமையாகப் படுத்திருப்பதைக் கண்ட பீமன் தன்னையும் அறியாமல் ஒரு பெரிய சத்தம் போட்டான்.

வானரம், தன் கண்களைச் சிறிது திறந்து அலட்சியமாகப் பீமனைப் பார்த்து, ''எனக்கு உடம்பு சரியாக இல்லை. படுத்திருக்கிறேன். நீ ஏன் என்னை எழுப்புகிறாய்? மனிதனாகிய நீ அறிவு படைத்திருக்கிறாய். விலங்குகளாகிய எங்களுக்குப் பகுத்தறிவு இல்லை. பகுத்தறிவு படைத்திருக்கும் மனிதர்கள் பிராணிகளிடம் கருணை காட்டுவது முறை. உன்னைப் போன்ற புத்திமான்கள் மிருகத்தை இம்சிக்கலாகாது. நீ தருமத்தை அறியவில்லை போலிருக்கிறது. நீ யார்? எங்கே போக வந்திருக்கிறாய்? இம்மலையில் இதற்கு மேல் செல்ல முடியாது. இது தேவலோகத்துக்குச் செல்லும் பாதை. மனிதர்கள் இதைத் தாண்டிப் போக முடியாது. உன் வரவு நல்வரவு ஆகுக. நீ இங்கே பழங்களைப் புசித்துவிட்டுத் திரும்பு. நான் சொல்வதைக் கேள்'' என்றது.

பீமனுக்குக் கோபம் பொங்கிற்று. ''நீ யார்! வானர சரீரத்தை அடைந்து இவ்வளவு பேசுகிறாய். நான் க்ஷத்திரியன். குரு வம்சத்தில் பிறந்த வீரன். குந்தி தேவியின் மகன். வாயு புத்திரன் என்று என்னை அறிவாயாக. என்னைத் தடுக்காதே. வழியை விட்டு விலகு!'' என்றான்.

குரங்கு இந்தப் பேச்சைக் கேட்டுக் கொஞ்சம் புன்சிரிப்புச் செய்து, ''நான் ஒரு குரங்கு. இந்த வழியில் சென்றால் நீ நாசத்தை அடைவாய்'' என்றது.

பீமசேனன், ''வானரமே! நான் நாசமடைந்தாலும் சரி, ஏதானாலும் சரி உன்னை நான் கேட்கவில்லை. எழுந்து வழியை விட்டுப் போ. எனக்குக் கோபம் உண்டாக்க வேண்டாம்'' என்றான்.

''எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. கிழக் குரங்கு. அவசியம் போக வேண்டுமானால் என்னைத் தாண்டிச் செல்வாயாக'' என்றது வானரம்.

''பிராணியைத் தாண்டிச் செல்லலாகாது என்பது சாஸ்திரம். ஆகையால் நான் உன்னைத் தாண்டிச் செல்லவில்லை. இல்லாவிடில் அனுமான் சமுத்திரத்தைத் தாண்டியது போல் உன்னையும் மலையையும் ஒரே பாய்ச்சலாகத் தாவிச் சென்றிருப்பேன்'' என்றான் பீமன்.

''நர சிரேஷ்டனே! கடலைத் தாண்டிய அந்த ஹனுமான் யார்? உனக்குத் தெரிந்தால் சொல்ல வேண்டும்'' என்றது வானரம்.

''ராம பத்தினியைத் தேடுவதற்காக நூறு யோசனை அகலமுள்ள கடலைத் தாண்டியவனும் எனக்கு அண்ணனுமான ஹனுமானை உனக்குத் தெரியாதா? பலத்திலும் நான் அவனுக்குச் சமானமானவனே! ஒரு காரியமாக நான் இங்கே வந்திருக்கிறேன். வழியை விடு. எழுந்திரு. நான் சொன்னதைக் கேளாயாகில் உன்னை யமலோகத்துக்கு அனுப்புவேன்'' என்று பீமன் வானரத்தை அதட்டினான்.

''வீரனே! தோஷமற்றவனே! கோபம் தணிவாயாக! முதுமையால் எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. என்னைத் தாண்டிச் செல்ல உனக்கு ஆட்சேபணை இருந்தால் என் மேல் கருணை கொண்டு இந்த வாலை நகர்த்தி விட்டுச் செல்வாயாக!'' என்றது வானரம்.

தன்னுடைய புஜ பலத்தில் கர்வம் கொண்ட பீமன் இவ்வாறு சொல்லப் பட்டவுடன், ''இந்தக் குரங்கை வாலைப் பிடித்து அப்புறம் தள்ளுவேன்'' என்று எண்ணி அதன் வாலைப் பிடித்தான்.

வாலை அசைப்பதற்கே முடியவில்லை. பீமன் வியப்படைந்தான். இரு கைகளையும் கொண்டு இழுத்துப் பார்த்தான். புருவங்கள் நெறிந்து, விழி பிதுங்கி உடல் வியர்த்தது. வாலைத் தூக்கக் கூட முடியவில்லை. வெட்கப்பட்டுத் தலை குனிந்து நின்றான்.

''நீர் யார்? என்னைப் பொறுக்க வேண்டும். நீர் சித்தரா? தேவரா? கந்தர்வரா? நீர் யார்? சிஷ்யன் கேட்கிறேன்; சரணம்'' என்றான் பீமன். பலவானைக் கண்டால் பீமனுக்கு ஒரே பக்தி.

''தாமரைக் கண்ணனே! பாண்டவ வீரனே! சர்வ லோகங்களுக்கும் பிராண ஆதாரமான வாயுவின் மகன் ஹனுமான் நான்தான். தம்பி, பீமா! யக்ஷரும் ராக்ஷதர்களும் இருக்க இந்த வழியில் நீ சென்றால் ஆபத்துக்கு ஆளாவாய் என்று உன்னை நான் தடுத்தேன். இது தேவலோகம் போகும் வழி. இதில் மனிதர்கள் செல்ல முடியாது. நீ தேடி வந்த சௌகந்திச் செடி இருக்கும் நீரோடையும் மடுவும் அதோ பார்!'' என்றான் ஹனுமான்.

''வானர சிரேஷ்டரே! உம்மைக் கண்டேனுதலால் என்னைக் காட்டிலும் பாக்கியசாலி யாருமில்லை. உம்முடைய கடல் தாண்டிய வடிவத்தைப் பார்க்க ஆசைப்படுகிறேன்'' என்று சொல்லி பீமன் நமஸ்கரித்தான்.

ஹனுமான் நகைத்துத் தன்னுடைய உருவத்தை விருத்தி செய்து கொண்டு இரண்டாவது மலைபோல் திசைகளை வியாபித்து நின்றான். பீமசேனன் இதுவரையில் கேள்விப்பட்டு மட்டும் மகிழ்ந்து வந்த தன் அண்ணனுடைய திவ்ய ரூபத்தை இப்போது நேரில் பார்த்து ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தான். சூரியனைப்போல் ஜ்வலிக்கும் இந்தப் பிரகாசத்தைத் தாங்க முடியாமல் கண்ணை மூடிக்கொண்டான்.

''பீமனே, இதற்கு மேல் வளர்ந்து உனக்குக் காட்ட இது சமயமல்ல. பகைவரின் முன் என் சரீரம் இன்னும் பெரிதாக வளரும்'' என்றான் ஹனுமான்.

பிறகு ஹனுமான் தன் வடிவத்தை முன்போல் குறுக்கிக் கொண்டு பீமசேனனை அன்போடு தழுவிக் கொண்டான். மாருதியால் ஆலிங்கனம் செய்யப்பட்டு, பீமனுடைய சிரமமெல்லாம் நீங்கி அவனுக்கு முன்னை விட அதிக பலம் உண்டாயிற்று என்கிறார் வியாச பகவான்.

''வீரனே! உன் இருப்பிடத்துக்குப் போ! சமயம் நேரும்போது என்னை நினைக்கக் கடவாய். உன்னுடைய மானிட தேகத்தை நான் ஆலிங்கனம் செய்தபோது முன் நாட்களில் ஸ்ரீ ராமனுடைய தேகத்தைத் தீண்டியதுபோல் மகிழ்ச்சியடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்'' என்றான் ஹனுமான்.

''வானர சிரேஷ்டரே! உம்மை நான் கண்டதால் பாண்டவர்கள் எல்லோருமே பாக்கியசாலிகள் ஆனோம். உம்முடைய பலத்தினால் நாங்கள் எல்லாச் சத்துருக்களையும் ஜயிப்போம்'' என்றான் பீமன்.

''நீ யுத்தத்தில் எப்போது சிம்ம நாதம் செய்வாயோ அப்போது என்னுடைய குரலும் உன்னுடைய சத்தத்துடன் சேர்ந்து பகைவர்களை நடுங்கச் செய்யும். உன் தம்பி அருச்சுனனுடைய தேரின் கொடியில் நான் இருப்பேன். உங்களுக்கு வெற்றி உண்டாகும்'' என்று தம்பியை அண்ணனாகிய மாருதி ஆசீர்வதித்தான். பக்கத்தில் நீர் ஓடையில் பீமன் தேடிவந்த சௌகந்தி மலர்களையும் காண்பித்தான்.

அதைக் கண்டதும் வனவாசத்தால் பீடிக்கப்பட்டு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் திரௌபதியிடம் பீமன் மனம் சென்றது. புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு திரும்பி வேகமாகச் சென்றான்.

**(தொடரும்)**

# ஊங்கி என் நண்பன்





1. ''எனக்கு வயதா? அறுபதுக்கு மேல் என்றால் நம்புவீர்களோ? பேரன் பேத்தியுண்டு!''

2. ஊங்கிக் கணவன், மனைவி.

சிரித்தால் கரும் பலகையில் எழுதினாற் போல்தான் இருக்கும். ஆனால் அந்தச் சிரிப்பில் தான் எத்தனை வெள்ளை மனம்; எத்தனை தத்துவம்! அந்தச் சிரிப்பை உதிர்க்கும் ஊங்கி...?

கடலூரிலிருந்து நேர்கிழக்கே சுமார் எண்ணூற்றைம்பது மைல்கள் வங்காள குடாக்கடலைக் கடந்து சென்றால், 'லிட்டில் அந்தமான்' ('Little Andaman') என்னும் அழகிய தீவு உள்ளது. அந்த அந்தமான், தலைநகரான போர்ட்பிளேரிலிருந்து எண்பது மைல் தூரத்தில் தெற்கே உள்ளது.

சின்ன அந்தமான் இதுவரை குடியேறாத தீவு. இயற்கை வளம் பொருந்திய தீவு. மண், விவசாயத்துக்கு மிகவும் ஏற்றது. தீவு முழுவதும் தரை தெரியாமல் காடுகள் நிறைந்துள்ளன. ஓங்கியுயர்ந்த பலவகை மரங்களும், மரங்களைப் பின்னிப் படர்ந்த கொடிகளும் இடைவெளியின்றி முளைத்துக் கிடக்கும் செடிகளும் தரையை எந்தக் காலத்திலும் ஈரமாய் வைத்திருக்கும். இத் தீவின் மரங்கள் கோடிக் கணக்கான விலை மதிப்புப் பெறக் கூடியவை. ஒரு மரம் மட்டும் ஐயாயிரம் ரூபாய் வரையில் விலை போகக் கூடியது!

தீவின் முக்கிய விலங்கு பன்றி. நாட்டுப் பன்றி போல்தான் இருக்கும். பெரிய பெரிய உடும்புகள் நிறைய உள்ளன. பாம்புகள் ஏராளம் உண்டு. பெரும்பாலான பாம்புகள் விஷமற்றவை. பலவகைப் பட்ட பறவைகளும் உண்டு. கிளிகள் ஏராளமாக இருக்கின்றன. காட்டுப் புறாக்களும் உண்டு. ஜேக்ஷன் கிரீக் என்னுமிடத்தில் முதலைகள் இருக்கின்றன. இந்தத் தீவின் கடலோரங்களில் உணவுக்கான பல வகை மீன்கள் ஏராளமாக உண்டு.

இதுவரை குடியேறாத இந்தத் தீவில் இப்போது குடியேற்ற வேலைகள் நடக்க இருக்கின்றன. அதற்கு முதற்படியாகத் துறைமுகம் கட்டப்படுகிறது. துறைமுகம் கட்டப்படும் இடம் ''ஹட்பே'' எனப்படும். இன்னும் சில ஆண்டுகளில் பொன் விளையும் பூமியாய், பூத்துக் குலுங்கும் நகரமாய் வளரப் போகும் இத்தீவின் புகுமுகமாய் உள்ள இந்த 'ஹட்பே' என்னும் இடமே பிரதானமாய் விளங்கும். இப்போது இது 'ஹட்பே காலனி' என அழைக்கப்படுகிறது. துறைமுகம் கட்டும் அதிகாரிகள் (என்ஜினியர்கள்) தொழிலாளிகள் மட்டுமே இப்போது இங்கு குடியிருக்கின்றனர். ''ஜெனரேட்டர்'' மூலமாய் மின் விளக்குகள் போடப்பட்டுள்ளன. இங்கிருந்து 'ஜேக்ஷன் கிரீக், டுவாங் கிரீக்' என்னும் இடங்களுக்கு (தீவின் வெவ்வேறு ஓரங்கள்) நீளமான சாலைகள் போடுவதற்காக ஆரம்ப வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. குடியேற்றத்துக்கும் வியாபாரம் முதலியவற்றுக்கும் உதவக் கூடிய துறைமுகத்தைக் கட்டுவதில் பெரும் பங்கு தமிழர்களுடையது என்னும்போது மகிழ்ச்சி ஏற்படாமல் இருக்க முடியாது!

சின்ன அந்தமானில் அந்தமான் ஆதிவாசிகளில் முக்கியமானவர்களான ஊங்கிகள் வாழ்கிறார்கள். ஆப்பிரிக்க நீக்ரோக்களைப் போல் இருக்கும் அவர்கள் இந்தத் தீவுக்கு எப்படி வந்தார்கள் என்பது மர்மமாக இருக்கிறது.

உயரம் சராசரி ஐந்தடிக்கும் குறைவாக இருக்கும். என்றாலும் ஊங்கிகளின் உடற்கட்டு பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருக்கும். பெண்களின் பின் பகுதி குழந்தைகளைச் சுமந்து செல்வதற்குத் தருத்தாற்போல் அசாதாரண நிலையில் சதைப் பிடிப்பாய் இருக்கும். பெண்கள் ஒருவிதக் கொடியால் ஆன 'துணி'யால் இடுப்பின் முன்பாகத்தை

மட்டும் மறைத்துக் கொள்கிறார்கள். சிறு கோவணம் மட்டுமே ஆண்களின் உடை! ஏறக்குறைய நிர்வாணமாகவே உள்ள அவர்களின் உடலில் ஒருவகை மண்ணைப் பூசி அலங்காரம் செய்து கொள்கிறார்கள். இம்மண் பூச்சு பூச்சிக் கடியிலிருந்து அவர்களைக் காக்கிறது.

ஜங்கிகளின் முக்கிய உணவு பன்றியின் இறைச்சி. குறிப்பாக அதன் நெய், காட்டுக் கிழங்குகள், தாழைப் பழங்கள், தேன், மீன். மீனை வில், அம்பு கொண்டு எய்து பிடிக்கின்றனர். இப்போது 'ஆட்டா'வில் ரொட்டியும் தயார் பண்ணிக் கொள்கிறார்கள். தேநீர் என்றால் அவர்களுக்கு உயிர். இனிப்பென்றும் சுவை என்றும் பார்ப்பதில்லை. 'குடம் குடமாய்த் தேநீர் இருந்தாலே தனி மகிழ்ச்சி!

யாராவது இறந்து விட்டால் பிணத்தை அப்படியே அந்தக் கட்டில் மேடைக்குக் கீழேயே புதைத்துவிட்டு அந்தக் குடிசையைக் காலி செய்து விட்டு வேறு இடத்துக்குச் சென்றுவிடுவார்கள். ஓர் இடத்திலிருந்து மறு இடத்துக்கு மாறிச் செல்லும்போது தீப்பந்தம் ஒன்றையும் கூடவே எடுத்துச் செல்வர். பேய் என்றால் ஜாங்கிகளுக்கு மிகவும் பயம். முதலைகள் என்றாலும் நடுக்கம் தான். காரணம் ஏராளமான ஜாங்கிகள் முதலைகளுக்குப் பலியாகிவிட்டதே!

திருமணம் எளிமையாக மகிழ்ச்சியான சூழ்நிலையில் நடைபெறும். மணமக்களின் கைகளைச் சேர்த்து வைப்பதே திருமணத்தின் முக்கிய நிகழ்ச்சி. தாலி என்று ஒன்று



3. அண்ணன் தம்பிகளோ.....?

4. புகை பிடிக்கவும் கற்றுக் கொண்டார்கள்.



நாலைந்து பேராய்க் கூடிக் குடித்து மகிழ்வார்கள். புகையிலையிலும் அவர்களுக்கு மயக்கம் உண்டு அவர்கள் ''பைப்'' (புகையிலைக் குழாய்) பிடிக்கும் அழகே தனி. பரம்பரையாய்ப் 'பைப்' பிடிக்கும் வெள்ளைக்காரன் கூட அத்தனை அழகாகப் பிடிக்க முடியாது!

ஒரே குடிசையில் ஐந்தாறு குடும்பங்களாகக் கூடி வாழ்வார்கள். காட்டு மூங்கில் குச்சிகளால் கட்டில் போன்று செய்யப்பட்ட சிறு மேடையே அவர்களின் படுக்கை. ஒரு குடும்பத்துக்கு ஒரு மேடையே வீடு எனலாம். குடிசையின் நடுவில் சமைப்பதற்கும் நடனமாடுவதற்கும் பொதுவான ஓர் இடம் உண்டு. இரவில் மேடையின் கீழ் சிறு சிறு மரக் கட்டைகளை அடுக்கிய குவியலில் தீ புகைந்து கொண்டிருக்கும் — அவர்களின் குளிரைப் போக்க!

கிடையாது! மறுமணமும் உண்டு. இளம் வயதிலேயே அதாவது பதினொரு வயதில் கூடத் திருமணங்கள் நடக்கின்றன. ஒரு பெண் அல்லது ஆண் குழந்தைக்குப் பல் முளைத்தவுடன் திருமணத்துக்கான மணமகன் அல்லது மணமகளை நிச்சயித்து விடுகிறார்கள்.

குழந்தை பிறக்கும்போது தாயின் கால்களையும் கைகளையும் ஒரு வகை நாரால் சுற்றிச் சுற்றிக் கட்டிவிடுகின்றனர். இதனால் பிரசவ வேதனை தெரியாது என நம்புகின்றனர். ஜாங்கிகள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்வது வேடிக்கையாக இருக்கும். ஆணாய் இருந்தாலும் பெண்ணாய் இருந்தாலும் ஒருவர் மடிமேல் ஒருவர் அமர்ந்து தழுவிக் கொள்வதே அவர்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்வதாகும். பிரிவு, தூரம் இவை

களுக்குத் தகுந்தாற்போல் அவர்கள் தழுவிக் கொள்ளும் நேரமும் அதிகமாகும்.

ஷாங்கிகளிடமிருந்து மற்றவர்கள் முதலில் எளிதாய்ப் புரிந்து கொள்ளும் வார்த்தைகள் 'நரிமா' (இல்லே), 'நரிமாகி' (இல்லவே-இல்லே), 'கிபோரகா' (நன்றும் இருக்கிறது), 'இபிடிகா' (சரியில்லே) 'அங்கொச்சி' வீட்டுக் காரி), 'ஞானுகா' (குளிர்) போன்றவை. இப்போது அவர்களில் சலர் தமிழிலும் பேசப் பழகிக் கொள்ளுகிறார்கள்.

குடியேற்றத்தை முன்னிட்டு முக்கியத்துவம் வாய்ந்து வரும் சின்ன அந்தமான் தீவுக்கு அடிக்கடி பலவகைப்பட்ட அதிகாரிகள் அலுவலாகவும் சுற்றுப் பயணமாகவும் வந்த படி இருக்கின்றனர். அப்போது அவர்கள் ஷாங்கிகளைப் பார்க்காமல் செல்வதில்லே. அவர்களோடு புகைப்படங்களும் பிடித்துக் கொள்வார்கள். தீவு முழுதும் ஆங்காங்கே வாழும் ஷாங்கிகளுக்கு அரசாங்கம்' பாது காப்பளிக்கிறது. டுவாங்கிரீக் என்னுமிடத் தில் அவர்களுக்கென்று இருநூறு ஏக்கரில் தென்னந் தோப்பு உண்டாக்கித் தரப்பட் டிருக்கிறது. துறைமுக வேலைகளுக்குச் சில ஷாங்கிகளும் சேர்க்கப்பட்டுள்ளனர். அவர்கள் பெரும்பாலும் சாலைகள் போடுவதற்கான வழிகளைக் காண்பதற்குக் காடுகளுக்குள் சென்று வழிகாட்டவே பயன்படுத்தப்படு கின்றனர். சம்பளம் நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய்தான்...!

## விதண்டாவாதம் !




ஷாங்கிகள் நிர்வாணமாய் இருக்கிறார்களே தவிர, மிகவும் மனக் கட்டுப்பாடும் ஒழுக்க மும் நிறைந்தவர்கள். பெண்களிடம் மதிப்பும் மரியாதையும் உள்ளவர்கள். நாகரிக மனிதர் களோடு பழகும் சந்தர்ப்பம் வந்துவிட்ட படியால் இப்போது அவர்களுக்கும் அழ குணர்ச்சி ஏற்படுகிறது. ஆண்களும் பெண் களும் துணிகள் அணிந்துகொள்ள மிகவும் ஆசைப்படுகிறார்கள். எந்த உடையைக் கொடுத்தாலும் அணிந்து கொள்ளுகிறார்கள். ஒருவனிடம் ஒரு சட்டை அல்லது பனியனைக் கொடுத்து அணியச் சொல்லி, ''எப்படி?'' என்று கேட்டால் 'கிபோரகா' என்று சொல் லிக்கொண்டு கிளம்பி விடுவான். ஒரு சட்டை கொடுத்தால் நல்ல தேன் பாட்டில் ஒன்றைத் தருவான். ஹாங்காங், ஜப்பான் பக்கமிருந்து கடலில் மிதந்து வரும் ''போயா'' என்று சொல்லப்படும் பெரிய கண்ணாடி உருண்டை களைக் கொண்டு வந்து கொடுப்பான். கொஞ்சம் தேயிலைப் பொடியும் புகையிலையும் கொடுத்துவிட்டால் போதும். ஆனந்தம் அளவு மீறிவிடத் தனக்குக் கிடைப்பதை யெல்லாம் மகிழ்ச்சியுடன் நமக்குத் தருவான்!

ஷாங்கிகள் பழகுவதற்கு அருமையான வர்கள்; கள்ளம் கபடம் இல்லாதவர்கள்; காட்சிக்கு எளியவர்கள்; பேச்சுக்கு இனிய வர்கள்; சைகைகளில் பேசும்போதுகூடச் சிரிப்புத்தான்! ஷாங்கிகள் எளிதில் நம்பும் தன்மை யுடையவர்கள். நாகரிக மனிதன் கற்றுக் கொள்ள வேண்டிய எத்தனையோ வாழ்க்கைத் தத்துவங்கள் அவர்களிடம் உண்டு. எப்போதும் அவர்களோடு பேச வேண்டும்; பழகவேண்டும்போல் இருக்கும். அவர்கள் எனக்கு மட்டுமல்ல; அவர்களைக் காணும் அனைவருக்குமே மிகவும் எளிதில் நண்பர்களாகி விடுவார்கள்! அந்த நண்பர்கள்-இயற்கை வாழ்வு வாழும் எளியவர்கள்; இனியவர்கள்.

பத்தாண்டுகளுக்கு முன்பு அறுநூறு பேர் களாய் இருந்தவர்கள் இப்போது இரு நூற்றைம்பது பேராய்க் குறைந்துவிட் டார்கள். எல்லோரும் பெருகி வரும் இந்தக் காலத்தில் இந்த அழகிய நண்பர்கள் சுருங்கி வரும் பரிதாபத்தை எண்ணும்போது நான் மட்டுமல்ல, அந்தத் தீவைச் சுற்றியுள்ள கடலனைத்துமே 'சோ' என்ற சோகக் குரலில் அழுது கொண்டிருக்கிறது! - எம்மார்.




இடப் பக்கத்தில் இருக்கும் அதே பெண்மணிதான் வலப் பக்கமும் இருக்கிறார்—அதே புடவை அணிந்து! ஆனால், இந்த அறுபத்தேழு மற்றும் முப்பத்து மூன்று என்னும் புதிர் என்ன?... ஆம், இப்பொழுது புரிந்தது. அந்தப் புதிர்தான் காலி-கட் புடவை. அதில், அறுபத்தேழு சத விகிதம் ஸிந்தெடிக் இழையும், முப்பத்து மூன்று சத விகிதம் பருத்தி நூலும் கலந்திருக்கின்றன. அதனால்-தான், சுகமளிக்கும் குளுமையான காலி-கட் புடவையில் சுருக்கங்கள் விழுவதில்லை! எவ்வளவு எழிலுடன் தோற்ற மளிக்கிறார் பாருங்கள், இந்த காலி—கட் புடவையில்!

# cali—kut

காலி-கட் ஸ்பெஷல் **special**

நெய்யப்பட்ட
கட்-ஒர்க் மற்றும்
தங்க பிரிண்ட்
கொண்ட புடவைகள்



ஓநாய்க் கோட்டை
கதை: வாண்டு மாமா — சித்திரம்: ரமணி..
25
என் பெயர் தாமகேது. நான் கந்தர்வபுரியைச் சேர்ந்தவன். ஓநாய்க் கூட்டத்தாரில் ஒருவனாக அவர்களுக்குக் குற்றேவல் புரியும் தொண்டியாக ஆக்கப் பட்டேன். அவமானம். ஆனால் என் செயல்களுக்கு— உனக்கு நான் செய்த துரோகத்துக்கு எனக்கு இந்தத் தண்டனை குறைவு தான்.
எனக்குத் துரோகமிழைத்தாயா? விளங்கும்படி விவரமாகச் சொல்வாயா?
உன் அருமை மனைவி ரூபமதியைத் தாக்கிக் கொன்று அழித்தவன் நான்தான். நான்தான். ஆனால் அதை நான் விரும்பிச் செய்யவில்லை. அப்படியொரு நீசத்தனமான செயலைச் செய்யும்படி நான் வற்புறுத்தப் பட்டேன். எந்தச் சிம்மவர்மர் உன்னை ஓநாய் மனிதர்களை ஒழிப்பதற்காக அனுப்பினாரோ அவரது நோக்கம் உன்னை ஒழிப்பதுதான். நீ எப்படியும் உயிருடன் திரும்பக் கூடாது என்பதற்காகவே வஜ்ரகீர்த்தியையும் உன்னுடன் அனுப்பினார்...
இப்போதுதான் எனக்கு எல்லாம் விளங்குகிறது.
உன் தந்தையர் விஜயசிம்மரை ஓநாய் மனிதர்களுடன் தொடர்பு கொண்டுள்ள உளவாளி என்று குற்றஞ் சாட்டிக் கொன்றார்கள். ஆனால் உண்மையான உளவாளி, துரோகி, வஜ்ரகீர்த்திதான். என்னை இந்த அவல நிலைக்கு ஆளாக்கியவனும் அவன்தான். அவனைக் கொல்லும் வாய்ப்பை ஆண்டவன் எனக்களித்ததற்காக மகிழ்கிறேன்.
வஜ்ர கீர்த்தி கொல்லப் பட்டானா? உன்னுடனா?
அவன் இறந்ததை விளக்குகிறான் தாமகேது. இவர்களை ஓர் உருவம் பின் தொடர்ந்து வருவதை யாரும் கவனிக்கவில்லை....
பேசியவாறே ஒரு பாழடைந்த கோட்டையினருகே வருகிறார்கள்....
வஜ்ரகீர்த்தியின் கட்டளைப்படி உன் மனைவியைக் கொன்று வந்து ஓநாய்க் கூட்டத்தாரிடம் ஒப்படைத்தேன். ஆனால் என்னை இக்கோலமாக்கி நான் நாடு திரும்ப முடியாமல் செய்ய வேண்டுமென்று ஓநாய்க் கூட்டத்தாருக்கு ரகசியச் செய்தி அனுப்பி இருந்தான் என்பது— எனக்குத் தெரியாது....
என்னைக் கோரமாக்கியதோடு தங்களுக்குக் குற்றேவல் புரியும் தொண்டியாகவும் நடத்தினார்கள். தாங்கள் உண்ட மீதியை என் பசிக்கு என்முன் வீசினார்கள். வஞ்சம் தீர்க்கக் காலம் வரும் என்று காத்திருந்தேன். நீ எப்படியும் உன் மனைவியை மீட்க வருவாய் என்று தெரியும்..
தாமகேது தன் உருக்கமான கதையைக் கூறிக் கொண்டிருக்கும் போது பதுங்கி வந்த மற்றொரு முக்காடிட்ட உருவம் இடிபாடுகளில் மெள்ள ஏறியது. இவர்களை அணுகுவதற்காக....

## 13. தாய்மைத் தத்துவம்

# இனிக்கும் நினைவுகள்



### கோமகள்

விடியற்காலை நேரம். எங்கோ கூவும் குயிலின் இசை. பனிப்பை ஏந்திய மலர்க்கூட்டங்களின் கொள்ளை வாசனை. ராகவன் இரவு உடையைக்கூடக் களையாமல் மாடி வராந்தாவில் எட்டிப் பார்த்தார். லிஸ்ஸி எழுந்ததும் குளித்து விட்டுப் புத்தம் புதிய சலவை ஆடையோடு காரை எடுக்கச் சென்று கொண்டிருந்தாள். நடுவில் மனநோய் பிடித்திருந்தவள், துளசி வீட்டுக்கு வந்ததிலிருந்து பழைய ஆரோக்கியம் திரும்பப் பெற்றவள்போல் இருந்தாள். இல்லாவிட்டால் காரை எடுக்கப் போவாளா?

துளசியின் நினைவு வந்ததும் ராகவன் மல்லிகையும், விருட்சி மலர்களும் வைக்கப்பட்டிருந்த மூலைப் பக்கம் கண்களைச் செலுத்தினார். அங்கே செடியின் கிளைகள் தாழ்ந்தும் உயர்ந்தும் அசைவது தெரிந்தது. உற்று நோக்கியபோது துளசி ஈரத் தலையை நுனி முடிச்சாகப் போட்டுக் கொண்டு அருள் நோக்குத் திரண்ட முகத்துடன் பூப் பறிப்பது தெரிந்தது. அவள் கையிலிருந்த பிளாஸ்டிக் பூக்கூடை நிரம்பி வழிந்தது. ராகவனின் உடம்பெல்லாம் புல்லரித்தது. என்ன பக்தி மயமானவள் இந்தத் துளசி! என்ன அருள் மயமானவள் இந்த மானிடப் பெண்! துளசி பூக்கூடையோடு உள்ளே வந்துவிடவும், ராகவனுக்கு விசித்திரமான ஓர் ஆசை தோன்றியது. இன்று துளசியின் பூஜையில் தாம் கலந்துகொண்டால் என்ன? இத்தனை நாட்களும் விடியற்காலைத் தூக்கத்தில் இலயித்து விடும் அவர் இன்று சீக்கிரம் விழித்து விட்ட பயனைப் பெற்றாற்போல் அவசரமாகக் குளியலறைக்கு ஏகினார்.

வெறும் வேஷ்டி மட்டும் உடுத்திக் கொண்டு வரும் தன் எஜமானனைக் கண்ட பாக்கியம் விந்தையுற்றாள். மேலே வெள்ளை டவல் ஒன்றைப் போர்த்தியவாறே, தலையை இலேசாகச் சீவிக்கொண்டு துளசி பூஜை செய்து கொண்டிருந்த அறைக்குள் சென்றார். விந்தை மலர்ச்சியில் கண்கள் குவிந்தன. அந்தப் பெரிய பங்களாவிலேயே அருள் நிறைந்த அறை அது. அந்த அறை துப்புரவாக்கப்பட்டு, சுவரில் கண்ணன் படமும், முருகன் படமும் மாட்டப்பட்டிருந்தன. அதன் நேர் கீழே ஒரு சிறு மேடை அமைத்து ராமர் படம் வைக்கப்பட்டிருந்தது. மலர்கள் ஆரங்களாகத் தெய்வங்களைத் தழுவி நின்றன. பக்கத்தில் ஒரு கட்டு ஊதுவத்தி மணம் பரப்பியது. அந்த மங்கிய இருட்டில் மெல்லிய சுடரொளி வீசியது அகல் விளக்கு. அந்த வீட்டிலேயே அந்த அறை ஒரு தனி உலகமாக இருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது ராகவனுக்கு. இங்கிதமாகத் தளர்ந்த நிலையில் பத்மாஸனமிட்டு அமர்ந்திருந்தாள் துளசி. அவளது வெளியுலக உணர்வுப் பேரலைகள் உறங்கி உள்ளுக்குள் சேமித்து வைத்திருந்த பக்தியின் அருள் ஜோதியில் ஒன்றிவிட்ட லயம் தெரிந்தது. அந்தச் சூழ்நிலைக்கு அப்படியே கட்டுப்பட்ட மனநிலையில் ராகவன் துளசிக்குப் பின்னால் ஓசையிடாமல் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டார். இப்படி ஒரு பக்திப் பரவசத்தில் அவர் ஈடுபட்டதே கிடையாது.

சிறிது நேர மௌனப் பிரார்த்தனைக்குப் பின் துளசி மெல்லிய குரலெடுத்து இனிமை தோயப் பாட ஆரம்பித்தாள். அவள் பாடிய பக்திப் பாடல் அவரையும் ஆனந்த சாம்ராஜ்யத்துக்கு இட்டுச் சென்றது. கீழே விழுந்து வணங்கிய துளசி, தீர்த்தத்தை அருந்திவிட்டுத் திரும்பினாள்; திடுக்கிட்டாள். இத்தனை நேரமும் எங்கோ லயித்திருந்த மனப் பிரமையில் விழித்தவாறே ராகவனை நோக்கினாள்.

நேர்மையான மந்தகாசம் விரிய ராகவன் அவளை நோக்கி, ''எனக்கும்

தீர்த்தம் கொடு, துளசி'' என்று இடது கைமீது வலது கையைப் படிய வைத்து ஏந்தி நின்றார்.

விம்மிப் புனல் உதிர்க்கத் துடித்த துளசியின் நேத்திரங்கள் தாழ்ந்தன. துளசி தீர்த்தத்தை அவர் கையில் இட்டபோதே அவள் கண் முத்துக்கள் அந்தக் கைகளில் உருண்டு விட்டன. அவளைத் தொட்டுக் கண்ணீர் துடைக்க உரிமை படைத்திருந்தும் அதைச் செய்ய முடியாத தவிப்பில் அவர் உருகினார்.

துளசி அப்படியே தாமரை மலராக அவர் தாளடியில் விழுந்து வணங்கினாள். ராகவன் அவள் கைகளைப் பற்றித் தூக்கிவிட்டார். துளசி கண்களைத் துடைத்துக் கொண்டு, மறுபடியும் அவரது கைகளைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். இந்த ஈடுபாட்டில் கொஞ்ச நேரம் கழிந்திருக்கும். அப்போது முன் வாசலில் கார்வந்து நிற்கும் சத்தம் கேட்டது. துளசி அவர் கைகளை விட்டு விட்டுப் பூஜைக்கென்று வைத்திருந்த மலர் ஆரத்தில் கொஞ்சம் கிள்ளித் தலையில் சூடிக் கொண்டாள். இதற்குள் லிஸ்ஸியே அவ்விடம் வந்து விட்டாள்.

''எனக்கு எங்கே தீர்த்தம்?'' என்று வினவினாள் அவள்.

துளசி புன்சிரிப்போடு தீர்த்தத்தை அவள் கைகளில் இட்டாள். அதைப் பருகியதும் அவள் ராகவனை நோக்கி, ''ஓ! யூ ஆர் ஹியர்? நீங்களும் பூஜையைக் காண வந்தீர்களா?'' என்று கூறினாள் மிகுந்த வியப்புடன்.

''நீங்களும் என்கிறாயே? நீயும் தினமும் இங்கு வந்து தீர்த்தம் சாப்பிடுகிறாயா?'' என்றார் ராகவன்.

''ஓ! தினமும் தீர்த்தம் வாங்கும் நேரம் தவறாமல் வருகிறேனே! நீங்கள்தான் இன்று வந்திருக்கிறீர்கள்!''



திடீரென அந்தச் சூழ்நிலை லில்லியால் கலகலப்புற்றது. அப்போது பாக்கியம் உணவு மேசைமீது பரிமாறிக் கொண்டிருந்தாள். துளசி அகல்விளக்கைச் சுடர் ஆற்றி வந்தாள். மூவரும் உணவு மேசைக்கு வந்து உட்கார்ந்தனர். நடுவில் ராகவன், இரு பக்கமும் லில்லியும் துளசியும் அமர்ந்தனர்.

''உங்கள் மிடுக்கான தோற்றம் நீங்கள் வேட்டி கட்டிக் கொண்டிருப்பதால் குறைந்து விடவில்லை'' என்று விழி வட்டத்தால் கணவனை அளந்து கூறினாள் லில்லி.

துளசி ரகசியமாக நினைத்த ஒன்றை, பழக்கமின்மையால் சொல்ல முடியாமல் தவித்த ஒன்றை, லில்லி அவருடன் இருபதாண்டுகள் வாழ்ந்த பழக்கத்தில் வாய் விட்டுக் கூறினாள். இந்த உரிமை



தரும் பழக்கங்கள், ஒருவருக்கொருவர் மன்றாடும் வாக்கு வாதங்கள், சங்கேதமாகப் புரளும் வார்த்தைகள், ஒருவருக்கொருவர் ஈடுபாடு கொள்ளும் விதத்தில் வேடிக்கையான சர்ச்சைகள் இவைகளில் கலந்து ஒன்ற முடியாத தூரத்தில் நின்று தவித்தாள் துளசி. இதைப்பாராமல் இருந்தபோது அவள் மனத்தில் நிலவி வந்த அமைதி கூடப் பறிபோய்விடுமோ என்ற அச்சம் தோன்றியது. விஸ்வி எடுத்துக்கொள்ளும் இந்த உரிமைகளை யெல்லாம் உதறிவிட்டு, காலத்துக்கு இரையாகி விட்ட உறவின் இறுக்கத்தை எண்ணிய போது கலக்கம் ஏற்பட்டது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ராகவன் முன்பக்கம் இருந்த ஆபீஸ் அறைக்குப் போக ஆயத்தமானார். 'வார்டுரோபி'ன் 'ஸிப்'பை இழுத்து விட்டு உள்ளிருந்து 'ஹாங்க'ரில் தொங்கிய பொடிக் கலர் 'சூட்'டொன்றை எடுத்து அணிந்து கொண்டார். 'டை' கட்டி முடிந்தானதும் தலையை வாரிக் கொண்டு வெளியே வந்தார். கதவோரம் துளசி நிற்பது தெரிந்தது. அவரைக் கண்டதும் அவள் தயங்கிய வாறே உள்ளே நடக்க முயன்றாள்.

''என்ன துளசி?'' அன்பான குரலில் கேட்டார் ராகவன்.

''அக்காவைப் போய்ப் பார்த்து வரலாமில்லையா?''

''பார்த்துவிட்டு வந்துவிடு!''

அழுத்தமான தொனியின் கம்பீரத்துக்குட்பட்டவளாக அவள் எதிர் வீட்டை, இத்தனை நாட்களும் அவளை ஏந்திக் காத்த வீட்டை நோக்கி நடந்தாள். ஆனாலும் புதிதாக ஏதோ ஒரு வீட்டுக்குள் அடியெடுத்து வைக்கும் புதுமைப் பெண்ணாக அவள் மாறித்தான் போய்விட்டிருந்தாள்.

கூடத்தில் விபூதி அணிந்து கொண்டு பூஜைக்கு அமரும் தோற்றத்தில் மீனாட்சிசுந்தரம் கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பலகாரத்தை ஒரு தட்டில் வைத்து எடுத்து வந்த சரஸ்வதி தங்கை துளசியைக் கண்டதும் புது மகிழ்ச்சியூறக் கண்கள் நனைந்தாள்.

''வாம்மா துளசி!'' என்று என்றும் குறையாத கனிவைக் குழைத்துத் துளசியை அழைத்தார் அதிபர் மீனாட்சி சுந்தரம்.

முன் நெற்றியில் இட்டிருந்த குங்குமம் வகிட்டின் முன்னுச்சி நெற்றியிலும் படிந்திருந்தது. துளசி தன் அக்காவின் கணவரின் முன்னே பணிந்தெழுந்தாள். அவள் முகம் முழுதும் பளபளத்த மஞ்சள் வண்ணத்துக்கு இன்று ஒரு புதிய அர்த்தம் கற்பிப்பது போலிருந்தது. பெண்கள் எப்போதுமே அணியும் இந்த மஞ்சளுக்கும் குங்குமத்துக்கும் கணவன் வீட்டில் நுழைந்ததும் ஓர் அர்த்தம் உண்டாகி விடுகிறதே. துளசி இத்தனை ஆண்டுகளை வெறுமனே கழித்தாலும் இப்போது புத்தி வந்து கணவனோடு வாழ்கிறாளே என்று சரஸ்வதி நிம்மதி மூச்சு விட்டாள்.

''நீ செய்த காரியம் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைந்தேன், அம்மா. என் தம்பியின் தவற்றை இத்தனை வருடங்கள் கழித்தேனும் மன்னித்து, அங்கு போயிருக்கிறாய் என்று கேட்க இதமாக இருந்தது.''

''என்னங்க இது? அவள் கும்பிட்டு எழுந்திருக்கிறாள். சீக்கிரமே குழந்தைகளோடு வாழ வேண்டும் என்று ஆசீர்வாதம் பண்ணக் கூடாதா?''

துளசி குனிந்துகொண்டாள். மீனாட்சி சுந்தரம் சிரித்தவாறே, ''இனி உன் தங்கைக்கு ஒரு குறைவும் இன்றி நீ நினைப்பது போல் நன்றாக இருப்பாள்'' என்று கூறிவிட்டுப் பலகாரங்களை எடுத்துச் சாப்பிட வாரம்பித்தார்.

துளசியை அடுக்களைக்குள் அழைத்துச் சென்று சரஸ்வதி அவளுக்கும் பலகாரம் வைத்துச் சாப்பிடச் சொன்னாள். ''ராகவன் கோர்ட்டுக்குக் கிளம்பியாச்சாடி?'' என்று பரிவு பொங்கக் கேட்டாள் சரஸ்வதி.

''இன்னும் இல்லை அக்கா.''

''உம்! அவன்தான் உன்னை எத்தனை தரம் கூப்பிட்டான்? உனக்கு அப்போதெல்லாம் புத்தி வந்ததா? காலா காலத்தில் அது அது நடந்திருந்தால் இன்றைய நிலையே வேறு விதமாக இருந்திருக்கும்'' என்று கடந்த காலக் கசப்பைக் கொஞ்சம் நிகழ்கால இன்பத்துடன் கலந்து நெட்டுயிர்த்தாள்.

துளசி ஈனமாக அக்காவைப் பார்த்தாள். ''அவர்... அவர் என்னை அங்கேயே இருக்கும்படி கூறுகிறார் அக்கா.''

''பின்னே? அங்கேயே இருக்க வேண்டியதுதான். இன்னும்கூடத் தயக்கமா உனக்கு? உன் வைராக்கியம் சாதித்ததெல்லாம் போதும். இனி அவருக்கு அடங்கி, ஒடுங்கி இனியவளாக நடந்து கொள். அடி துளசி! ஒரு பெண்ணுக்குக் கணவனைக் காட்டிலும் வேறு உலகமே இல்லையடி!''

துளசி எதுவும் பேசவில்லை. பலகாரம் சாப்பிட்டு முடிந்ததும் காப்பியைப் பருகினாள். சிறிது நேரம் முன்பு கணவன் வீட்டுச் சாப்பாட்டை ருசித்து வந்திருந்தாலும் அன்னைக்குச் சமமான அக்கா அருமையாகத் தந்தவற்றை அவள் மனமார ரசித்து உண்டாள். சரஸ்வதி,

துளசியின் கூந்தலைப் பிரித்து எண்ணெய் இட்டுச் சீவி, கொண்டை முடிந்தாள். சுவாமி அலமாரியில் படத்துக்குச் சாத்தியிருந்த மலர் ஆரத்தை எடுத்து வட்டமாகக் கொண்டையில் சூட்டினாள். பிறகு இருவரும் ஊஞ்சலில் வந்து உட்கார்ந்தனர்.

ஊஞ்சலின் மெல்லிய ஆட்டத்தில், மன நினைவுகளும் ஆடின. சரஸ்வதி தங்கையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள்.

''துளசி! உனக்கு நேரமாகவில்லை?''

துளசி விந்தையோடு சரஸ்வதியைப் பார்த்தாள்.

இத்தனை வருடங்களும் தங்கையை ஏந்திக் காத்தவள், ஏன் இப்படி விரட்டுகிறாள்? புரிந்தும் புரியாத பாவனையோடு துளசி புறப்பட்டாள்.

ஹால் ஓரத்தில் உட்கார்ந்து தையல் இயந்திரத்தில் லிஸ்ஸி ஏதோ தைத்துக் கொண்டிருந்தாள்.

''என்ன தைக்கிறீர்கள்?'' துளசிக்குத்தான் இப்படிக் கேட்பதே அதிசயமாக இருந்தது. லிஸ்ஸியை நினைக்கும்போது விநோதமான கோபம் வரும் நாளெல்லாம் இப்போது போய்விட்டது. அவளது உயர்ந்த குணத்தையும், வைராக்கியம் என்னும் பெயரால் தன் பிடிவாதத்தையும் எண்ணி மனம் குன்றினாள்.

''என்ன தைக்கிறீர்கள் என்று கேட்டுவிட்டு நீங்கள் சிந்தனையில் லயித்துவிட்டால்? இங்கே என்னைப் பாருங்கள், நான் என்ன தைக்கிறேன் என்பது விளங்கிவிடும்!...''

லிஸ்ஸி துளசியின் மடிமீது ஒரு வெல்வெட் சிவப்புத் துணியை வீசி எறிந்தாள்.

சட்டெனத் துளசியின் கைகளுக்குள் குழைவுற்ற ஒரு சின்னஞ் சிறு சட்டை ஒரு மென்மையான உடலாகி மடியில் தவழும் கனம் தெரிந்தது. அந்தக் கற்பனை பின்னிய ஏக்கத்தில் கொஞ்ச நேரம் லயித்துக் கிடந்தாள் அவள். இத்தனை நாட்களும் இந்தப் பேருணர்வு வீணான வைராக்கியத்தின் ஒரு வெற்றுத் தூணாக நின்றிருந்து ஏமாற்றி விட்டதா?

''என்ன மறுபடியும் சிந்தனை? இதற்குத் தயாராகுங்கள்'' என்று மெல்லிய நகையொலி கொட்டினாள் லிஸ்ஸி.

இன்பக் குறுகுறுப்பு ஓய்ந்த உள்ளத்தில் இப்படிப்பட்ட தெய்வீக ஆசைகள் ஓய்ந்துவிடுவதில்லையே! அந்தந்த நேரத்துக் கவர்ச்சிகள், ஆசைகள் எல்லாம் ஒழிந்து மாறி விடலாம். தாய்மைத் தாகம் நிரந்தரமானது. ஒவ்வொரு மங்கையின் மனத்திலும் இறுதிவரை



''எதிலேயும் திருப்தி வேணும். இருக்கிறது போதும்; இனிமேல் வேண்டாம்னு நினைக்கிறவன் எங்கே இருக்கான் சார்!''

''ஏன்! நான் இங்கே இருக்கேனே. வந்த கஷ்டங்கள் எல்லாம் போதும், திருப்தியா யிருக்கு. இனிமேல் வேண்டாம்னுதான் இருக்கேனே!''

யில் அலை மோதும் தத்துவம் அது! படைப்பின் ரகசியம் அது!

லிஸ்ஸி தையல் இயந்திரத்தை விட்டு, எழுந்து துளசியின் அருகே வந்தமர்ந்தாள். அவள் முகத்தை அன்பாகத் திருப்பினாள். ''இந்த நம்பிக்கையின்மை வேண்டாம். அல்லது இது வேண்டாம் என்று வெட்கத்தாலோ, வெறுப்பாலோ தள்ளிவிடவும் வேண்டாம். இது ஒன்றுதான் ஒரு பெண்ணின் வாழ்வில் உண்மையாக நடக்க வேண்டிய ஒன்றாகும். இதுவே முடிவானதும், யாராலும் கட்டுப்படுத்த முடியாததும் ஆகும்.''

துளசியின் அதரங்கள் துடித்தன. கைவிரல்கள் நடுங்கின. ''அது.....அது இயலுமா?'' என்று முணுமுணுத்தாள் அவள்.

''அவர் உன்மீது எத்தனை அன்பை வைத்திருக்கிறார், தெரியுமா?''

''இல்லை. அவருக்கு என்மீது அன்பு இல்லை.''

''ஏன்? ஏன் இந்த முடிவுக்கு வந்தீர்கள்? காரணம் சொல்ல முடியுமா?''

''அதை உங்களிடம் மனம் திறந்து சொல்லத்தான் போகிறேன். நீங்கள் என்னைத் தவறாக நினைத்தாலும் சரி...''

லிஸ்ஸி துளசியின் முகத்தையே கூர்ந்து பார்த்தாள்.

''அவர் இங்கிலாந்து போகும் அவசரத்தில் தீர்மானித்த திடீர்க் கல்யாணம். அக்கா விரும்பியதன் பேரில் நான் அவர் மனைவியானேன். ஒரு

மாதம் கழித்தே அவர் புறப்பட்டாலும் அவரிடம் நெருங்க முடியாத கூச்சம், நெருங்க விடாத மற்றவர்களின் பாதுகாப்பு. அப்போது அந்தப் பிரிவுக்கு முன் இருவரும் மனம் விட்டு அந்தரங்கமாகப் பழகி யிருந்தால் அந்த நாட்களின் பசுமை அவரைத் திசை மாறச் செய்திருக்காது. அந்த அந்தரங்கமெல்லாம் மயிர்க்கூச்செறியும் இன்பமாய் மனத்தில் நிலைத்திருக்கலாம்.''

''ஓ! மை காட்! அவரை அப்படியா எண்ணி விட்டீர்கள்? சுலபத்தில் உணர்ச்சி வசப்பட்டுப் பாதை தவறி விட்டார் என்று கருதுகிறீர்கள்? அவர் அப்படிப்பட்டவரல்ல. அவருக்கு ஏற்பட்ட சந்தர்ப்பவசம் அப்படி. என் தந்தையின் மரண வாக்கு என்ற மாயக் கரங்களில் சத்தியத்துக்குட்பட்டுச் சிக்கிய அவரின் தவிப்பு உங்களுக்குப் புரியவில்லையா? நடந்ததையெல்லாம் அவர் கூற முன்வந்தபோது நீங்கள் கேட்க மறுத்து விட்டீர்கள். கேட்க மறுத்ததோடு கூட அவரைப் பற்றி மிகத் தவறான அபிப்பிராயத்தை நீங்களாகவே சிருஷ்டித்துக் கொண்டு விலகி விட்டீர்கள். இங்கே பாருங்கள், துளசி! இன்று காலை உங்கள் பூஜைக்கு மனமுவந்து வந்து கலந்து கொண்டு உங்கள் கணவரின் நெஞ்சில் உங்களுக்குத்தான் முதலிடம் என்பதை நீங்கள் உணரவே யில்லையா? எனக்குப் பாதுகாப்பளித்து ஏற்றுக் கொண்டு சத்தியத்துக்காக என்னுடன் வாழ ஆரம்பித்து அதுவே வாழ்க்கை முறையாகி விட்டது. ஆனாலும் இத்தனை ஆண்டுகளாக, இத்தனை உணர்வுகளுக்கு இடையேயும் புராதனப் புண்ணாக, அவர் மனத்தில் சுட்டுக் கொண்டே யிருக்கும் நெருப்புக் கங்காக உங்கள் நினைவு வருத்தி வந்தது என்றுவது உணர முடிகிறதா உங்களால்? உங்களுக்காக அவர் எத்தனை தூரம் இறங்கி வரக் காத்திருந்தார் தெரியுமா? அவரோடு வாழ்வதற்காக ஒரு மாற்றுக்கூடக் கூறவில்லை நீங்கள். 'நீங்கள் செய்தது தவறு; லிஸ்ஸியை விரட்டிவிடுங்கள், அல்லது அவளைத் தனிவீட்டில் வைத்துவிடுங்கள், நாம் இருவரும் தனியாக வாழலாம்' என்றெல்லாம் கூறி அவரது வாழ்வில் உரிமை கோரும் எவ்வித பாத்தியதையும் ஏற்காமல் மிகவும் அந்நிய பாவத்தில் ஒதுங்கி விட்டீர்கள். இதுவா பக்தி? இதுவா உங்கள் கடமை?...''

''தயவுசெய்து என் மனத்தைப் புண்படுத்த வேண்டாம். நான் குழம்பி யிருக்கிறேன்...''

''குழப்பத்தோடு குழப்பமாக என் கதையைக் கொஞ்சம் கேளுங்கள். பிறகு பிரமிக்கும்படியான தெளிவுகூட ஏற்படலாம். அப்படியே உங்களிடம் எவ்வித மாற்றமும் ஏற்படுத்தாது என்றாலும் உங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டியதுதானே அதுவும்...'' என்ற லிஸ்ஸி தன் கதையைச் சொல்லச் சௌகரியமாகச் சோபாவில் சாய்ந்தாள்.

''பிக்கடில்லி சதுக்கத்தின் அருகே அமைந்திருந்த ஒரு பிராந்தியத்தில் தான் என் தந்தை ரிச்சர்டும், நானும் இருந்தோம். என் தாயைக் காணும் பாக்கியம் படைத்தவள் அல்ல நான். அவளது புகைப்படத்தையே நான் கண்டிருக்கிறேன். இதே தமிழ் நாட்டைச் சேர்ந்தவள்தான் அவள். 'சீதா' என்ற அழகான பெயர் என் அம்மாவுக்கு. மூதன் முதலில் என் அம்மா இங்கிலாந்துக்கு மருத்துவத்தில் மேற் கல்வி பயிலவே வந்தாள். பெரிய ராணுவ அதிகாரியின் மகள் அவள். தமிழ் நாட்டில் பிறந்தும் டில்லியில் வாழ்ந்தவள். என் தந்தை ரிச்சர்டு இந்தியாவின் கனரகத் தொழிற்சாலை ஒன்றுக்கு இங்கிலாந்திலிருந்து ஒரு ஸ்தாபனத்தின் சார்பில் வந்த இன்ஜினீயர். ராணுவ அதிகாரியான தாண்டவனுக்கும் என் அப்பாவுக்கும் நட்பு வளர்ந்து பெருகியது. சில வருஷங்களுக்கெல்லாம் என் தந்தை ரிச்சர்டு இங்கிலாந்து திரும்பி விட்டார். பிறகும் அவர்கள் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதிக் கொண்டிருந்தனர். இந்தச் சமயத்தில் தன் மகள் சீதா இங்கிலாந்து போக வாய்ப்பு ஏற்பட்டதும், தெரிந்த நண்பர் என்ற முறையில் ரிச்சர்டைப் பார்க்கும்படி ஒரு கடிதம் தந்தார் தாண்டவன். ரிச்சர்டும் சீதாவுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து தந்தார். அவர்களின் பழக்கம் அன்பின் முதிர்ச்சியாகியது. தன் காதலைத் தந்தைக்குத் தெரிவித்த சீதாவின் மீது கடிந்து, தாண்டவன், 'படித்தவரையில் போதும், திரும்பி வா!' என்று கடிதம் எழுதினார்.

(தொடரும்)





# துருவங்கள் சேர்ந்தால்!

கலைக் களஞ்சியத்தை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருந்த பெ. தூரனிடம் தமிழில் சென்னை நகர டெலிபோன் டைரக்டரியைத் தயாரிக்கும் பணியை ஒப்படைத்தால்...? அவர் முதலில் வெளியிடும் மாதிரிப் புத்தகம் இப்படி இருக்கலாம் :

— அ —

அடைக்கலம் எஸ். டாக்டர்
1110, பூந்தமல்லி நெடுஞ்சாலை, சென்னை-10
667788

நம்மிடையே வெகுசிலருக்குத்தான் பெயர் பொருத்தமாக அமையும். குமாரி கோகிலத் துவனி பேசினால் கொருக்குப்பேட்டை பக்கத்தில் கூட்ஸ் ரயில் இஞ்சின் குரல் கொடுப்பது போல் இருக்கலாம். பரமக்குடி ஆசாமி ஒருவருக்குச் சீமைச்சாமி என்று பெயர் இருக்கலாம். ஆனால் அடைக்கலம் பெயருக்கேற்ப வெகு பொருத்தமாகத் தம்மைத் தேடி வரும் அத்தனை நோயாளிகளுக்கும் ஆத்மார்த்தமாக அடைக்கலம் அளிக்கிறார். ஆமாம்! மருந்து கொடுப்ப தோடல்லாமல் தங்குவதற்கு இடமும் கொடுக்கிறார். தெரிகிறதல்லவா? நர்சிங் ஹோம் வைத்திருப்பவர் இந்த டாக்டர் அடைக்கலம்தான்.

அம்பிகாபதி டி. கே.
37, ஹாமில்டன் வாராவதி ரோடு,
சென்னை—5 995566

சவுக்கு மற்றும் நெய்வேலி லிக்கோ கரி மொத்த விற்பனையாளர். தேரழுந்தூர் கம்பநாட்டாழ்வார் திருக்குமாரன் அம்பிகாபதிக்கும் இந்த அம்பிகாபதிக்கும் எந்தவித உறவும் இல்லை. இவர் சிறுவயதிலேயே பெரியோர்கள் தீர்மானித்தபடி தம் முறைப் பெண்ணுக்கு மாங்கலியம் அணிவித்துத் தன் கழுத்திலும் பளபளக்கும் தங்கச் சங்கிலி மாட்டிக் கொண்டவர். இவருக்குக் கம்பராமாயணத்தில் ஈடுபாடு இல்லை.

அல்லிராணி
501, மௌண்ட் ரோடு, சென்னை—2
993301

அர்ஜுன்தாஸ் புலந்திரதாஸ் நிறுவனத்தாரின் சமீபத்திய முயற்சியின் விளைவு இந்த ஆண்கள் ஆடை அலங்கார கேந்திரம். பெண்மணிகள் உபயோகிக்கும் வண்ணத் துணிகளைக் கொண்டு எப்படி எப்படிக் கவர்ச்சிகரமாக ஆண்களுக்குப் புதுரக பாண்டுகள், ஸ்லாக்குகள் தைக்கலாம் என்பதற்கு இங்கு பணியாற்றும் சில ஆராய்ச்சியாளர்களின் கண்டுபிடிப்புக்கள் சான்று.

அழகறிஞன்
215, பெல்ஸ் ரோட், சென்னை—5
886311

பெற்றோர்கள் இட்ட பெயர் சுந்தர வதனம். வதனம் என்ற வடமொழிச் சொல்லை விரட்டிவிட்டு முகம் என்ற பதத்தை இணைத்துச் சுந்தர முகம் ஆனார். அந்த இணைப்பின் பலம் சரியாக இராததாலோ என்னவோ, அந்த 'முகம்' என்ற பதம் கழன்று போய்ச் சில காலம் வெறும் சுந்தரமாக நின்றார். அந்தச் சுந்தரத்துக்குச் சமமான தூய தமிழ் வார்த்தை தேடி அழகனானார். அழகனாய் இருந்தால் போதாது, அறிஞராயும் இருக்க வேண்டும் என்று தோன்றவே அழகறிஞனானார். இங்கிலீஷ் மீடியத்தில் நடக்கும் 'கெண்டிஷ் கிண்டர் கார்டன்' ஸ்கூலுக்கு பிரின்சிபால் இவர்தான்.

— க —

கஸ்தூரி ஸ்ரீ
1103, ஹபிபுல்லாரோடு, சென்னை—17
112233

கண்ணம்மா என்ற இயற்பெயருடன் பள்ளி ஆசிரியையாக இருந்து திரைப்பட நட்சத்திரமாக மாறியவர்.

இவர் அழுத்தம் திருத்தமாகவும், தெளிவாகவும், தீர்மானமாகவும் உச்சரித்துப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருப்பதை அகஸ்மாத்தாகப் பள்ளிக் காட்சி ஒன்றைப் படமாக்க வந்த டைரக்டர் கண்டுவிட்டு, இந்தக் குரல் ரசிகர்கள் செவிகளில் அற்புதமாய் ஒலிக்கும் என்று நம்பித் தயாரிப்பாளரிடம் சொல்ல, இவருக்கு உடனடியாகக் குடியிருப்பு மாற்றம், பெயர் மாற்றம், வாழ்க்கைத் தர மாற்றம் எல்லாமே ஏற்பட்டன.

'பணம் கேட்கும் போதுதான், பழைய வாத்தியாரம்மா மாதிரி அழுத்தம்திருத்தமா தெளிவா உணர்ச்சியோடே பேசறாங்களே தவிர, படத்திலே டயலாக் பேசற போது இப்போ உசிரே இல்லை' என்று படத் தயாரிப்பாளர்கள் அங்கலாய்க்கிறார்கள்.

கண்ணகி கே.
109, டைக்ராஃப்ட்ஸ் ரோடு
சென்னை—5. 225500

டைக்ராஃப்ட்ஸ் சாலைக் கடைசியில் மரீனா கடற்கரையில் நிற்கும் கண்ணகிக்கும் இந்தக் கண்ணகிக்கும் சம்பந்தம் கிடையாது. இரண்டு கண்ணகிகளையும் இணைப்பது டைக்ராஃப்ட்ஸ்ரோடுதான். மேலும் இந்தக் கண்ணகி ஓர் ஆண் மகனார். சிலம்பு அணியாதவர். கால்சிராய் அணிபவர். பழைய பேப்பர்கள், புத்தகங்கள், சஞ்சிகைகள் விற்பனையில் ஈடுபட்டிருக்கும் இவருடையமுன்னோர்கள் கூட நவரத்தினக் கற்கள் விற்றதில்லையாம்.

கங்கா ஜமுனா
1127, எலியட்ஸ் ரோடு, சென்னை4.
121212

கூவமும் பக்கிங்ஹாம் கால்வாயும் புகுந்து புகுந்து விளையாடும் சென்னையம்பதியில் கங்கையையும் யமுனையையும் சேர்ந்தாற் போலக் கொண்டு வந்திருப்பவர் யார் என்ற வியப்பு ஏற்படுவது நியாயமே! இந்த அரிய காரியத்தில் முழுமூச்சுடன் இறங்கி வெற்றி கண்டிருப்பவர் உடுப்பிக்காரர் கோவிந்த கிருஷ்ண கோபாலராவ். கங்காஜமுனா சமீபத்தில் நகரத்தில் தோன்றியிருக்கும் உயர்தர ஹோட்டல்களில் ஒன்று.

கட்டாரித்தேவன்
(பி. எஸ். கல்யாண கிருஷ்ணன்)
101, மோடவாக்கம், சென்னை—10.
606060

மர்ம, பயங்கர, பேய், கொலைக் கதை எழுத்தாளர். எழுதிக் கொண்டே யிருக்கிறார். இன்னும் இவருடைய மர்மக் கதைகள் ஏதும் பிரசுரமாகவில்லை. பயங்கரக் கதை ஒன்று எழுதிப் பிரபல பத்திரிகைக்கு அனுப்பினார். ஆனால் அது ஒரு சிறந்த காதல் கதை என்ற தலைப்பில் பிரசுரமாகி விடவே, கட்டாரித்தேவன் மனம் மகிழ முடியாமல் குமுறினார். ஆனாலும் தம் முயற்சியையோ, புனைபெயரையோகைவிட இவர் தயாரில்லை.

கந்தா! முருகா! கார்த்திகேயா!
92, அங்கப்பநாயக்கன் தெரு.
சென்னை — 1. 223344

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி மார்க்கங்களில் ஓடும் லாரிகளின் தலைமைக் காரியாலயம். லாரிகளின் பெயர்களைப் படிப்பவர்களுக்கே புண்ணியம் லாபம் என்பது இந்த நிறுவனத்தின் கொள்கை.

கனகசபை எஸ். ஆர்.
222, கச்சேரி ரோட், சென்னை—4
446677

சுகவாசி. சீட்டாட்டப் பிரியர். பல பொழுதுபோக்குக் கிளப்புக்களின் போஷகர். சீட்டு ஆடாதபோது தூங்குவார். தூங்காத போது சீட்டாடுவார். சீட்டாடும்போது ஆட்டக்காரர்களைத் தவிர வேறு யாருடனும் பேசமாட்டார். இவரை எப்போது டெலிபோனில் கூப்பிட்டாலும் பூஜை செய்து கொண்டிருக்கிறார் என்ற பதில் வரும்.

—கோமதி சுவாமிநாதன்

## பந்து இங்கே!

பந்து இருக்கவேண்டிய இயல்பான இடத்தைப் புகைப்படம் சொல்கிறது. நீங்கள் குறித்த இடம் சரிதானா?





# பயன்மிகு பாங்கிப் பணிக்கு வெள்ளி விழா

இந்தியாவின் தொழில் துறையில் பிர்லா என்ற பெயர் பல ஆண்டுகளாகவே மிகப் பிரசித்தம். இருபத்தைந்தாண்டுகளுக்குமுன் திரு ஜி.டி. பிர்லாவின் தலைமையில் யுனைடெட் கமர்ஷியல் பாங்கி என்று ஒரு புதிய பாங்கி ஆரம்பிக்கப்படுகிறது என்ற செய்தி வெளி வந்த போது பொருளியல் வல்லுநர்களும் பாரத நாட்டின் தொழில் துறை முன்னேற்றத்தில் அனுபவம் உள்ளவர்களும் இப் புதிய பாங்கியின் தோற்றத்தை உற்சாகத்துடன் வரவேற்றதுடன், ''இந்தியாவின் பாங்கித் துறையிலேயே இது ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கி வைக்கும்'' என்று ஆசி கூறினர்.

வெள்ளிவிழா கொண்டாடும் இந்த ஆண்டில், ஆரம்பகால ஆசிமொழிகளை நினைவுகூர்ந்தால், இவை எவ்வளவு உண்மையாகச் செயல்முறையில் பிரதிபலித்துள்ளன என்பது நன்றாகத் தெரிகிறது. ஆரம்பத்துக்கு முன் எவ்வளவு தீர்க்கதரிசனத்துடன், திட்டங்கள் வகுத்துச் செயல்படுத்தப்பட்டனவோ, அதேகவனத்துடனும் வேகத்துடனும் பல துறை வியாபகத்துடனும் யூக்கோ பாங்கி பிற்காலத்திலும் செயல்பட்டு வந்திருக்கிறது. ஆதிகாலத்தில் இதன் தலைமை நிர்வாகக் குழுவில் இருந்தவர்கள் எல்லாரும் இந்தியத் தொழில் துறையில் உயர்ந்த அந்தஸ்திலுள்ள பரந்த அனுபவசாலிகள். அதன் ஆரம்பமே பெரிய ஆரம்பம். இரண்டு கோடி வாக்களிக்கப்பட்ட மூலதனம். செலுத்தப்பட்ட மூலதனமோ ஒரு கோடி ரூபாய். அந்தக் காலத்தில் இது பெரிய தொகை.

பொதுமக்களின் வரவேற்போ மிக உற்சாகம் அளித்தது. ஒரு கோடி மட்டுமே தேவை என்ற விண்ணப்பத்துக்கு மூன்றரைக் கோடிக்குப் பங்குத் தொகை விண்ணப்பங்கள் குவிந்தன. இந்த நம்பிக்கையும் உற்சாகமும் நிலைத்திருக்கும்படி செய்ய சுறுசுறுப்பும், நீண்டகால நோக்கும் செயலாக்கத்தில் திறன் படைத்த நிர்வாகத்தினர் வேண்டுமன்றோ? இத்தேவை பாங்கியின் முதலாவது உயர் மானேஜரான திரு பி. டி. தாகூர் அவர்களால் நிறைவு செய்யப்பட்டது.



G. D. பிர்லா

ஸ்தாபகர் - தலைவர் (1943 - 1964)

பாங்கியின் 25 ஆண்டு வளர்ச்சியே திரு பி. டி. தாகூர் ஆரம்பித்து வைத்து நடத்திய திட்டங்கள்தாம். ஒவ்வொரு நடவடிக்கையும் சீரிய வங்கி முறை சம்பிரதாயத்துக்குச் சிறிதும் வழுவாதது. உதாரணமாக, பாங்கியின் கிளைகளின் கணக்குகளைத் தணிக்கை செய்வது என்ற பழக்கம் அந்தக் காலத்தில் சட்டப்படி அவசியமில்லை. எனினும், பாங்கியின் முதல் ஆண்டிலிருந்தே தகுதியுள்ள கணக்காயர்களைக் கொண்டு எல்லாக் கிளைகளின் கணக்குகள் தணிக்கை செய்யப்படும் பழக்கம் புகுத்தப்பட்டது. இன்றும் இந்தப் பழக்கம் நீடிக்கிறது.

அயல்நாட்டுச் செலாவணி வாணிபம் யூகோ பாங்கியின் லட்சியங்களில் நிலைத்து நிற்கும் ஒன்று. சொல்லப் போனால் இந்தியர்கள் நடத்தும் பாங்கிகளில் யூகோ பாங்கு தான் அந்நியச் செலாவணித் துறையில் முன்னோடியாகப் பல பணிகளைப் புரிந்திருக்கிறது. முதலாவது ஆண்டுக் கணக்கிலேயே இது தெளிவாகத் தெரிந்தது. பாங்கியின் கையிருப்பில் 425,000 அமெரிக்க டாலர் மதிப்புள்ள அமெரிக்கக் கடன் பத்திரங்களும் 18,000 பவுண்டு மதிப்புள்ள ஏற்றுமதி உண்டிகளும் இருந்தன. ஆரம்பம் சிறியது தான். ஆனால் அதன் வளர்ச்சி தொடர்ந்து வேகமாக விரிவடைந்தது.

முதல் ஆண்டின் கணக்குகளே நிர்வாகத்தினரின் அபாரத் திறமைக்குச் சான்று கூறுகின்றன. மூலதன அஸ்திவாரத்தைப் பலப்படுத்த ரூ. 7.50 லட்சம் காப்பு நிதிக்கு முதல் ஆண்டிலேயே ஒதுக்கப்பட்டது. 1946ம் ஆண்டில் மூலதனத்தை அதிகரிக்க, மேலும் இரண்டு லட்சம் பங்குகள் வழங்கப்பட்டன. அகில இந்திய அடிப்படையில் இயங்குவது யூகோ பாங்கி என்பதை நிலைநாட்ட, அப்போதே 69 கிளை பாங்கிகள் நாட்டின் பல பகுதிகளிலும் தொடங்கி நடத்தப்பட்டன.

யூகோ பாங்கியின் வரலாற்றில் 1947 ஒரு முக்கிய ஆண்டு. பாகிஸ்தானில் தனது கிளைகளை இழக்க நேரிட்டாலும், இந்தியாவுக்கு வெளியிலும் யூகோ பாங்கி செயல்பட உறுதி கொண்டுள்ளது என்பதைக் காட்ட, ரங்கூனில் ஒரு கிளை இவ்வாண்டில் தொடங்கப்பட்டது. கல்கத்தா நகரும்,

பாகிஸ்தான் அருகில் ஒரு கால் நெருங்கிவிடலாமோ என்ற ஐயத்தினால் தாற்கா லிகமாக பாங்கியின் தலைமைக் காரியாலயம் புதுதில்லிக்கு மாற்றப்பட்டது. பாங்கியின் வருமானமும் ஒரு கோடி அளவைத் தாண்டி 1.23 கோடிக்கு உயர்ந்தது. காப்பு நிதியும் ரூ. 40 லட்சம் அளவுக்கு உயர்ந்தது. இது மூலதனத்தில் ஐந்தில் ஒரு பாகம்.

1947ம் ஆண்டு எப்படி மேன்மையாக விளங்கிற்றோ அதற்கு நேர்மாறாக அடுத்த ஆண்டு கஷ்டத்தைக் கொடுத்தது. பிரிவினையும், 1947-48 வியாகத்அலிகான் பட்ஜெட்டும், பங்கு மார்க்கெட்டில் விலைச் சரிவுகளும் பாங்குக்குச் சோதனையாகவே அமைந்தன.

உள்நாட்டுக் குழப்ப நிலையைச் சமாளிக்க வெளிநாடுகளில் கிளைகளை ஏற்படுத்தி ஒருவாறு ஈடு செய்ய முடிவு செய்யப்பட்டது. அதன்படி மலாயா நாட்டில் **பினங்கிலும்**, பர்மாவில் **மோல்மெயினிலும்** கிளைகள் நிறுவப்பட்டன. ஏற்றுமதி உண்டியல்கள் வியாபாரமும், இறக்குமதிக் கடன் வசதி வாணிபமும் பெருகத் தொடங்கின. இந்தத் துறைகளில் 1948ம் ஆண்டில் மட்டும் சுமார் ஆறு கோடி ரூபாய்க்குத் தொழில் நடந்தது.

அடுத்த ஆண்டும் (1949) கஷ்டமான ஆண்டுதான். போரின் பின் விளைவுகள் காரணமாக உலகின் பல பாகங்களில் பொருளாதாரச் சீர்குலைவும், அயல்நாட்டுச் செலாவணி நாணய மதிப்புக் குறைவும், சேர்ந்து யூகோ பாங்கித் தொழிலில் மந்த கதியைத் தோற்றுவித்தன. ''டெபாசிட்டு''த் தொகையும், முப்பத்தெட்டுக்கோடியிலிருந்து முப்பத்தொரு கோடிக்குக் குறைந்துவிட்டது. லாபமும் முப்பத்தாறு லட்சத்திலிருந்து முப்பத்திரண்டு லட்சத்துக்குக் குறைந்தது.

ஆனால் 1950 வாக்கில் கொரியாப் போர் காரணமாகப் பொருளாதார நிலைமையில் சற்றுச் சுறுசுறுப்பு கண்டது. இதில் பங்கு பெற்று யூகோ பாங்கும் தன் தொழிலில் அபிவிருத்தி யடைந்தது. காப்பு நிதிக்கு ரூ. 75 லட்சம் ஒதுக்கியதுடன் பங்குதாரர்களுக்கு டிவிடெண்டும் மூன்றரை சதத்திலிருந்து நாலு சதத்துக்கு உயர்த்தப் பட்டது.

யூகோ பாங்கியின் வளர்ச்சியில் பத்தாண்டு முடிவதற்குள்ளேயே இந்திய வங்கித் தொழிலுக்கு ஏற்பட்ட பெரும் சோதனையைத் தானும் எதிர்நோக்க வேண்டி யிருந்தது. கொரியாப் போர் முடிவுற்றதும், நாட்டில் பணவீக்கத் தடுப்பு நடவடிக்கைகள் அவசியமாயிற்று. ரிஸர்வ் பாங்கியின் வட்டி விகிதம் மூன்றரை சதமாக உயர்ந்தது. அரசாங்கக் கடன் பத்திரங்களின் விலைகள் குறையத் தொடங்கின. பாங்குகளின் கையிருப்பில் கணிசமான பகுதி கடன் பத்திரங்களாகையால் இவற்றின் விலை இறங்குமுகமாகும்போது பாங்கிகளுக்கு நஷ்டமே ஏற்படும். யூகோ பாங்கும் இந்த மாதிரி நஷ்டத்துக்கு உட்பட வேண்டியிருந்தது. ஆனால் சர்க்கார் கடன் பத்திர மதிப்புக் குறைவுக்காக ஒரு பிரத்தியேகக் காப்பு நிதி ஏற்படுத்தி, அதன் மூலம் பத்திரங்கள் விலை ஏற்றத் தாழ்வுகளால் பாங்கியின் வலிமை குன்றாது யூகோ பாங்கு பார்த்துக் கொண்டது.



I. P. கோயங்கா
தலைவர் (1964 - 1967)

எந்தப் பாங்கிக்கும் எப்போதாவது ஒரு சமயம் நிகழும் சோதனைச் சம்பவம் யூகோ பாங்கிக்கு 1951ல் நிகழ்ந்தது. அதுதான் டிபாசிட்டர்களின் ''பீதி''. பாங்கிமீது கூட்டமாகச் சென்று டெபாசிட்டுகளை வாபஸ் பெறுவது. 1951ல் இம்மாதிரி சம்பவம் நிகழ்ந்தது. அதன் விளைவாக டெபாசிட்டுகள் தொகையில் — இதுதான் ஒரு பாங்கியின் உறுதிக்கு ஸ்திரமான ஆதாரம் — நான்கு கோடி குறைந்தது. இதனால் யூகோ பாங்கி மனம் தளரவில்லை. சிங்கப்பூரில் ஒரு கிளை ஸ்தாபனத்தை நிறுவிற்று. லாபமும் முதல் தடவையாக ரூ. 35 லட்சத்தைக் கடந்தது. ஆனால் அடுத்த மூன்று மாதகாலத்துக்குள்ளாகவே, பரவலாக ஏற்பட்ட பண்டங்களின் விலை சரிவால், இரண்டாவது முறையாக டிபாசிட்டர்களின் பீதியையும், பணம் வாபஸ் பெறும் இயக்கத்தையும் எதிர்த்துச் சமாளிக்க வேண்டியிருந்தது. இதையும்வெற்றிகரமாகவே யூகோ பாங்கி சமாளித்தது.

வெளிநாட்டுக் கிளைகளை நிறுவும் ஊக்கம் மட்டும் குன்றவில்லை. அடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள் ஹாங்காங்கிலும், லண்டன் மாநகரிலும் கிளைகள் ஸ்தாபிக்கப்பட்டன. 1951-ம் வருட வாக்கில் ஏற்றுமதி உண்டியல்கள் மட்டும் ஐந்தரைக் கோடி ரூபாய் மதிப்புக்குப் பாங்கிவசம் இருந்தன.

பத்தாண்டுகள் பூர்த்தியானதும், யூகோ பாங்கியின் வளர்ச்சியில் சுறுசுறுப்புக் காணத் தலைப்பட்டது. அடுத்த நான்காண்டுகளில், புதுப் புதுக் கிளைகள் நிறுவுவதும், வங்கித்



R. B. ஷா
தற்போதைய தலைவர்

தொழில் விஸ்தரிப்பும், லாப உயர்வும், பங்குதாரர்களுக்குச் சிறுகச் சிறுக டிவிடெண்டு உயர்வும் நடைமுறை சிறப்புக்களாக இருந்தன. 1954ம் ஆண்டில் 93 கிளைகள்தான் இருந்தன. 1957ம் ஆண்டு முடிவில் 108 கிளைகள் ஸ்தாபிக்கப்பட்டுவிட்டன. பங்குதாரர்களின் டிவிடெண்டும் இந்தரை சதத்திலிருந்து படிப்படியாக ஏழரை சதத்துக்கு உயர்த்தப்பட்டது. 1954ம் ஆண்டில் யூகோ பாங்கியின் மொத்த லாபமும் இரண்டு கோடி அளவை மீறி விட்டது.



B. T. தாகூர்
முதல் ஜெனரல் மானேஜர்
(1943 - 1955)

பதின்மூன்று ஆண்டு காலம் யூகோ பாங்கியின் வளர்ச்சியை இடைவிடாது கண்காணித்து வந்த உயர் மானேஜர் திரு பி. டி. தாகூர் 1955ல் ஓய்வு கொண்டார். முப்பத்தேழு வருஷங்கள் சிறப்புப் பணியாற்றி யூகோ பாங்கியின் நடைமுறையில் சீரான, ஒழுங்கான பல வங்கி முறைகளைப் புகுத்தி, இந்தியப் பெரும் ஐந்து பாங்குகளில் யூகோ பாங்கும் ஒன்று என்ற நிலைமைக்கு இதை ஸ்திரமாக உயர்த்தி விட்டுப் பின்னரே அவர் ஓய்வு பெற்றார். அவருடைய பரந்த மனப்பான்மையும், நீண்டகால நோக்குடன் திட்டமிடும் ஆற்றலும், அந்நியச் செலாவணித் துறையில் அவருக்கு இருந்த ஊக்கமும் யூகோ பாங்கின் ஆரம்ப கால வளர்ச்சிக்குப் பெருதவியாக இருந்தன. இன்று யூகோ பாங்கி உயர் பாங்கியாக நிலைத்திருக்கிறதென்றால் அதற்குத் திரு பி. டி. தாகூரின் சேவை முக்கிய காரணம்.

1955ம் ஆண்டு ஏப்ரலில் திரு எஸ். டி. ஸதாசிவன் யூகோ பாங்கியின் உயர் நிர்வாகியாகப் பதவி ஏற்றார். 1945லிருந்தே இப்பாங்கியில் பணியாற்றிக் கொண்டிருந்த திரு எஸ். டி. ஸதாசிவன், ஏற்கனவே மிகுந்த அநுபவமுள்ளவர். அயல் நாட்டுச் செலாவணித் துறையில் அவருக்கு விசேஷ அநுபவம் உண்டு. இதனால் திரு பி. டி. தாகூர் எழுப்பிய கட்டடத்தை திரு ஸதாசிவன் மேலும் வலுப்படுத்தி விட்டார். பாங்கியின் பதினைந்தாவது ஆண்டு முடிவில் அதன் காப்பு நிதி ரூ. 1.15 கோடிக்கு உயர்ந்து விட்டது. அதாவது பாங்கியின் செலுத்தப்பட்ட மூலதனமான இரண்டு கோடி ரூபாயில் பாதிக்கு மேல் காப்பு நிதி உயர்ந்து விட்டது.



S. T. சதாசிவன்
ஜெனரல் மானேஜர்
(1955 - 1964)

அடுத்த இரண்டாண்டுகளுக்குள் யூகோ பாங்கி தன் வளர்ச்சியில் மற்றொரு மைல் கல்லைக் கடந்தது. அதன் நிதி வசதிகள் 114 கோடிக்குப் பெறுகிற்று. வரி சம்பந்தமான சில சலுகைகளின் விளைவாகப் பங்குதாரர்களுக்கு டிவிடெண்டும் வரிக்குட்பட்டுப் பதினொரு சதத்துக்கு உயர்த்தப்பட்டது. வருமான வரி செலுத்தியபின் லாபத்திலிருந்து சிறுகச் சிறுக நிதி ஒதுக்கி, மூலதனத்துக்குச் சற்று அதிகமாக ரூ. 2.05 கோடி. அளவுக்குக் காப்பு நிதியை உயர்த்துவதற்கு யூகோ பாங்கிக்குப் பதினெட்டு ஆண்டுகள் பிடித்தன. 1960ம் ஆண்டில் தான் யூகோ பாங்கியின் மொத்த வருமானமும் ஐந்து கோடி அளவுக்கு மேல் உயர்ந்தது. டிவிடெண்டும் வரிக்குட்பட்டுப் பன்னிரண்டு சதத்துக்கு உயர்த்தப்பட்டது.

இதற்குப்பின் யூகோ பாங்கியின் வளர்ச்சி வேகமுற்றது. ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு சாதனையைக் கண்டது. 1962-ம் ஆண்டில் ஐம்பது ரூபாய் பங்கு ஒன்றுக்கு இருபத்தைந்து ரூபாய் அதிக விலையில் (எழுபத்தைந்து ரூபாய்க்கு) 1,60,000 பங்குகள் பங்குதாரர்களுக்கு உரிமையாக வழங்கப்பட்டு மூலதனத்தைப் பெருக்கிக் கொண்டது யூகோ பாங்கி. இதே ஆண்டில் தான் டிபாசிட்டுகளும் நூறு கோடி ரூபாயைக் கடந்தது. (ஒரு பாங்கியின் முக்கியத்துவத்தை அளப்பது டிபாசிட்டுத் தொகை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்) அடுத்த ஆண்டில் பாங்கியில் செலுத்தப்பட்ட மூலதனம் 2.80 கோடியாகி விட்டது. காப்பு நிதிகளும் அதற்கேற்ப ரூ. 3 கோடிக்கு உயர்ந்து விட்டன.

1963ம் ஆண்டில் பர்மா அரசாங்கம் அந்த நாட்டின் பாங்குத் தொழிலைத் தேசிய மயமாக்கி விட்டதன் விளைவாக யூகோ பாங்கிக்குச் சிறிது நஷ்டமேற்பட்டது. பர்மாவில் யூகோ பாங்கின் கிளைகள் மூன்று மிகச் சிறப்பாகப் பணியாற்றிக் கொண்டிருந்தன. பர்மா அரசாங்கத்துக்கே சர்க்கார் பாங்குப் போல் செயல்பட்டுக்கொண்டிருந்தது. இந்தக் கிளைகள் மூடப்பட்டது ஒரு பெருத்த நஷ்டம்தான்.

1964ம் ஆண்டில் திரு எஸ். டி. ஸதாசிவனது பதவிக் காலம் முடிவுக்கு வந்து விட்டது. எனினும், அவர் டைரக்டர்களின் குழுவில் சேர்ந்து விட்டதால், அவருடைய திறமையும் அநுபவமும், உயர் நிர்வாக அதிகாரியாக இல்லாவிட்டாலும் யூகோ பாங்கிக்குக் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. பல ஆண்டுகளில்

திரு ஸதாசிவன் அயல்நாடுகளில் பெற்ற அனுபவமும், இன்ஷூரன்ஸ் தொழிலில் அவருக்கு இருந்த விசேஷ அறிவும், அவருடைய பத்தாண்டு உயர் நிர்வாக காலத்தில், திரு பி. டி. தாகூர் கட்டிவிட்டுச் சென்ற யூகோ பாங்கி ஸ்தாபனத்தை மேலும் விரிவுபடுத்திப் பிரமிக்கத்தக்கவாறு உயர்த்திவிட அவருக்குப் பெரிதும் உதவின. அவருடைய புத்தி சாமர்த்தியம் உயர்ந்தது. எந்த நிலைமையையும் விரைவில் கிரகித்துக் கொண்டு தாமதமின்றி முடிவெடுக்கும் சாமர்த்தியம் வியக்கத் தக்கது. இவைதாம் அவருடைய பதவிக் காலத்தில் யூகோ பாங்கி வேகமாக வளர்வதற்குப் பேருதவியாக வாய்த்தன.



S. J. உத்தம்சிங்
ஜெனரல் மானேஜர்

திரு எஸ். டி. ஸதாசிவனுக்குப் பின்னர் திரு ஆர். பி. ஷா உயர்நிர்வாகஸ்தராகப் பதவி வகித்து வருகிறார். திரு ஷா யூகோ பாங்கியில் உயர் கணக்கராகச் சேர்ந்தார். ஆகவே, இந்தப் பாங்கியின் அனுபவமே நிறையப் பெற்றவர். தவிரவும், ரிஸர்வ் பாங்கியின் நடைமுறைகளையெல்லாம் நன்கறிந்தவர்.

1964ம் ஆண்டு யூகோ பாங்குக்கு ஒரு முக்கியமான ஆண்டு. ஆனால் சந்தோஷப்படுவதற்கில்லை. ஆரம்பம் முதல் இருபத்தோர் ஆண்டுகள் யூகோ பாங்கியின் உயர் தலைவராகப் பணியாற்றிய திரு ஜி. டி. பிர்லா, இருபத்திரண்டாவது ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் தமது உயர் பதவி ஸ்தானத்தை விட்டு நீங்கிக் கொண்டார். இதை அவர் மிகப் பொருத்தமான முறையில் செய்தார். எந்த நாளில், எந்தக் கட்டடத்தில், யூகோ பாங்கியைக் கல்கத்தாவில் 21 ஆண்டுகளுக்குமுன் தொடங்கி வைத்தாரோ அதே தேதியில், அதே இடத்தில் தமது உயர் பதவியை விடுத்தார். அந்தச் சமயம், அப்போது நிதி அமைச்சராக இருந்த திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் இந்தியப் பொருளாதாரத்தில் யூகோ பாங்கியின் ஸ்தானத்தைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசுகையில், ''கடந்த இருபது ஆண்டுகளில் யுனைடெட் கமர்ஷியல் பாங்கி தனது நிதிவசதிகளை விஸ்தாரமாகப் பெருக்கிக் கொண்டு தனது வலிமையையும் அதிகரித்துக் கொண்டுள்ளது. நம் நாட்டின் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதில் முக்கியமான பங்கு கொண்டு பணியாற்றி வருகிறது'' என்று மகிழ்ச்சியுடன் கூறினார். ஆனால் திரு ஜி. டி. பிர்லா தமது பிரிவுரையில் அருமையான கருத்து அமைந்த செய்தியை பாங்குக்கு அளித்துவிட்டு விலகினார். ''பாங்கித் தொழில் என்பது வெறும் லேவாதேவித் தொழில் அல்ல. கடன் கொடுத்துக் கடன் வாங்கும் தொழில் அல்ல. கூர்ந்து பார்த்தால் முடிவில் மக்கள் சமுதாயத்துக்குச் செய்யப்படும் சேவையே பாங்கியின் தொழிலாகும்'' என்றார் திரு ஜி. டி. பிர்லா.

மேலும் அவர் சொன்னார்: ''ஒரு பாங்கியைச் சமூக நலனுக்கு உதவும் ஸ்தாபனமாக மாற்றுவதற்கு நம்பிக்கை, தைரியம், லட்சியம் இம்மூன்றும் தேவை. பாதுகாப்பு உணர்ச்சியும் எச்சரிக்கையும் இருக்கத்தான் வேண்டும். ஆனால் இவற்றுடன் இவைகளுக்குத் துணையாக, சமூகத்துக்குச் சேவை புரிய வேண்டும், நாட்டின் பொருளாதாரத்தையும் வளர்க்க வேண்டும் என்ற உள்ளப் பாங்கும் தீர்க்கதரிசனமும் வேண்டும். இவை மட்டுமே ஒரு பாங்கியைத் தனது உண்மைப் பெயருக்கு ஏற்றதாகச் செய்யும்.''

திரு ஜி. டி. பிர்லாவின் ஸ்தானத்துக்கு உயர்த் தலைவராக திரு ஐ. பி. கோயிங்கா சென்ற ஆண்டு வரையில் பணியாற்றினார். ஆரம்ப காலத்திலிருந்தே திரு கோயிங்கா யூகோ பாங்கியின் டைரக்டராக இருந்தவர். 1948ம் ஆண்டிலேயே யூகோ பாங்கியின் உபதலைவராக நியமிக்கப்பட்டவர். இருபத்திரண்டு வருஷ காலம் திரு ஜி. டி. பிர்லாவின் ஆலோசனைகளுக்கும் உதவிக்கும் எவ்வகையிலும் குறைவில்லாத பயனுறும் ஆலோசனைகளைச் சொல்லி யூகோ பாங்கிக்குப் பணிபுரிந்து வந்திருக்கிறார் திரு கோயிங்கா.

யூகோ பாங்கியின் வெள்ளிவிழா சமயத்தில் அதனுடைய சிறப்பு அம்சங்களை அட்டவணை போலவே அடுக்கிச் சொல்லலாம். 1967ம் ஆண்டு முடிவில் டெபாசிட்டுத் தொகை ரூ. 215 கோடிக்கு மேல் உள்ளது. கடன்களும், கடன் வசதிகளும் ரூ. 137 கோடிக்கு மேல் வழங்கப்பட்டுள்ளன. கிளை ஸ்தாபனங்களின் எண்ணிக்கை 276. யூகோ பாங்கியில் பணியாற்றும் சிப்பந்திகளின் எண்ணிக்கை 7000 மேல் இருக்கின்றனர். டெபாசிட்டு செய்திருப்பவர்கள் சுமார் ஆறு லட்சம் பேர்கள் உள்ளனர். கடன் பெற்றுள்ளவர்கள் 12,000க்கு மேலாக இருக்கின்றனர்.

இவ்வாறாக யூகோ பாங்கி வங்கித் துறையில் புதிய வரலாற்றைத் தோற்றுவித்துவிட்டது. வங்கிகள் எல்லாம் சமூக நலன் கட்டுப்பாட்டுக்குட்பட்டு நடத்தப்பட வேண்டும் என்ற புதுக் கொள்கை யூகோ பாங்கியின் இருபத்தைந்தாண்டு பூர்த்தியாகும் தறுவாயில் உருவாகியிருக்கிறது. இந்தக் கொள்கைக்கிணங்க, யூகோ பாங்கியின் நிர்வாகக் குழுவிலும் மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. சட்டம், கணக்கியல், கூட்டுறவுத் துறை விவசாயம், கிராமப்புறக் கடன் வசதி, சிறு தொழில் உதவி — இப்படிப் பல துறைகளுக்கும் ''போர்ட்''டில் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டிருக்கிறது. திரு ஆர். பி. ஷாவும் முழு நேர டைரக்டராகவும், திரு ஐ. பி. கோயிங்கா ஸ்தானத்தில் உயர்த் தலைவராகவும் நியமிக்கப்பட்டு விட்டார்.

யூகோ பாங்கியின் வளர்ச்சி முக்கியமாக அதன் வாடிக்கைக்காரர்கள் அதனிடம்

வைத்திருக்கும் நம்பிக்கையையும், பாங்கியின் சிப்பந்திகளும் பணியாளர்களும் எல்லாக் கட்டங்களிலும் வாடிக்கைக்காரர்களுக்குப் புரியும் தொண்டையும் முக்கியமாக எடுத்துக் காட்டுகிறது.

, திரு ஆர். பி. ஷா உயர் நிர்வாக அதிகாரியாகப் பதவிவகித்த காலத்தில், யூகோ பாங்கியின் மொத்த வருமானம் பத்து கோடிக்கு உயர்ந்ததையும், பாங்கியின் காப்பு நிதிகளும், நாலு கோடி அளவுக்கு மிகத் திருப்திகரமான நிலைமைக்கு உயர்ந்ததையும் கண்டு சந்தோஷிக்கக் காரணமுண்டு. சமீப காலத்தில் சிறு தொழில்களுக்கும், விவசாயிகளுக்கும், ஏற்றுமதி வர்த்தகத்துக்கும் விரிவான முறையில் பாங்கிகள் நிதிவசதி அளிக்கும் வகையில், நடைமுறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற கொள்கை அமுலுக்கு வந்திருக்கிறது. இந்தச் சூழ்நிலை திரு ஷா அவர்களை யூகோ பாங்கியின் உயர் தலைவர் என்ற ஸ்தானத்துக்கு நியமிப்பதற்கு ஏற்ற பின்னணியாகவே அமைந்துள்ளது.

திரு ஷா யூகோ பாங்கியில் பிரதம கணக்கராக பாங்கி ஆரம்பிக்கப்பட்டபோது சேர்ந்தார். படிப்படியாக முன்னேறி 1955ல் உதவி மானேஜராகவும், 1964ல் தலைமை மானேஜராகவும் பணியாற்றியுள்ளார். எனவே, யூகோ பாங்கியின் வெள்ளிவிழாவுடன் பாங்குடன் தமது தொடர்பின் வெள்ளி விழாவையும் சேர்த்துக் கொண்டாடுகிறார் திரு ஷா. இப்போது திரு ஆர்.பி. ஷா யூகோ பாங்கியின் உயர் தலைவர். அவருடைய தலைமையின் கீழ், வருங்காலத்தில் யூகோ பாங்கு நாட்டுக்கு மேலும் சிறப்பான முறைகளில் சேவை புரியும் என்று எதிர்பார்க்கலாம்.

# மோகன விலாஸ் (நாடகம்)

வடுவூரார், ஆரணியார் பாணியில் நாடகத்தின் பெயர் இருக்கிறதே என்று யோசிக்க வேண்டாம். நாடகக்கதையும் அப்படியே!

நாட்டியக்காரி மோகனாவிடம் கொண்ட காதலால் அவளைத் தன் வீட்டுக்குக் கொண்டு வந்து வைத்துக் கொண்டதுமல்லாமல் தன் மாளிகையையே அவள் பெயருக்கு எழுதி வைத்து, 'மோகன விலாஸ்' என்று பெயர் மாற்றமும் செய்கிறான் பட்டாபி.

அவன் மனைவி ஜானகிமீது கணவனைக் கொன்றதாகச் சந்தர்ப்பச் சாட்சியங்கள் ருசுவாகி ஆயுட்காலத் தண்டனை அடைகிறாள். சம்பவம் நடந்தபோது பட்டாபி — ஜானகியின் மகள் மைதிலி இலங்கையில் இருக்கிறாள். பதினாறு வருஷங்களுக்குப் பின் பருவ மங்கை மைதிலி இந்தியா வருகிறாள் — தாயின் களங்கம் துடைக்க. நாடகம் பழைய துப்பறியும் கதைப் பாணியில் போகிறது.

குறைந்த நடிகர்களை வைத்துக் கொண்டு நாடகத்தை வேகமாக ஓட்டிக் கொண்டு போவதற்காகத் தியேட்டர் குருப்பாரைப் பாராட்ட வேண்டும். இரண்டே செட்டுகள் தான். இந்த நிலையில் அடிக்கடி விளக்கை அணைத்துத் திரையை விட்டு மறுபடியும் அதைத் தூக்கிச் சிரமப்பட்டிருக்க வேண்டாம். ஒளியைக் குறைத்துப் பாத்திரங்களை மட்டும் இடமாற்றம் செய்து தொடர்ந்திருக்கலாம். வேகம் கூடியிருக்கும்.

குமாரி சந்திரகாந்தாவுக்கும், வக்கீலாக நடித்தவருக்கும் இரட்டை வேடங்கள் — அம்மா, பெண்; அப்பா, பிள்ளை! சந்திரகாந்தா வேஷப் பொருத்தம் நடிப்பு இரண்டிலுமே சிறந்து விளங்கினார். முக்கியமாக ஜானகி பாத்திரத்தில் தன் இடத்தை வேறொரு பெண் பறித்துக் கொள்கிறாள் என்பதை அறியும்போது பக்தி கொண்ட கணவனிடம் பயந்தும், அதே சமயம் மற்றவளிடம் ஆத்திரம் கொண்டு குமுறியும் நடித்திருப்பது மெச்சும்படி உள்ளது. ஆனால் கணவன் இறந்துவிட்டான் என்ற செய்தி கேட்ட பின்....அந்த இடம் படுதோல்வி.

கொலை செய்தது பட்டாபியின் நண்பன் கலியாணம் என்ற முடிவு பொருத்தமில்லாமலும் நம்ப முடியாமலும் இருக்கிறது. இன்ஸ்டால்மெண்ட் சோமுவாக வருபவரின் இயல்பான நடிப்பு வேறு யாருடைய பாணியையோ நினைவுபடுத்தினாலும் நாடகத்தில் சிரிக்கவைக்கும் காரியத்தைச் செம்மையாகச் செய்திருக்கிறார்.

பட்டாபியாக வரும் வி. எஸ். ராகவனின் நடிப்பு ஏனோ சோபிக்கவில்லை.

'அண்ணி' சேது இதில் வேலைக்கார வேலய்யனாக வருகிறார். வரும் இரண்டொரு காட்சிகளிலும் உணர்ச்சிகளைக் கொட்டி, அபாரமாக நடித்து நம் உள்ளத்திலே நிலை பெற்று விடுகிறார்.

திறமையும் உற்சாகமும் கொண்ட தியேட்டர் குருப்பினர் இந்தப் பழைய மோகன விலாஸ் பங்களாவை விட்டுப் புதிய நவீன பாணி இல்லத்துக்குக் குடிபோக வேண்டும்.



# பொன்னிவனத்துப் பூங்குயில்



கொத்தமங்கலம் சுப்பு

## அத்தியாயம் 27

## ''தேடினான், தேடினானே பஞ்சவர்ணம்!''



''அதிகப்பிரசங்கி. யாரையும் எடுத்தெறிந்து பேசும். கொஞ்சம் அசந்தா ஏமாத்திடும். வயது பதினெட்டு இருக்கும், நீங்கள் பார்த்தீங்களா?'' என்று குயிலியின் அடையாளங்களைச் சொல்லிக் கொண்டே தெருவின் ஓரத்தில் சிவப்புச் சாயம் பூசியிருந்த விளக்குத் தூணிடம் கேட்டான் வெள்ளை! ஊர் ஓரக் கடைகள் ஒன்று பாக்கி விடாமல் அந்தனை இடங்களிலும் தேடினான் வெள்ளை. அவனோடு கூடவே பக்கபலமாகப் பஞ்சவர்ணமும் இருந்தான்.

வெள்ளை தன் வீட்டுக்குப் போவதையே விரும்பவில்லை. அங்கு போனால், 'அடே பாவி. நீ என் மகனா! பாவம் அந்தத் தாயில்லாப் பெண்ணை வெள்ளம் இழுத்துக் கொண்டு போயிற்றோ! அல்லது தீயில் வெந்து போனாளோ? போய்த் தேடிக் கொண்டு வாடா!' என்று கிழவி புலம்பிக் கொண்டே இருந்தாள். போதாததற்குப் பஞ்சவர்ணமும் விரட்டினான். ''என்னை ஏமாத்தவா, பார்க்கிறே?'' என்று மிரட்டவும் மிரட்டினான். ஆகவே, வெள்ளை வாரணன் தீவிரமாக அவளைத் தேடிக் கொண்டிருந்தான். ''கடையெல்லாம் தேடியாகி விட்டது. தெருக்களில் எல்லாம் பார்த்தாகி விட்டது. ஏழைகளுக்குக் கஞ்சி வார்க்கப்படும் இடங்களிலெல்லாம் அவளைக் காணவில்லை. அவளோடு திரியும் பையன்களையும் காணவில்லை. இனி வீடுகளில்தான் தேட வேண்டும். 'எந்த வீட்டிலாவது புதிதாக ஒரு பெண் வந்திருக்கிறதா? நீங்கள் கொண்டு போய் இறக்கி விட்டீர்களா?' என்று வண்டிப் பேட்டையிலுள்ள ஒத்தை மாட்டு வண்டிக்காரர்களை எல்லாம் விசாரித்துத் துப்பு துலக்க முனைந்தான் வெள்ளை. அதில் ஒரு வண்டிக்காரராவது அவன் சொல்லிய அடையாளம் கொண்ட பெண்ணை ஏற்றிக் கொண்டு சென்றதாகத் தெரியவில்லை. அவனும் பஞ்சவர்ணமும் சோர்ந்து போய்த் திரும்பும்போது அவர்களுடைய அதிர்ஷ்டம். ''ஆமாங்க! மறந்துட்டேனுங்க. ஒரு பெண்ணை முந்தா நாள் ராத்திரி ஏழரை நாழிக்கு நான் நம்ம



வண்டியிலே கொண்டு போய் வரகப் பையர் சந்திலே வேப்பமரத்து வீட்டிலே இறக்கி விட்டேனுங்க'' என்றார் ஒரு வண்டிக்காரர்.

இதைக் கேட்ட வெள்ளையும் பஞ்ச வர்ணமும் துள்ளிக் குதித்தே விட்டார்கள். ''பொண்ணு கறுப்பா இருந்ததா ?''

''நான்தான் இருட்டு நேரங்கிறேனே.''

''ஆமா. இடது கையிலே முழங் கைக்கு மேலே ஒரு தழும்பு இருந் திச்சா ?'' என்று மேலும் கேட்டான் வெள்ளை. என்ன இருந்தாலும் அவன் கெட்டிக்காரன் இல்லையா ?

''ஏனய்யா, உன் தண்ணிவண்டி புத்தி போக மாட்டேங்குதே. இருபது வயசு, பொண்ணு கையிலே மச்சத்தைப் பார்த்தியானு என்னைக் கேட்கிறியே. நான் என்ன பண்பில்லாதவன்னு நினைச்சுக்கிட்டியா? ஆணும் வருவாங்க. பொண்ணும் வருவாங்க, வண்டியிலே. வாடகையிலே தகராறு செய்தாலும் செய்வேன். வண்டியிலே யார் வர தூன்னு நான் நிமிர்ந்துகூடப் பார்க்க மாட்டேன்யா!'' என்று வண்டிக்காரன் தன் நாணயத்தைத் தானே புகழ்ந்து விட்டுக் கோபத்துடன் திரும்பினன். பஞ்சவர்ணம் அவனைச் சமாதானப்



படுத்தப் பட்டபாடு பெரி தாகி விட்டது. கடைசியில் கையில் கொஞ்சம் சில் லறையை வைத்து அவ னிடம் இருவரும் நைச்சிய மாகப் பேசி வேப்பமரத்து வீட்டில் முதியவர் ஒருவர் வசிப்பதாகவும், இரவு பொழுதுபட்டு ஒரு ஜாமத்துக்குமேல் அந்தப் பெண்ணைக் கழுத்தில் மாலையும் மஞ்சள் புடவையுமாக வண்டியில் ஏற்

றிச் சென்றதாகவும் அறிந்து கொண்டு விட்டார்கள்.

இருவரும் தெருவில் தர்க்கம் செய்து கொண்டே நடந்தார்கள். 'கழுத்தில் மாலே' என்று கேட்டவுடன் பஞ்சவர்ணத்துக்கு வயிற்றில் கலக்கியது. ஆனே வெளிறி விட்டான்.

''ஏன், மாமா! ஒரு வேளே அது அந்தக் கிளவனேக் கல்யாணம் செய்திட்டு இருக்குமோ?''

''பல்லே உடைச்சிடுவேன்'' என்ருன் வெள்ளே.

''அடச்சி! ஏண்டா, என் பல்லே உடைக்கிறே! நீ ஒரு குடிகாரன். உன் மருமக ஒரு குறும்புக்காரி'' என்று பஞ்சவர்ணம் கச்சத்தை வரிந்து கட்டிஞன்.

''உங்களேச் சொல்லலே, மாப்பிள்ளே! முறைகாரன் நான் இருக்கிறப்போ எவஞவது ஒருத்தன் அவளேத் தொட்டுத் தாலி கட்டியிருந்தா அவன் பல்லே உடைத்திடுவேன்னு சொன்னேன்.''

''ஹூம், நீ எங்க உடைக்கறது! அவன்தான் கிளவனுமே? அதுசரி, ஏன் மாலே போட்டுக்கிட்டுப் போயிருக்கு?''

''அது பொல்லாத பொண்ணு மாப்பிள்ளே. உன்னேயும் என்னேயும் ஏமாத்தறதுக்காகவே ஒரு முழம் பூவை வாங்கிக் கழுத்திலே போட்டுக் கிட்டிருக்கும்'' என்ருன் வெள்ளே.

குயிலியைப் பற்றி இவ்வாறு வெள்ளே கூறியது பஞ்சவர்ணத்துக்கு நியாயமாகவே பட்டது.

ஆனல் வீட்டுக்குள் இருக்கும் பெண்ணே எப்படி வெளியே கொண்டு வருவது என்ற விஷயத்தில் மறுபடியும் தகராறு வந்தது. ''வெளியே நின்று கொண்டு, 'குயிலி, குயிலி!' என்று கூப்பிடுகிறேன். அவள் வந்துவிடுவாள்'' என்ருன் வெள்ளே.

''நீ கூப்பிட்டா அது வரணும்னு சாத்திரமா? உன் குரலேக் கேட்டதுமே கொல்லே வழியா பறந்துவிடும்'' என்ருன் பஞ்சவர்ணம்.

''பின்னே நீயே ஒரு யோசனே சொல்லு'' என்று வெள்ளே கேட்கவே, பஞ்சவர்ணம் புத்தியை நிதானப்படுத்திக் கொண்டு தீவிரமாக யோசித்து, ''மாமா! இதிலெல்லாம் தந்திரம் வேண்டும். வேப்ப மரத்து மேலே நீ ஏறிக்கிட்டுக் குயில் கூவுற மாதிரி கூவு. அது கதவைத் திறந்துக்கிட்டு வரும். அப்ப நான் அதைக் கபால்னு பிடிச்சுக்கிறேன். எப்படி என் யோசனே?'' என்று கேட்டான்.

''அட போ, மாப்பிள்ளே! உன் யோசனேயைக் கேட்ட உடம்பெல்லாம் கல்லு காயம் பட வேண்டியது தான். பைத்தியம்னு நினேச்சுக்கிட்டுக் கல்லால் அடிப்பார்கள்'' என்று மறுத்து விட்டான் வெள்ளே.

மேலும் பல வழிகளேக் கூறிஞன் பஞ்சவர்ணம். ஒரு வழியாவது வெள்ளேக்குப் பிடிக்கவில்லே. கடைசியில் வெறுப்போடு, ''நம்ம இரண்டு பேரும் ஒத்துப் போகக்கூடிய வழியா நீயே ஒண்ணேச் சொல்லு'' என்ருன் பஞ்சவர்ணம்.

''அப்படி ஒரே வழிதான் உண்டு. நட கடைக்கு'' என்ருன் வெள்ளே. அந்த வழியில் இருவரும் நடந்தார்கள். குளிரத் தாக சாந்தி செய்து கொண்டவுடன் இருவர் மூளேயும் வெறியில் ஒரு நிலேக்கு வந்தது. வீட்டுக்குள் இருக்கும் பெண்ணே வெளியே கொண்டு வர ஒரு வழியும் கண்டு பிடித்துவிட்டார்கள். 'வரகப்ப அய்யர்' சந்தில் வேப்பமரத்து வீட்டுக்கு முன்னுல் எதிர்வீட்டில் உள்ள திண்ணேயில் ஒரு கறுப்புத் திரை கட்டப்பட்டிருந்தது.

''ஆரடி நீ இங்கு வந்தவள், ஆரடி நீ?'' என்று மயான காண்டத்தில் அரிச்சந்திர தோட்டி பாடும் பாட்டை முழக்கிஞன் பஞ்சவர்ணம். அவன் 'ஆரடி' என்று பாடும்போதெல்லாம் ஏழடிகளே மத்தளத்தில் அடித்தான் வெள்ளே. திரைக்கு முன்னுலே சந்திரமதி பொம்மையும் அரிச்சந்திரத் தோட்டி பொம்மையும் பஞ்சவர்ணத்தின் கை கயிற்றில் வெறி பிடித்து ஆடிக் கொண்டிருந்தன. ஆனல் அவன் கண்களோ கயிற்றைக் கவனியாமல் எதிர் வீட்டில் சாத்தியிருந்த கதவையே கவனித்துக் கொண்டிருந்தன. தெரு முழுதும் பையன்களும் வீட்டுப் பெண்பிள்ளேகளும் பொம்மலாட்டத்தைப் பார்க்கக் கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருந்தார்கள். எதிர்ச் சாரியில் வேப்ப மரத்து வீட்டைத்தவிர மற்ற வீட்டு வாசல்களில் எல்லாம் அந்தந்த வீட்டுப் பெண்கள் வந்து திண்ணேயின் மேல் ஏறி நின்ருர்கள். வெள்ளேயின் சந்தேகம் வலுப்பட்டது. பஞ்சவர்ணம் கடுங்குரலில்,

**''சோரத்தனமாய்க் காவலே மீறி**
**சொல்லாமலே இங்கு வந்தவள்''**

என்று குயிலியை மனத்தில் நினேத்துக் கொண்டு கோபத்துடன் பாடிஞன்.

வேப்ப மரத்து வீட்டின் ரேழியில் ஒரு விசுப் பலகையின் மேல் வீட்டுக்காரக் கிழவன் உட்கார்ந்திருந்தான். புது மனேவி பொம்மலாட்டம் பார்ப்


களவோ?
அல்லவே அல்ல!
அவளைப் போலவே அதே அளவுக்கு
அவனுக்கும் சொந்தம் லக்மே டால்கம்
இதயம் கவர்ந்த டால்கம். அவளைப்போலவே அவனுக்கும். கொள்ளைகொண்ட நறுமணம். அவளைப் போலவே அவனுக்கும். பகிர்ந்து பகிர்ந்து இன்புறும் ஈருடல் உரிமை. நீராடிய மேனிமீது தாராளமாகப் பொழியும் பயன், நீடித்து நிலவும் புத்துணர்ச்சி. 'லக்மேகரமான' புதுமலர்ச்சிக்கு வரவுகூறி வாழ்விப்பது லக்மே டால்கம்.
லக்மே
டால்கம்
நான்கு வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், சந்தனம், நிர்வாண்
Lakmé

பதற்காக உள்ளே இருந்து வாசலை நோக்கி வேகமாக வந்தாள்.

''ஏ, கோவிந்தம்மா! எங்கேடி போறே?'' என்றான் அவன்.

''பொம்மலாட்டமுங்க.... பார்க்க'' என்று கையைப் பிசைந்தாள் அவள்.

''அது பாவைக் கூத்து. பார்க்கப் படாது. பார்த்தால் பாவம்!'' என்று கிண்டலாகக் கூறிவிட்டு, ''போ, உள்ளே!'' என்று அதட்டினான் அந்தக் கிழவன். அவன் ஒரு சந்தேகப் பேர்வழி. ரேழியிலேயே காவல் இருந்தான். பாவம், அந்தப் பெண் கோபத்தோடு ரேழிக் கதவைப் படாரென்று சாத்திக் கொண்டு உள்ளே போனாள். ''உங்களுக்குத்தான் வயசாச்சு. நான் சின்னப் பொண்ணு. எனக்கு இதெல்லாம் பார்க்க ஆசை இருக்காதா?'' என்று தனக்குள் கூறிக் கொண்டே மெல்லச் சத்தப்படாமல் கொல்லைக் கதவைத் திறந்து கொண்டு பக்கத்து வீட்டுக் கொல்லை வழியாக வாசலுக்கு வந்து நின்றாள்.

''கொஞ்ச நாளைக்குக் கடுமையா நடந்துக்கிட்டாதான் அடங்கும்'' என்று தனக்குத்தானே திருப்தி செய்து கொண்டான் புது பெண்டாட்டிக்காரன்.

பஞ்சவர்ணத்தின் கண்கள் கதவையே பார்த்தன. கதவு திறக்கப்படவுமில்லை, கன்னிகை வெளியே வரவுமில்லை. கையில் இருந்த பொம்மைகளை அவன் பாராததால் சந்திரமதி அரிச்சந்திரன் தொட்டியைத் தொட்டுத் தொட்டுப் பாடிக் கொண்டிருந்தாள்.

''என்னடா! பொம்மலாட்டம் நடத்தறான்?'' என்று ஜனங்கள் சிரித்தார்கள்.

''ஏ, மாதே, செல்! காலகண்டய்யர் வீட்டின் கொல்லைப்புறமாக நுழைந்து காலகண்டியின் காலில் விழுந்து கால் பணமும் முழத் துண்டும் கடுக வாங்கிக் கொண்டு வா!'' என்று சொல்லி வெள்ளையைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டினான் பஞ்சவர்ணம். வெள்ளை இதைப் புரிந்து கொண்டான். மிருதங்கத்தை வைத்துவிட்டு வெற்றிலை துப்பச் செல்பவன்போல் தெருக் கோடி வரை நடந்து, திரும்பி எதிர்வீட்டின் கொல்லைப்புறத்துக்கு வந்து விட்டான். சந்தில் ஈ காக்கை இல்லை. கொல்லைக் கதவு திறந்திருந்தது. 'ஆகா, நம் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்' என்று உள்ளே நுழைந்தான். வீட்டுக்குள் ஏதேனும் பெண் தலை தட்டுப்படுகிறதா என்று மேலே பார்த்துக்கொண்டே நடந்தான். கண்ணில் ஒன்றும் தட்டுப்படவில்லை. ஆனால் அவனுடைய துரதிர்ஷ்டம் காலில் ஏதோ தட்டுப்பட்டது.



சிறிது பணம் இருந்தால் அது உங்களைக் காப்பாற்றும். அதிகப் பணம் இருந்தால் அதை நீங்கள் காப்பாற்ற வேண்டும்.

ஆதாரம்: பெஞ்சமின் பிராங்க்ளின்

தகவல் :''எறும்பு''

---

உடனே, 'கொக்—கொக் — '' என்று பத்துப் பன்னிரண்டு கோழிகள் சேர்ந்தாற்போல் கத்தின. அடை காத்த கோழியை அவன் மிதித்துவிட்டதால் அது அவன் காலைக் கொத்திவிட்டது. படீரென்று ரேழிக் கதவு திறந்தது. வெள்ளை நாலே தாண்டில் கொல்லை வழியே ஓடினான்.

''அடி கோவிந்தம்மா! கோவிந்தம்மா! அட பாவி! யாரோ கூட்டிக்கிட்டு ஓடிப் போயிட்டானே!'' என்று கையில் கம்புடன் கொல்லை வழியே துரத்தினான் வீட்டுக்காரன். இதைக் கேட்டவுடன் பக்கத்து வீட்டுக்காரர்கள், ''திருடன், திருடன்'' என்று கத்திக் கொண்டு இங்கும் அங்கும் ஓடினார்கள். கோவிந்தம்மாள் கொல்லை வழியே தன் வீட்டுக்குள் ஓடி வந்தாள். புருஷனும் மனைவியும் மோதிக் கொண்டார்கள். ''ஏன் இப்படிக் கத்துறீங்க? நான் பக்கத்து வீட்டு வாசலிலிருந்து பொம்மலாட்டம் பார்த்துக்கிட்டிருந்தேன்'' என்று அவள் மிஞ்சினாள். அவள் வந்ததே போதும் என்று எண்ணிய கணவன், ''அது எனக்குத் தெரியாதா? யாரோ ஒரு திருடன் வந்து சொம்பைத் தூக்கிக்கிட்டு ஓடினான்'' என்றான் அவன். இதற்குள் தெருவில் நடந்த குழப்பத்தில் ஒன்றும் தெரியாதவனைப்போல் வெள்ளை மிருதங்கத்தை எடுத்து முன்னால் வைத்துக் கொண்டு மறுபடியும் தட்ட ஆரம்பித்தான். திடீரென்று எதிர்வீட்டுக் கதவு திறந்தது. பஞ்சவர்ணம் வெள்ளை இருவரும் குயிலி வருகிறாளா என்று பார்த்தனர். வந்தான் கம்போடு வீட்டுக்காரன். 'திருடன் திருடன்' என்றவன் திடீரென்று வெள்ளையைப் பார்த்து விட்டு, ''அதோ, அவன் மாதிரிதான் இருந்தான்'' என்றான்.

அந்த ஜனங்கள் அடித்த அடியில் வெள்ளையின் உடம்பு பஞ்சவர்ணமாகி விட்டது. பொம்மலாட்டக்காரன் —

''பொம்மை போனால் போகட்டும்' நாம் பிழைத்தால் போதும்'' என்று ஓடினான்.

ஒரு நாள் அதிகாலையில் ஒரு காத தொலைவில் மணிமரத்தாள் பத்தைக்குத் தெற்கே உள்ள கொள்ளிட நதியின் வெள்ளத்தில், ''பம் மகாதேவ்! பம் மகாதேவ்'' என்ற கோஷம் எதிரொலி செய்தது. ஒரு முதலையின் மீது தலையில் உத்திராட்சத்தால் ஆகிய கிரீடமும், காதுகளில் உத்திராட்ச குண்டலங்களும், கழுத்தில் ஸ்படிகம், பவளம், ருத்திராட்சம் ஆகிய தாள் வடங்களும் அணிந்த ஒரு பாலயோகி அமர்ந்திருந்தார். அவரைச் சுமந்து கொண்டு அம்முதலை வாயைத் திறக்காமல் தண்ணீரின் மேல் வாலை அடித்து நீந்திக் கொண்டே வந்தது. அவர் மந்திரத்தால் முதலையின் வாயைக் கட்டி விட்டாரென்று பேசிக் கொண்டார்கள். அதற்கு முன்னும் பின்னும் நான்கு பாகங்கள் விலகி இரு சிஷ்யர்கள், ''பம் பம் மகாதேவ்'' என்று இரு சங்குகளை ஊதிக் கொண்டு கையில் குங்கிலியத் தண்டுகளை வைத்துக் கொண்டு அதில் குங்கிலியத்தைத் தூவிய வண்ணம் மாரளவு தண்ணீரில் நடந்துவந்தார்கள்.

''கலியுக வரதன் பராக்! கழுகாசலச் சாமியார் பராக்! தீராத வினைகளைத் தீர்த்து வைப்பார். ஓடிப் போன மனைவியைக் கூட்டி வைப்பார்'' என்று சிஷ்யர்கள் அந்தச் சாமியாருக்குக் கட்டியம் கூறினார்கள். அவரைத் தொடர்ந்து ஐம்பதுக்கும் மேற்பட்ட பரிசல்கள் வந்தன. அவர் எங்கு சென்றாலும் அங்கு ஒரு சந்தை அமைந்துவிடும். நோயாளிகளுக்கு அவர் தண்ணீரை மந்திரித்துக் கொடுப்பார். அதற்காகச் சிறுசிறு மண் குடுவைகளைச் சுமந்து கொண்டு இருபத்தைந்து பரிசல்கள் வந்து கொண்டிருந்தன. வாழைப் பழக் குலைகள், இளநீர், தேங்காய், வெற்றிலை பாக்கு முதலான காணிக்கைப் பொருள்களை ஏற்றிக் கொண்டு பல பரிசல்கள் வந்தன. பறவைகளுக்கு அரசனாகிய கழுகு ஒன்று சாமியாரின் தோள் மீதிருந்தது.

அதனாலேயே அவர் கழுகாசலச் சாமியார் என்ற பெயரையும் பெற்றிருந்தார். ஐயாயிரம் பேர் சாப்பிடக் கூடிய உணவுப் பொருள்கள் அவருக்குப் பின்னே படகுகளில் வந்தாலும் அவர் சாப்பிடுவது திருகு கள்ளிப் பாலைத்தான். எப்போதேனும், ஆறு மாசத்துக்கு ஒரு தடவை, அதுவும் பசித்தால்தான் சாப்பிடுவாராம். காட்டுக்குள் சென்று ஒரு கள்ளிச் செடியை ஒடித்து இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்து நீட்டி அதில் ஓரே ஒரு கைப் பாலைத்தான் குடிப்பாராம்.

''சிஷ்யா! அன்றொரு நாள் அர்ஜுனன் தவம் செய்து பாசுபத அஸ்திரத்தைப் பெற்ற இந்தக் காண்டீப வனத்தைத் தேடி நாம் தனிமையில் தவம் செய்ய வந்தோம். ஆனால் இந்த மானிடப் பதர்களின் கூட்டம் நம்மை வனத்திலும் தனித்திருக்க விடவில்லையே!'' என்றார் சாமியார்.

''ஆம், குருநாதா! அவ்விடத்தின் பெருமை அடவிக்கும் வந்துவிட்டது. அதோ, பாருங்கள். மரங்களில் மனிதர்கள் அமர்ந்திருக்கிறார்கள். எறும்புச் சாரிபோல் எங்கெங்கிருந்தோ வருகிறார்கள். இராமன் இருக்கும் இடம் அயோத்தி!'' என்றான் ஒரு சிஷ்யன்.

''ஆம். கொள்ளிடத்தில் வந்த சாமியார் உடையார்பாளையம் காட்டில் முகாம் இறங்கி விட்டார்.''

''பெரிய சித்தருடா. கும்பகோணம் கும்பேசர் சாமிக் கோயில் கோபுரத்து மேலே ஒரு நாள் ஏறி உக்காந்து இருந்திருக்கிறாரு. நம்ம பயகள் குறும்புக்குக் கேக்கணுமா? பயித்தியம்னு நினைச்சுக்கிட்டுச் சரமாரியாக் கல்லை விட்டு எறிஞ்சிருக்கானுவ. சாமியார் என்ன செஞ்சார் தெரியுமில்லே...... 'கோபுரமே! கொண்டு போ'ன்னாராம். அப்படியே அவரையும் தூக்கிகிட்டுக் கோபுரம் பறந்திடுச்சு.''

''அடே போய்யா! நான் நேத்து பார்த்தேன். கோபுரம் இருக்குது!''

''அதுதானே வேடிக்கை! கண் மூடிக் கண் திறக்கிறதுக்குள்ளே காசியிலே போயி கோபுரத்தோட கங்கையிலே குளிச்சிட்டு அப்படியே தனுஷ்கோடியிலே போயி ஒரு முழுக்குப் போட்டுட்டு மறுபடியும் கும்பகோணத்துக்கு வந்து கோபுரத்தை இருந்த இடத்திலேயே வைச்சுட்டார். அப்புறம் பார்க்கணுமே அந்தப் பயலுவளை ஆகாசத்துலே பட்டம் விட்டாக் கூட உசரக்கப் பார்க்கிறதில்லே. பயம்.''

''இதென்னண்ணே! மாமாங்கக் குளத்திலே குளிக்கிறதுக்காக இந்தச் சாமியாரு இறங்கி இருக்கிறாரு. காவக்காரன் 'தண்ணி கெட்டுப் போவும். குளிக்காதே'ன்னு தடுத்திருக்கிறான். 'இப்ப மட்டும் இது நல்ல தண்ணியா' அப்படின்னு கேட்டுட்டுச் சாமியாரு கரையிலே ஏறி மறைஞ்சிட்டாரு. அப்புறம் பாத்தா குளத்துத் தண்ணி உப்பு கரிக்குது'' என்றார் ஒருவர். இந்தப் பல்லவியைத் தொடர்ந்து அனுபல்லவியில் இறங்கினார் மற்றொருவர்.

''ஆமா, நானும் கேள்விப்பட்டேன். கிணறெல்லாம் உப்புத் தண்ணி. குள

மெல்லாம் உப்பு. குடத்திலே வைச்ச தண்ணி உப்பு. பாலு உப்பு. புளியம் பழத்தை உடைச்சுப் பார்த்தா உள்ளே உப்புக் கரிக்குது.''

''பிறகு?''

''மாமாங்கக் கூட்டம்தான். குளத் தங்கரையிலே கோடிச் சனம் நிக்குது. சனங்களுக்குக் கோவம் வந்துட்டா கேக்கணுமா. அந்தக் காவற்காரனைக் கையையும் காலையும் கட்டி அப்படியே குளத்துக்குள்ளே உருட்டி விட்டுட்டாங்க. பொத்துன்னு தண்ணிக்குள்ளே விளுந்து அமுங்கிப்பிட்டான். என்ன ஆச்சரியங்கிறே! தண்ணிக்குள்ளேயிருந்து அவனைத் தோள் மேலே தூக்கிக்கிட்டுச் சாமியார் வெளியே வந்திருக்கிறாரு. கட்டின வேட்டி நனையல்லையாம். இட்ட விபூதி அழியல்லையாம். சனங்கள்ளாம் நெடுஞ் சாண்கிடையா கால்லே விழுந்திட்டாங்களாம். சாமியாருக்கு மனசு இளகிப் போச்சு. அப்படியே தண்ணியை ஒரு பார்வை பார்த்துக் கையினாலே ஒரு சுண்டு சுண்டியிருக்காரு. மாமாங்கக் குளத்துத் தண்ணி முளுக்கப் பானகம் ஆயிடிச்சு. சுக்கு ஏலக்காய் எல்லாம் மணக்குது.''

''சித்தருல்லே. எதை வேணும்னாலும் செய்வாங்களே.''

இவ்வாறு மக்கள் அந்தச் சித்தருக்கே தெரியாமல் அவர் செய்த பல அற்புதங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கையில், ''உஸ்.... உஸ்....'' என்று சத்தம் கேட்டது. எல்லோரும் திரும்பினார்கள். சாமியார் மந்திரிக்க ஆரம்பித்து விட்டார். கூன் குருடு, செவிடு, நொண்டி முதலான ஆயிரக் கணக்கான பேர்கள் கையில் குடுவைகளை வைத்துக் கொண்டு வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். அவர் ஒவ்வொரு குடுவையாக அதிலிருந்த தண்ணீரில் உஸ்...உஸ்.... என்று.... ஊதிக் கொண்டே வந்தார். அவர் ஒவ்வொரு முறை ஊதும் போதும் சீடர்கள், ''பம்பம் மகாதேவ்! லடக் சங்கர்!'' என்று மாற்றி மாற்றி மந்திரத்தை முழக்கினார்கள். அவர்கள் கையில் இருந்த விபூதித் தாம்பாளங்களில் நோயாளிகள் போட்ட காசும் பணமும் பொன்னும் மணியும் குவிந்து கொண்டிருந்தன. ஒரு தாம்பாளம் நிறைந்தவுடனே சாமியாரிடம் சீடன் அதை நீட்டினான். சாமியார் ஒரு முறை அதில் திருக்கண் சாற்றினார். உடனே எதிர் வரிசையில் நின்ற ஏழைகளுக்கு முன் தாம்பாளத்தைத் தலை கீழாகக் கவிழ்த்தான் சீடன். அவர்கள் அதைப் பொறுக்கிக் கொண்டார்கள். கள்ளிப்பால் சித்தருக்குக் காசு பணம் எதற்கு? இவ்வாறு சாமியார் ஊதிக் கொண்டே வரும் போது கூட்டத்தின் ஓரத்தில் கண்கள் கலங்கியவண்ணம் காட்டுராஜாவின் வேலைக்காரி நின்று கொண்டிருந்தாள். சாமியார் அவளருகில் வந்தார். சீடர்கள் தாம்பாளத்தை நீட்டினார்கள். மாணிக்கம், வைடூரியம் முதலியவற்றை வைத்து இழைத்த சிறு உச்சிப் பூ ஒன்றை அவள் காணிக்கையாக வழங்கினாள். இதுவரை ஒருவரையும் தலை நிமிர்ந்து பாராத சாமியார் அந்த வேலைக்காரியின் பூர்வ புண்ணிய விசேஷத்தாலோ அல்லது அவள் போட்ட விலையுயர்ந்த காணிக்கையின் காரணத்தாலோ அவளை ஒரு முறை நோக்கினார். ஆம்! அவர் கண்கள் நெடுநேரம் அவளை விட்டு விலகவே இல்லை. ''சாமி, எனக்கு ஓர் ஆருடம் சொல்வீர்களா?'' என்று தன் கரங்களைக் கூப்பினாள் அவள்.

''முதலில் உன் காணிக்கையைக் கையில் எடுத்துக் கொள். இருபத்திரண்டரை நாழிகைக்கு மேல் ஆலமரத்தடியில் இந்தக் கட்டையைப் பார்'' என்று மெதுவான குரலில் உத்தரவிட்டு விட்டுச் சாமியார் நகர்ந்தார்.

''சாமியார் நிஷ்டைக்குப் போகிறார். இனி நாளைக் காலை பத்து நாழிகைக்குத்தான் தரிசனம். எல்லாரும் செல்லலாம்'' என்று சீடர்கள் முழங்கினார்கள்.

யானையைக் காட்டி யானையைப் பிடிப்பதும், ஆளைக் கொண்டு ஆளைப் பிடிப்பதும், சூட்டைச் சூட்டால் தணிப்பதும்தான் மனித மூளையின் விசித்திரம். நாம் காணும் பாலயோகியும் பக்கத்தில் இருக்கும் அவரது சீடர்களும் முள்ளை முள்ளால் எடுக்க வந்தவர்கள்தான்!

ஆலமரத்தடியிலே பக்கத்தில் ஆட்களே இல்லாத தனி இடத்திலே பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார் பாலயோகி. அவருக்குப் பக்கத்தில் சீடன் சர்க்கரைப் புலவர் கையில் ஒரு ஆலிலையை வைத்துக் கொண்டு அதில் அஞ்சன மையைத் தடவிக் கொண்டிருந்தான். அவர்களுக்கெதிரில் அடக்கமே உருவாக அந்த வேலைக்காரி நின்றாள். (தொடரும்)

சிந்தித்து வாங்குங்கள்-சிறந்ததையே வாங்குங்கள்

# பிரிட்டானியா

## க்ளுகோஸ்

# மில்க் பிஸ்கட்டுகள்




**ப்ரோட்டீன் சேர்க்கப்பட்டு புது உறைகளில் கிடைக்கின்றன**

பிரிட்டானியா க்ளுகோஸ் மில்க் பிஸ்கட்டுகளில்

மட்டுமே அதிக சக்திக்கு அவசியமான அதிகப்படி ப்ரோட்டீன்கள் உள்ளன. கோதுமை, சர்க்கரை, க்ளுகோஸ் மற்றும் பாலுடன் விட்டமின்களும் சேர்த்து இவை தயாரிக்கப்படுகின்றன.

# காஞ்சீபுரம் அரசியல் மகாநாடு





தமிழக அரசியலில் 1918ல் காஞ்சீபுரத்தில் கூடிய தமிழ் நாடு அரசியல் மகாநாடு ஒரு முக்கிய திருப்பத்தை ஏற்படுத்தியது. ராஜாஜி அப்போது புகழ்பெற்ற வக்கீலாக இருந்தாலும் தமிழகத் தலைவராக மேடையில் தோன்றியது இம் மகா நாட்டில் தான். சத்தியமூர்த்தியின் வாக்கு வன்மை வெளிப்பட்டதும் இம் மகா நாட்டில் தான். இதற்கு சரோஜினி தேவி தலைமை வகித்தார்.

பிரிட்டிஷாருடன் யுத்தத்தில் ஒத்துழைப்பதா வேண்டாமா என்பது பற்றிப் பிரமாதமாக விவாதம் நடந்தது. 'வேண்டும்' என்ற கட்சியை அன்னி பெஸண்ட், ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் வாதித்தார்கள். ஒத்துழைக்கக் கூடாது என்பதை வற்புறுத்தியவர்கள் ராஜாஜி, சத்தியமூர்த்தி, மூத்துரங்க முதலியார் ஆகியோர்: பெஸண்டின் கட்சி தோல்வியடைந்தது. இம் மகாநாட்டுடன் பெஸண்டின் அரசியல் செல்வாக்கு அஸ்தமித்தது.

ராஜாஜி இம்மகாநாட்டில் தோன்றியதைக் குறித்து 'சுதேசமித்திரன்' எழுதி யிருந்ததாவது:

''முதல் பார்வையிலேயே அவருடைய தோற்றம் எல்லாரையும் கவரக்கூடியதாக இருந்தது. நீண்ட வெள்ளைக் கோட்டு அணிந்து தலையில் வெள்ளை 'டர்பன்' கட்டிக் கொண்டிருந்தார். நெற்றியில் மெல்லிய திருமண் கோடு பளிச்சிட்டது. அடக்கமும் அறிவும் சுடர்விடும் தோற்றத்துடன் அவர் எழுந்து, 'யுத்தத்தில் ஏன் பிரிட்டிஷாருடன் ஒத்துழைக்கக் கூடாது' என்பதற்கான காரணங்களைச் சொல்ல ஆரம்பித்ததுமே, மகாநாட்டில் நிசப்தம் நிலவியது. அவருடைய அற்புதமான வாதம் மக்களைக் கவர்ந்து விட்டது.

இதே மாநாட்டில்தான் சத்தியமூர்த்தி திப்பொறி பறக்கப் பேசக்கூடியவர் என்பதைத் தமிழகம் கண்டது. இம்மகாநாட்டை நடத்த மிகவும் பாடுபட்டவர் 'ஹிந்து' ஆசிரியரான கஸ்தூரிரங்க அய்யங்கார்.

ஃ ஃ ஃ

மறுபடியும் சில ஆண்டுகள் கழித்துக் காஞ்சியில் மாகாண மகாநாடு நடைபெற்றது. திரு வி. க. (கலியாணசுந்தர முதலியார்) தலைமை வகித்தார். இந்த மகாநாட்டின் போது தான் பெரியார் ஈ. வே. ராமசாமி நாயக்கர் காங்கிரஸை விட்டு விலகினார். எஸ். சீனிவாச அய்யங்காரை எதிர்த்து, ஈ. வே. ரா., சுரேந்திரநாத் ஆர்யா, எஸ். ராமநாதன் ஆகியோர் பேசினர். அய்யங்கார் தன்னந் தனியே மேடையில் தவித்தார். அப்போது காங்கிரஸில் இருந்த அப்துல் ஹமீத் கான் "சத்தியமூர்த்தி எங்கே? அவரைக் கொண்டு வாருங்கள்'' என்று கதறினார். சத்தியமூர்த்தி வந்தார்.

மத்திய மாகாணத்தில் ஸ்வராஜ்யக் கட்சித் தலைவர் தாம்பே காங்கிரஸுக்குத் துரோகம் செய்து சர்க்காரிடம் நிர்வாகப் பதவியைப் பெற்றுவிட்டதால் காங்கிரஸ், சுயராஜ்யக் கட்சியை நம்பக் கூடாது என்பது ஈ. வே. ரா.வின் வாதம்.

சத்தியமூர்த்தி பேசியதாவது : ''400 பேர்கள் கொண்ட சுயராஜ்யக் கட்சியில் ஒரு தாம்பே துரோகம் செய்தார். அது எங்களைத் தலைகுனியச் செய்தது. மற்ற 399 பேர் பரிசுத்த தேச பக்தியுடன் தியாக உணர்வில் இருக்கிறோம்.

''அரிசியுடன் உமி இருக்கிறது. ரோஜாவுடன் பிறந்தது முள். உமியையும் முள்ளையும் கண்டு அவற்றை விலக்கிவிடுகிறோமா?'' என்று கர்ஜித்தார்.

இத்தகைய சரித்திர முக்கியத்துவம் பெற்ற காஞ்சீபுரம் ஜூலை முதல் தேதியன்று செங்கற்பட்டு மாவட்டத்தின் தலைநகராக விளங்கும் பண்டைக்கால அந்தஸ்தை மீண்டும் பெறுகிறது.



# நீர்ப் பாசனம் உங்கள் விவசாயத்திற்கு ஒரு பிரச்னை இல்லை!



6 H.P. 650 RPM
Crude Oil engine



5 H.P. 1500 RPM
Diesel engine



# மேனன்

## இன்ஜின்கள்

பாசனத்திற்கு தண்ணீரை ஏராளமாகக் கொடுக்கின்றன, மேனன் டீசல் இன்ஜின்கள்.

இவை தொழில் நுணுக்கத்தில் தலைசிறந்தவை, உறுதியானவை. அவைகளுக்குப் பராமரிப்புச் செலவு மிக மிகக் குறைவு. தொல்லை இல்லாமல் உழைக்கின்றன.

மூன்றே ரூபாய்க்குட்பட்ட விலையில் 5 லிட்டர் டீசல் எண்ணெயைக் கொண்டு சுமார் 60,000 காலன் தண்ணீர் பாசனத்திற்கு கிடைக்கும். மேனன் டீசல் இன்ஜின்களை இயங்கச் செய்ய விசேஷ கைத்திறன் ஏதும் தேவையில்லை. அவற்றைக் கையாளுவது சுலபம்.

மேனன் டீசல் இன்ஜின்கள் குறைந்த விலையில் கிடைக்கின்றன. விற்பனைக்குப் பின் எப்போதாவது பழுதுபட்டால், திறமைமிகுந்த ஊழியர்களின் சேவை கொடுக்கப்படுகிறது.

தமிழக அரசு அங்கீகாரம் பெற்றவை :

**மேனன் & மேனன்**

விக்ரம் நகர், கோலாப்பூர், மஹாராஷ்ட்ர ராஜ்யம்

தமிழகம், கேரளாவுக்கு ஏகபோக விநியோகஸ்தர்கள் :

**ஆர்வீ & கம்பெனி**

3, ஸலிவன் கார்டன் ரோடு, மதறாஸ்-4
போன் : 88746 தந்தி : "ARVEECO"

HM-104A TAM

விஞ்ஞானிகள் வரிசை



# தாவர ரசாயனம்

“நமது செல்வம் மருந்து உருவத்தில் வெளி நாடுகளுக்குப் போகிறது. நமது டாக்டர்கள் வெளிநாட்டு மருந்துக் கம்பெனிகளின் ஏஜண்டுகளே தவிர வேறில்லை. நமக்கு மட்டும் சுதந்திரம் கிடைத்து விட்டால், நமது மூலிகைகளையும் பச்சிலைகளையும் ஆராய்ந்து நம் நாட்டிலேயே நமக்கு வேண்டிய மருந்துகள் செய்து கொள்ளலாம்” என்றெல்லாம் சுதந்திரத்துக்கு முன்பு பேசி வந்தோம்.

அத் துறையில் ஈடுபட்டு ஆராய்ச்சிகள் நடத்தி நாட்டின் அந்நியச் செலாவணியை மிச்சம் பிடிப்பதில் உதவி புரிபவர் டில்லி சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் எஸ். ரங்கசாமி அவர்கள். அவர் இருபது ஆண்டுகளுக்கு மேலாக மருந்து தயாரிப்பதில் உபயோகமாகும் தாவரங்களின் ரசாயனத் தன்மையை விளக்கி வைத்திய உலகத்துக்குப் புரிந்துள்ள சேவை பாராட்டுக்குரியது.

அவருக்கு ஒரு நிரந்தரப் புகழைத் தேடித் தந்துள்ளது பெருவோஸைட் **(Peruvoside)** என்னும் பொருளாகும். இது தங்க அரளிச் செடியின் விதையிலிருந்து பிரித்து எடுக்கப்பட்டதாகும். இதய நோயுற்ற வியாதியஸ்தர்களுக்கு அளிக்கும் மருந்துகளில் உபயோகமாகிறது. வைத்திய உலகில் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. எதிர்பார்த்த பலனை அளிக்குமானால், இதய நோயாளிகளுக்காக மேல்நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பல மருந்துகள் நிறுத்தப்பட்டு அந்நியச் செலாவணி மிச்சப்படலாம் என்று எதிர்பார்க்கிறார்கள்.

ஸைப்த ரங்கி என்ற ஆயுர்வேத மருந்திலிருந்து நீரழிவு நோய்க்கு வாய்மூலம் கொடுக்கக் கூடிய மருந்து தயாரிக்கலாம் என்று கண்டுபிடித்திருக்கிறார். இந்த மருந்தும் டில்லியில் இரு ஆஸ்பத்திரிகளில் சில நோயாளிகளுக்கு அளித்துச் சோதித்துப் பார்க்கப்பட்டது.

தேகபுஷ்டிக்கும் சிறுநீர்ப் பெருக்கத்துக்கும் கொடுக்கப்படும் ‘கௌஸபான்’ **(Gauzaban)** என்ற மருந்தை இவர் ஆராய்ந்ததில், இன்னும் பல ஆச்சரியமான தன்மைகளும் இம் மருந்துக்குஉண்டு என்பதைக் கண்டிருக்கிறார்.

டாக்டர் ரங்கசாமி அவர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் திருவையாற்றில் பிறந்தவர். பள்ளிப் படிப்பு திருவையாற்றிலும் கல்லூரிப் படிப்பு சென்னை ராஜதானிக் கல்லூரியிலும் பெற்றார். சென்னையில் கெமிஸ்டிரியில் — பி. எஸ்ஸி. ஆனர்ஸ் தேறியதும், விசாகப்பட்டின வைத்தியக் கல்லூரியில் டெமான்ஸ்ட்ரேட்டராகச் சேர்ந்தார். அப்பொழுது ஆந்திர சர்வகலாசாலை கெமிஸ்டிரி பகுதி தலைமைப் பேராசிரியராக இருந்த டாக்டர் சேஷாத்திரி எப். ஆர். எஸ். அவர்களுடன் தொடர்பு ஏற்பட்டது. அதன் விளைவாக ஆந்திர சர்வகலாசாலையில் அவர்கீழ் வேலை செய்யும் வாய்ப்புக் கிட்டியது. டாக்டர் சேஷாத்திரி அவர்கள் அளித்த ஊக்கத்தாலும் உற்சாகத்தாலும் திரு ரங்கசாமி ஆராய்ச்சியில் ஈடுபட்டு டாக்டர் பட்டம் பெற்றார். அதிலிருந்து தாவரங்கள் மருந்து செய்வதற்கு எந்த அளவுக்கு உதவுகின்றன என்று ஆராய்வதில் ஆர்வம் கொண்டார். 1947ல் ஆந்திர சர்வகலாசாலையில் மருந்து சம்பந்தமான பட்டப் படிப்புக்கு விரிவுரையாளராக நியமிக்கப்பட்டார். ஆந்திர சர்வகலாசாலை, இதய சம்பந்தமான நோய்களுக்கு அளிக்கப்படும் மருந்துகளைப் பற்றி ஆராய, நோபல் பரிசு பெற்ற பேராசிரியர் டி. ரெய்ச்ஸ்டன் கீழ் இரண்டு ஆண்டுகள் ஆராய்ச்சி செய்ய ஸ்விட்ஸர்லாந்துக்கு இவரை அனுப்பியது. அங்கு இனிய மணம் கமழும் செவ்வலரிச் செடியின் பட்டையை ஆராய்ந்து, எட்டுவிதப் பொருட்கள் அதில் இருப்பதைப் பகுத்துக் காண்பித்து, அவற்றில் இரண்டின் முழு அமைப்பையுமே விளக்கினார். பாஸல் சர்வகலாசாலையில் மற்றொரு டாக்டர் பட்டம் பெற்றார். இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும், ஆந்திர சர்வகலாசாலையில் இத்துறை ஆராய்ச்சிக்கு மிகுந்த ஊக்கமும் உழைப்பும் நல்கினார். இங்கு ஆராய்ச்சி நடத்துகையில்தான் டாக்டர் ரங்கசாமி, “பெருவோஸைட்” டைக் கண்டு பிடித்தார். 1963ல் டில்லி சர்வகலாசாலை ரசாயனப் பகுதியில் புதிதாகத் தொடங்கிய ஆராய்ச்சிப் பகுதிக்குத் தலைமைப் பேராசிரியராக வந்து சேர்ந்தார்.

டாக்டர் ரங்கசாமியின் ஆராய்ச்சிகள் பல மேனாட்டு அறிஞர்களின் பாராட்டுக்களைப் பெற்றிருக்கின்றன. அவரது ஆராய்ச்சிக் கட்டுரைகள் மேனாடுகளில் பிரசுரமாகியுள்ளன. பல மேனாட்டு விஞ்ஞான ஆராய்ச்சி மாநாடுகளில் கலந்துகொண்டிருக்கிறார். தமது வாழ்க்கையைச் செம்மைப்படுத்தியவர் என்று டாக்டர் சேஷாத்திரி அவர்களை இன்றும் நன்றியுடன் நினைவுகூருகிறார். ஆராய்ச்சி புரியும் நேரம் போக, மற்ற வேளைகளில் பக்திப் பாடல்கள் கேட்பதில் அவருக்கு ருசியுண்டு.—ஆதாரம்: **‘ஹிந்து’**

சிறப்புச் சிறுகதை

# மலர்ச்சி

எல்லார்வி

லீலா தெரு வாசலில் கோலமிட்டுக் கொண்டிருந்தாள். வீட்டு வேலைகளில் யார் எதைச் செய்தாலும் அவளுக்குக் கவலை இல்லை; இந்தக் கோலமிடும் பணியை மட்டும் அவள் யாருக்கும் விட்டுக் கொடுக்க மாட்டாள். புதிய புதிய கோலங்களை எங்கெங்கிருந்தோ தேடிப் பிடித்தும், ஒன்றிலிருந்து இன்னொன்றை ஊகித்துக் கற்பனை செய்து உருவாக்கியும் அமைப்பதில் அவளுக்கு ஓர் ஆர்வம். அவளுடைய இந்தத் திறத்தைப் பெரியவர்கள் பாராட்டுவார்கள்; சிறுவர் சிறுமியர்கள் கண்டு வியப்பார்கள்; சம வயதுப் பெண்கள் தங்களுக்கும் கற்றுத் தருமாறு நச்செடுப்பார்கள். அவள் உள்ளம் பெருமிதத்தால் பூரிக்கும்.

அன்றும் அப்படித்தான். புதியதொரு கோலத்தை மனத்திலே உருவாக்கிக்கொண்டு அதற்கான புள்ளிகளை மளமளவென்று அமைக்கலானாள்.

மெல்ல ஊர்ந்து வந்த டாக்ஸி அவளை அணுகியதும் நின்றது. அதே நேரத்தில் லீலாவும் கோலத்தைப் போட்டு முடித்து நிமிர்ந்தாள். டாக்ஸியிலிருந்த வாலிபன் அந்த வீட்டின் கதவிலுள்ள எண்ணைப் பார்த்தான். லீலா பின்னடைந்து படியேறி நின்று வாலிபனை நோக்கினாள்.

''சிவசாமியின் வீடு இதுதானே?''

கவர்ச்சி மிக்க அவன் நயனங்களையே பார்த்துக்கொண் டிருந்த லீலா, ''அ - ஆமாம்'' என்றாள்.

வாலிபனின் முகத்தில் புது மலர்ச்சி பளிச்சிட்டது. வண்டியை விட்டு இறங்கினான். வாடகையைக் கொடுத்து விட்டுப் பெட்டியையும் 'ஹோல்டா'லையும் இரு கைகளிலும் எடுத்துக் கொண்டு முன்னேறினான். லீலா உள்ளே ஓடினாள்.

கைப் பொருள்களைக் கூடத்தில் வைத்துத் திரும்பிய அவன் லீலாவைப் பார்த்து, ''நீ.... லீலாதானே ?'' என்றான்.

லீலா, 'ஆம்' என்று தலையசைத்தாள்.

''என்னை.... உனக்கு.... நினைவில்லே?''

''பார்வதி அத்தையின் பிள்ளை....!''

''கரெக்ட்!.... ஆனால் பார்வதி அத்தைக்கு மூன்று பிள்ளைகள்; தெரியுமோ இல்லையோ ?'' என்று கேட்டு விட்டு அவன் சிரித்தான்.

'தெரியும்' என்று தலையசைத்த அவள், 'மூவரில் நீங்கள் பெரிய பிள்ளை மோகன்' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டாள்.

'' மாமா எங்கே? இன்னும் எழுந்திருக்கவில்லையா?''

''ஊரில் இல்லே.''

''ஓகோ !.... மாமியையும் காணுமே?''

''கறிகாய் வாங்க மார்க்கெட்டுக்குப் போயிருக்கிறாள்.''

''குழந்தைகள்?''

'' 'டியூஷன்' படிக்கப் பக்கத்துத் தெருவுக்குப் போயிருக்கிறார்கள்.''

''சரியாய்ப் போயிற்று!'' என்று அவன் சட்டையைக் களையத் தொடங்கினான். அவனும் தானும் தனிமையில் இருக்கிறோம் என்ற உணர்வு அப்போதுதான் வரப்பெற்றவள் போல் லீலா சமையல் அறையை நோக்கி விரைந்தாள்.

'பல் பசையை' எடுத்துக் கொண்டு முற்றத்தை நோக்கி வந்த மோகனின் பார்வையில் கூடத்தில் மாட்டியிருந்த மாமா மாமி குழந்தைகளின் படங்கள் பட்டன. சற்று நின்று அவற்றையே உற்று நோக்கினான். என்ன என்னவோ நினைவுகள் மனத்தில் எழுந்தன. அவற்றை அசை போட்டபடி பல் துலக்கச் சென்றான்.

'....சிவசாமி மாமா ஆயிரத்தில் ஒருவர். தம் சுகம் கருதாது உடன்பிறந்தோர் நலனே பெரிதாக நினைத்துப் பணத்தாலும் செய்து, உடலாலும் உழைத்து, மனத்தாலும் இறைவனை வேண்டுபவர் எத்தனை பேர் ? இப்படிப்பட்ட தமையனை எடுத்தெறிந்து பேசிப் பகைத்துக் கொண்டாளே அம்மா ! 'முன்னெல்லாம் நல்லவன்தான்; இளையாள் மோகம் அவனைக் கெடுத்துவிட்டது!' என்று வாய் ஓயாது புலம்புகிறாள். உண்மையில் மீனாட்சி மாமி, மாமாவைவிட அன்பைப் பொழிபவள். அம்மா உடம்புக்கு வந்து படுக்கையில் விழுந்தாலும் விழுந்தாள் ; அவள் இயல்பே தலைகீழாய் மாறிப் போய் விட்டது. நல்லவர்கள் எல்லாரும் பொல்லாதவர்களாகப்படுகிறார்கள் அவளுக்கு! மாமா என்ன, மாமி என்ன? இந்த லீலா — இவளுடைய பார்வை, பேச்சு, சிரிப்பு எல்லாமே அன்பு மயமாக இருக்கின்றன. மல்லிகையின் மணம் போல் உள்ளத்திலே மென்மையாகப் பரவி நிறையும் அமைதியான அழகுடையவள் லீலா' —

அவன் கூடத்தில் வந்து முகத்தைத் துடைத்துக் கொண்டு கட்டிலில் அமரவும் லீலா டபரா தம்ளரில் காப்பியுடன் அங்கே வரவும் சரியாக இருந்தது. அதே நேரத்தில் மீனாட்சியும் கறிகாய்ப் பையுடன் உள்ளே வந்தாள். கூடத்துக் காட்சி அவளை அடுத்த அடி வையாமல் அப்படியே அசைவற்று நிற்க வைத்தது.

''அட!.... மோகனா!....''

லீலாவிடமிருந்து வாங்கிய டபரா தம்ளரை அப்படியே கீழே வைத்துவிட்டு எழுந்த மோகன் மாமியின் காலடியில் நெடுஞ் சாண்கிடையாக விழுந்து வணங்கினான்.

''என்னால் நம்பவே முடியவில்லையே!'' என்ற மீனாட்சி பையை லீலாவிடம் கொடுத்துவிட்டுத் தரையில் உட்கார்ந்து கொண்டாள். அவள் வாயெல்லாம் சிரிப்பு நிறைந்திருந்தது. அது அவள் உள்ளத்தின் பூரிப்பைப் பிரதிபலிப்பதாக இருந்தது.

மோகன் கட்டிலில் உட்காராமல் மீனாட்சியின் எதிரே அமர்ந்துகொண்டு காப்பியை ஆற்றத் தொடங்கினான். அவன் முகத்திலும் புது மலர்ச்சி ஏற்பட்டது.

''ஊரில் எல்லாரும் சுகமா? அம்மாவின் உடம்பு எப்படி இருக்கிறது?''

''மற்றவர்கள் சுகமாகத்தான் இருக்கிறார்கள். அம்மாவின் உடம்புதான் ஒரு சமயம் இருப்பது போல் மறுசமயம் இல்லை.''

''மிகுந்த அநுபவந்தான், பாவம். மாமாவுக்கு எப்போதும் அம்மா நினைவுதான்.''

''மாமா இப்போது எந்த ஊருக்குப் போயிருக்கிறார்?''

''யாருக்குத் தெரியும்? கோயமுத்தூருக்குப் போனார்; கடிதம் போட்டார். அங்கிருந்து இப்போது எங்கே போயிருக்கிறாரோ! முன்பு பார்த்த வேலை இல்லை; பிரயாணப் பிரதிநிதியாக ஊர் ஊராய்ச் சுற்றுகிற வேலை.''

''ஓகோ!.... அங்கே அப்பாவுக்குக்கூட.. பங்களூர்க் கம்பெனி ஒன்றிலிருந்து வேலைக்கு அழைப்பு வந்திருக்கிறது. பானுவையுங்கூட வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்களாம். அம்மாவை இந்நிலையில் விட்டு விட்டு அப்பா எப்படிப் போவது? பானுவை மட்டும் அனுப்பலாம் என்று உத்தேசம்.''

''உனக்கு இங்கே உத்தியோகம் ஆகியிருக்கிறது, இல்லையா? போன வாரம் இங்கே வந்திருந்த துரை சொன்னான்.''

உத்தியோகம் என்றதும் அவனிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ''ஆம்! பத்து மணிக்குப் போய்ப் பார்த்து வேலையில் அமர வேண்டும்'' என்று எழுந்தான்.

மீனாட்சி எழுந்து சமையலறைப் பக்கம் சென்றாள். திரும்பி வந்து, ''வெந்நீர் தயாராக இருக்கிறது. குளி. அதற்குள் சமைய



னும் ஆகிவிடும்!'' என்றாள்? சொல்லிவிட்டு, 'குட்டி தலைசுற்றி ஆடுகிறாளே! 'அடுப்படிக்குப் போ' என்றாலே மூக்கால் அழுகிறவள் கண் மூடித் திறப்பதற்குள் எல்லாம் செய்து விட்டாளே!' என்று மனசுக்குள் எண்ணிக் கொண்டான்.

மோகன் குளித்து உணவருந்த உட்கார்ந்தான். மீனாட்சி அருகே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். லீலா பரிமாறத் தொடங்கினாள்.

''லீலாவுக்கு என்னைத் தெரியவே இல்லை, மாமி !''

''குழந்தையில் எப்போதோ பார்த்தது தானே ? அடிக்கடி வரத்து, போக்கு இருந்தால்தானே? 'கடன் கேளாது கெடும்; உறவு போகாது விடும்.''

பேச்சு குடும்பப் பூசலை எட்டிற்று. மோகன் முகம் கனித்தான்.

''அத்தான் என்னைச் சொல்கிறாரே ! இவரால் மட்டும் என்னை உடனே புரிந்து கொள்ள முடிந்ததா? யாரோ போல் வீடு விசாரித்தார்'' என்றாள் லீலா.

''ஏழு வயதில் பார்த்தது. மடமடவென்று வளர்ந்து விட்டாள் !''

''நீ?.... நீ மட்டும்?.... எனக்கே சட்டென்று அடையாளம் புரியவில்லையே !''

மோகன் கலத்தினின்றும் எழுந்தான்.

''சாப்பிடவே இல்லையே!...சங்கோசமா?'' என்றாள் மீனாட்சி.

மோகன், ''சே! சே! சங்கோசமா? என் சாப்பாடே இவ்வளவுதான். சமையல் நன்றாய் இருந்ததால் திட்டம் தெரியாமல் கூடுதலாகவே சாப்பிட்டு விட்டேன்'' என்றபடி கை கழுவச் சென்றான்.

''அது சரி; லீலா படிக்கவில்லையா?''

''எஸ். எஸ். எல். ஸி.யோடு நிறுத்தல். டைப் அடித்து வருகிறாள். பொழுது போக ஏதாவது வேண்டுமே!''

''ஏன் அப்படி அலுத்துக் கொள்கிறீர்கள் ?''

''பின்னே என்ன? உத்தியோகத்துக்கா போகப் போகிறாள்? யாராவது பாடி பரதேசியைப் பார்த்துக் கட்டிக் கொடுக்க வேண்டியதுதானே ?''

''பாடி — பரதேசி ! சரியான வார்த்தை ! பிச்சை எடுக்கும் பரதேசி பாடித்தான் ஆக வேண்டும். பாடும் பரதேசி, பாடி பரதேசி. குபேர சம்பத்து உடையவன் ஆனாலும் பெண்ணை மணப்பவன் பரதேசியாகியே தீர வேண்டும்; பரதேசக் கோலத்துக்குப் பிறகு தானே திருமணம் ?''

சொல்லிவிட்டு அவன் சிரித்தான்; மீனாட்சி சிரித்தாள்; லீலாவும் சிரித்தாள்.

அவன் உடுத்திக் கொண்டு கிளம்புவதற்கும் மீனாட்சி குழந்தைகள் உள்ளே வந்து நுழைவதற்கும் சரியாக இருந்தது. மோகனைப் பார்த்த அவர்கள் பிரமித்து நின்றனர்.

மீனாட்சி அவர்களுக்கு அவனை யாரென்று விளக்கினாள்.

மோகன் தன் பெட்டியருகே கிடந்த பையை எடுத்தான். இவ்வளவு நேரம் அவனுக்கு அதைப் பற்றின நினைவே இல்லை. அதில் சாத்துக்குடி, மலைப் பழம், சாக்லெட், பிஸ்கோத்து எல்லாம் இருந்தன.

உடனே அந்த இடம் நிர்த்தூளிப்படலாயிற்று. லீலா தலையிட்டு அமைதியை நிலைநாட்டினாள்.

ஃ ஃ ஃ

இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பினான் மோகன். காலையில் போலவே அவன் பண்டும் பரிகாசமுமாய்க் கலகலவென்று பேசிச் சிரித்துப் பழகினான்.

சிறுவர் சிறுமியர் கூடி மோகனைச் சூழ்ந்து கழுத்தைக் கட்டிக் கொண்டும், கையைப் பிடித்து இழுத்தும் கதை என்றும் பாட்டு என்றும் கணக்கு என்றும் பாடம் என்றும் தொந்தரவு செய்தனர். மோகன் சிரித்த முகம் மாறாமல் அவர்களின் தொந்தரவுகளுக்ெல்லாம் ஈடு கொடுத்தான். அப்போதைய அவனது சரளமான போக்கும் ஹாஸ்யமான பேச்சும் அனைவரையும் சிரிக்க வைத்தன.

மறு நாள் மாலை அலுவலகத்திலிருந்து திரும்பிய மோகன் சொன்ன செய்தி தாய் பெண் இருவரையுமே ஸ்தம்பிக்க வைத்தது.

''ஆபீஸின் அருகிலேயே அறை ஒன்று பார்த்திருக்கிறேன், மாமி! வாடகை முன் பணமும் கொடுத்து விட்டேன். அங்கேயே ஹோட்டலில் சாப்பாட்டுக்கும் ஏற்பாடு செய்துகொண்டு விட்டேன்.''

வறண்ட குரலில் மீனாட்சி கேட்டாள்: ''ஏன்?'' என்று. ''இவ்விடத்துச் சாப்பாடு பிடிக்கவில்லையா ? எங்களுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்கிற எண்ணமா ? மாமாவும் இல்லாத வீட்டில், வயதுப் பெண் வளைய வருகிற இடத்தில் தங்கியிருப்பது சரியன்று என்ற கருத்தா ? அல்லது அம்மா, அப்பா இதை விரும்பமாட்டார்கள் என்ற எண்ணமா? இங்கேயிருந்து ஒட்டிப் பழகினால் இந்த லீலாவை நம் தலையில் கட்டிவிடப் போகிறார்களே என்ற பயமா ?'' — தங்கு தடையின்றிப் படபடவென்று பொரிந்து தள்ளினாள் அவள்.

மோகன் 'ஓகோ' என்று சிரித்தான். அம்மா சொல்வது சரியாகவே இருக்கிறது. 'மீனாட்சி மன்னியிடம் கபடம் இல்லை. எதைப் பற்றியும் தானாகவே ஒரு முடிவுக்கு வந்து என்ன பேசுகிறோம் என்பதை எண்ணிப் பாராமலே வார்த்தைகளைக் கொட்டி விடுவாள்' என்று அடிக்கடி சொல்வாள். அது எவ்வளவு உண்மை !

''இப்போது நீங்கள் வரிசையிட்டு அடுக்கியவைகளில் ஒன்றுகூட இல்லை, நான் இங்கிருந்து வெளியேறுவதற்கு உரிய காரணம். திருமணங்கள் தெய்வ உலகிலேயே உறுதி செய்யப்படுகின்றன என்பது முதுமொழி. அதில் சத்தியம் இருக்குமானால், லீலாவுக்கும் எனக்கும் திருமணம் நடைபெற வேண்டிய தெய்வசங்கல்பம் இருந்தால் யார் குறுக்கிட்டாலும் நில்லாது. அப்பா அம்மாவுக்குப் பயம் இருந்தால் நான் இங்கே வந்திருக்கவே மாட்டேன். நெறியிலே நிற்பவர் பருவத்தைக் கண்டு அஞ்ச வேண்டியதே யில்லை. நல்ல சாப்பாட்டை விட்டுப் போகிறோமே என்று என் மனத்தில் இருக்கும் வருத்தத்தை எப்படி வெளியிடுவது?

''மூன்று பஸ் மாறி, சுமார் ஒன்றரை மணி நேரம் பிரயாணம் செய்து, இங்கும்

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

சிறியோர், பெரியோர் யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் நோய்களால் நான் அவதிப் பட்டுக் கொண்டிருந்தேன்.. உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்....இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 நபர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத்தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது."

—ஆதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளையெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல்துலக்குகிறார்கள்".

—எஸ். எம். லால், புது டில்லி.

# போர்ஹான்ஸ்

## பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் தேத் பிரஷையும் உபயோகியுங்கள்.... உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம். தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டென்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

K 6

பெயர் ______________________

விலாசம் ______________________

______________________

மொழி ______________________

14F-202 TAM

அழுகுமாக நடந்து ஒன்பதரை மணிக்குள் ஆபீசுக்குப் போய்ச் சேர முடியாத ஒரே ஒரு காரணத்தை முன்னிட்டுத்தான் நான் இங்கிருந்து வெளியேறுகிறேன். மேலும், காலையிலும் மாலையிலும் நீண்ட பிரயாணம் உடம்பைப் பாழ் செய்து விடாதா? இங்கிருந்து காலை ஆறு மணிக்கே சாப்பிட்டு விட்டுப் போக முடியுமா? இதையெல்லாம் நீங்கள் யோசிக்க வேண்டும்.''

''உண்மைதான்'' என்ற சொல் மீனாட்சியிடமிருந்து பெருமூச்சுடன் கலந்து வெளி வந்தது. லீலாவுக்கு அழுகையும் ஆத்திரமும் வந்தன.

''லீவு நாட்களிலாவது இந்தப் பக்கம் வருவாயோ மாட்டாயோ?''

''அது என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? நிச்சயமாக வருவேன்!''

அந்த அளவில் மீனாட்சி தன் அஞ்ஞானத்தைக் குறைத்துக் கொண்டாள்.

மோகன் பெட்டி படுக்கையுடன் டாக்ஸியில் கிளம்பினான். குழந்தைகளிடமும் மாமியிடமும் விடைபெற்ற அவன் லீலாவை நோக்கினான். அவள் கண்கள் கலங்கியிருப்பதைக் கண்டான். அவன் மனமும் குழம்பியது. அவள் அருகே சென்றான். ''நான் என்ன அக்கரைச் சீமைக்கா போகிறேன்? அடிக்கடி வருவேன். வருத்தப்படாதே, லீலா! நான் வரட்டுமா?'' என்றான்.

அவள் குனிந்த தலை நிமிராமல் தலை அசைத்தாள்.

ஃ ஃ ஃ

**வெ**றிச்சோடிய மன நிலையில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கத் தெம்பற்றுச் செயலிழந்து உட்கார்ந்து கிடந்த தாயார், மகள் இருவரின் கவனத்தையும் வாசலில் கேட்ட டாக்ஸியின் சத்தம் தட்டி எழுப்பிற்று. 'மோகன் திரும்பி வந்து விட்டான்!' என்று இருவரும் எழுந்து தெருப்பக்கம் விரைந்தனர். சிவசாமி பெட்டி படுக்கையுடன் உள்ளே வந்தார். லீலா பெட்டியை வாங்கிக் கொண்டாள்; மீனாட்சி படுக்கையை வாங்கிக் கொண்டாள்.

''சில நிமிஷங்கள்தான் வித்தியாசம்!'' என்றாள் மீனாட்சி.

''எதற்கு?'' என்று நிதானமாகக் கேட்டுக் கொண்டே சட்டையைக் களைந்த சிவசாமி, ''குளிக்க வெந்நீர் போடு அம்மா!'' என்றார் லீலாவை நோக்கி.

''சற்று முன்புதான் உங்கள் மருமகன் டாக்ஸி ஏறிப் போகிறான்.''

''மருமகனா? எந்த மருமகன்?''

மீனாட்சி மோகனைப் பற்றிய செய்திகளைச் சொன்னாள். சிவசாமி அனைத்தையும் ஆர்வத்தோடு கேட்டார். ''நாளைக்கே நான் வெளியூர் போகிறேன். மோகனைப் பார்க்க வேண்டுமே! முகவரி இருக்கிறதா?'' என்று வினவினார். லீலா முகவரியைக் கொடுத்தாள்.

சிவசாமி குளித்து உணவு கொண்டு இளைப்பாறினார். மீனாட்சி தக்க சமயத்தை எதிர்பார்த்துத் தன் உள்ளக் கிடக்கையை வெளியிட்டாள். சிவசாமி அனைத்தையும், 'உம்' கொட்டிக் கேட்டுக் கொண்டிருந்தாரே தவிர எதுவும் பேசவில்லை.

''கதை கேட்கிறீர்களா? வாயே திறக்க மாட்டேன் என்கிறீர்களே!''

சிவசாமி சிரித்தார். ''நான் பேச என்ன இருக்கிறது? திருமணத்தை நீ நிச்சயித்துவிட்டாய். முகூர்த்த நாளையும் நீயே நிர்மானித்து விடு. கல்யாணத்தை அமோகமாக நடத்து. நானும் கலந்து கொள்கிறேன்.''

அவர் பேச்சின் போக்கு அவளுக்குத் திகைப்பை உண்டுபண்ணிற்று.

''என் பேரில் கோபமா?''

''சே, சே! எதற்குக் கோபம்? அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை.''

''என்னவோ அஞ்ஞானம்; குழந்தை மடமடவென்று வளர்ந்து நிற்கிறாள். அங்கே இங்கே என்று தேடி அலையாமல் வாகாக ஒரு வரன் கிடைக்கிறதே என்றுதான்; பையன் அழகாகவும் குணசாலியாகவும் இருக்கிறானே என்றுதான்.''

''நியாயம் மீனாட்சி, நியாயம். தாயாரின் பொறுப்பு என்பது இலேசா?''

''லீலாவும் அவனை விரும்புகிறாள்; அவனுக்கும் இவளிடம் பிடிப்பு இருக்கிறது. அதனாலேதான் என் மனம் பைத்தியம்போல் இப்படி.......''

''எல்லாம் சரிதான் மீனாட்சி. எல்லாவற்றிலும் நீ கொள்கிற அவசரத்தை இந்தக் காரியத்திலும் காட்டுகிறாயே, அதுதான் சரியில்லை. இரு குடும்பங்களுக்கும் இடையே பிளவு ஏற்பட்டுப் பல காலம் ஆயிற்று. போக்குவரத்தே அடியோடு நின்றுபோயிருந்தது. பெற்றோர் அநுமதித்தோ, அநுமதியாமலோ பையன் இங்கே வந்திருக்கிறான். திருமணம் என்பது விளையாட்டா? ஆற அமர யோசித்து இறங்க வேண்டிய செயல் இல்லையா? ஆகட்டும், பார்க்கலாம்.''

கணவரின் அறிவுரை சரி என்றே மனைவிக்குப் பட்டது. மறைவில் இருந்த மகளுக்கு அப்பாவின் பேச்சுப் புதுமையாக இல்லை.

சிவசாமி மாலையில் மருமகனைப் பார்க்கச் சென்றார். நெடுநேரம் அவனோடு பேசிக் கொண்டிருந்து விட்டுத் திரும்பி வந்தார். உருப்படியான செய்தி ஏதாவது சொல்வாரோ என்று மீனாட்சி எதிர்பார்த்து ஏமாற்றம் அடைந்தாள். அவர் தம் இயல்பின்படி அமைதியாக இருந்துவிட்டு மறுநாள் கிளம்பி வெளியூர் சென்றார்.

ஃ ஃ ஃ

**ஞா**யிறு வந்தது. ''இன்று மோகன் வருவான்'' என்றாள் மீனாட்சி. ''எனக்கு நம்

பிக்கையில்லை'' என்றாள் லீலா, குரலில் ஏக்க உணர்ச்சி இழையோட.

அவள் நினைத்ததே சரியாயிற்று. ''புது இடம். வேலையில் சேர்ந்த புதிது. என்ன வேலையோ, எத்தனை தொல்லையோ!'' என்று மீனாட்சி சமாதானம் செய்து கொண்டாள். ஆனால்....

அடுத்த ஞாயிற்றுக்கிழமையும் அவன் வரவில்லை.

அடுத்தடுத்து லீவு நாட்கள் வந்து போயின.

மீனாட்சி பொறுமையை இழந்தாள். சிறுவன் குமாரை உடன் அழைத்துக்கொண்டு மோகனைக் காண அவன் அறைக்குச் சென்றாள். ''....மோகனா? ஒரு வாரத்துக்கு முன் தந்தி ஒன்று வந்தது. தாயின் உடல் நிலை மோசமாக இருக்கிறது என்று. அன்று கிளம்பி ஊருக்குப் போனார்; இன்றுவரையில் தகவல் இல்லை'' என்று அடுத்த அறையில் இருப்பவர் சொன்னார்.

மீனாட்சி தொங்கிய முகத்துடன் வீடு திரும்பினாள். அவள் உள்ளத்தில் ஆயிரமாயிரம் கேள்விகள் எழுந்து மோதின.

மின்னல் ஒன்று தோன்றியது; தோன்றிய வேகத்தில் மறைந்தது.

ஃ ஃ ஃ

சிவசாமியும் மீனாட்சியும் கேசவபுரத்திலிருந்து சென்னை திரும்பிக் கொண்டிருந்தனர். ரயில் சக்தி இழந்த நிலையில் மெல்ல ஊர்வதுபோல் இருந்தது மீனாட்சிக்கு. அடிக்கடி அலுத்துக் கொண்டாள். அந்த அலுப்புக்குக் காரணம் ரயில் மெதுவாக ஊர்ந்தது மட்டும்தானா?

கேசவபுரத்திலிருந்து பார்வதி காலமாகி விட்டதாகத் தபால் வந்தது. சிவசாமி ஊரில் இல்லையே, எப்போது வருவாரோ என்று மீனாட்சி கவலைப்பட்டாள். நல்ல வேளையாக, சிவசாமி மறுநாளே சுற்றுப் பயணம் முடிந்து வந்தார்.

தந்தி வந்து மோகன் ஊருக்குப் போன செய்தியையும், பார்வதி காலமான செய்தியையும் ஒரே நேரத்தில் சொன்னாள் மீனாட்சி.

இரு நிகழ்ச்சிகளுக்கும் நடுவே சுமார் பதினைந்து நாட்கள் இடைவெளி யிருப்பதை எண்ணிப் பார்த்தார் சிவசாமி. தாம் அப்போது சென்னையில் இருந்திருந்தால் கேசவபுரம் சென்று, பகையை மறந்து, தங்கையை உயிரோடு பார்த்திருக்கலாமே என்று எண்ணினார். தங்கையை நினைந்து அவர் கண்ணீர் உகுத்தார். தம் மனைவியுடன் சிவசாமி புறப்பட்டுச் சென்றார்.

மாமா, மாமி இருவரையும் பார்த்து மோகன் குலுங்கிக் குலுங்கி அழுதான். அவன் தம்பிமாரும் கதறித் தீர்த்தனர். அவர்களின் தந்தை குருமூர்த்தி மைத்துனரைக் கட்டிக் கொண்டு விம்மினார். முதல் வேகம் அடங்கிய பின்னர் அவர் சொன்னார்:

''சிவசாமி, பெரும்பாலும் குடும்பச் சண்டைகள் பெண்களாலேதான் தோன்றி வளர்கின்றன. பார்வதி படபடப்பு மிகுந்தவள். அதற்குக் காரணம் அவளது உடலிலும் உள்ளத்திலும் இருந்த பலவீனம்தான். அதனாலேயே நான் அவளை அதிகம் கண்டிப்பதில்லை. அவள் கதை முடிந்தது.

''அவளுக்காக, வேலையை விட்டுக் கட்டிக் காத்துக் கொண்டு இதுவரை இங்கே இருந்தேன். காரியங்கள் முடிந்தவுடன் பாலுவுடன் பங்களூர் போவதாக இருக்கிறேன். வீட்டை விற்று, இவ்விடம் ஜாகையைக் காலி செய்து விடுகிறேன். குழந்தைகள் சென்னையில் உங்கள் நிழலில் இருக்கட்டும். நீங்கள்தான் இனி அவர்களுக்குத் தாயும் தந்தையும்!''

மறைவில் இருந்து இதைச் செவிமடுத்த மீனாட்சியின் உள்ளத்தில் அப்போதைய துயர உணர்ச்சியின் இடையேயும் மகிழ்ச்சி இடம் பெற்றது.

எழிலின் வடிவமாய் மங்கையொருத்தி காப்பி எடுத்துக் கொண்டு அங்கே வந்தாள். பரந்த தலையும் கலைந்த உடையுமேகூட அவள் எழிலை எடுத்துக் காட்டின. குருமூர்த்தி அவளைச் சுட்டிக்காட்டி, சிவசாமியிடம் சொன்னார்.

''பக்கத்துத் தெரு கப்புரத்தினத்தைத் தெரியுமல்லவா? அவருடைய மைத்துனர் கணேசனைக்கூடத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். சங்கரன்கோட்டையில் வியாபாரம் செய்து வருகிறார். அவருடைய பெண் இவள்; கல்யாணி.''

''ஓகோ!....'' என்றார் சிவசாமி அசட்டையாக. ஆனால் அப்பால் மறைவிலிருந்த மீனாட்சியிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

''மோகனுக்குத் தந்தி கொடுத்தபோதே உங்களுக்கும் கொடுத்திருக்கலாம். அப்போது பார்வதியின் உடல்நிலை அத்தனை மோசமாக இல்லை; மேலும், மெலிந்த உடல் நிலையில் உங்களைப் பார்த்ததும் அவளிடம் ஓர் ஆவேசம் ஏற்பட்டு அதனால் ஏதாவது விபரீதம் நேர்ந்துவிடுமோ என்று ஐயம் வேறு.

''பிள்ளையைக் கண்டதும் முதல் காரியமாக அவள் அவனது திருமணம் பற்றிப் பேசினாள். தன் கண்ணும் கருத்தும் சரியாக இருக்கிறபோதே பிள்ளையை மணக்கோலத்தில் காண வேண்டும் என்றாள். சுப்புரத்தினம் தம் மைத்துனர் பெண்ணைப் பற்றிப் பேசினார். பேச்சு வளர்ந்தது. திருமணம் உறுதியாயிற்று.

''திடீரென்று பார்வதியின் நிலை மோசமாயிற்று. யாருக்கும் அழைப்பு அனுப்பவோ, நிதானமாக ஒன்று செய்யவோ அவகாசம் இல்லை. பரபரவென்று செயல்கள் நடந்தன. திருமணம் நிறைவேறிற்று. மறுநாள் விடியற்காலையில் பார்வதி கண்ணை மூடி விட்டாள்!''

''போகிறது. தன் ஆவல் நிறைவேறின திருப்தியோடு அவள் கண் மூடினாளே!'' என்றார் சிவசாமி.

மீனாட்சி பல்லைக் கடித்தாள். 'அவர் சொல்லி வாய் மூடுமுன்னால் இவர் அதை ஆமோதிக்கிறாரே! கொஞ்சம்கூட....' என்று கணவரைக் கடிந்து கொண்டாள்.

ஃ ஃ ஃ

அன்று இரவு சிவசாமியும் மீனாட்சியும் சென்னைக்கு ரயில் ஏறினார்கள். பிரயாணம் அவளுக்கு அலுக்காமல் எப்படி இருக்கும்?

அலாதியாக...ஆனால்
தனிச்சிறப்புடன் திகழ

# பின்னியின்
# ஹாலிடே & BD.636
## ஷர்ட்டிங்குகள்

பின்னியின் அசல் டிசைன்களான ஹாலிடே,
BD636 ரகங்களையே கேட்டு வாங்குங்கள். அவை
விசேஷ அழகும் வேறுபாடும் தருகின்றன.
நுல்லியமான மெல்லிழையால் நெய்தவை,
*முன்னதாகவே சுருக்கப்பட்டு மெர்ஸிரைஸ்
செய்யப்பட்டவை. தூய வெள்ளை,
மற்றும் பல வண்ணங்களில் கிடைக்கின்றன.

* Registered user of the
·SANFORIZED·
Trade mark

# பின்னி
-துணி உலகிலே
புகழ்பெற்ற பெயர்

AUTHORISED STOCKIST OF BINNY FABRICS

உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் உள்ள அங்கீகாரம் பெற்ற விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்.



BAY-4508

ஆள் எவ்வளவு மாறி விட்டி ருந்தான்

எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் உல்லாசமாக இருந்த என் மகனு இவன்! பழைய முகமலர்ச்சி எங்கே, உல்லாசம் எங்கே, படிப்பில் அவனுக்கிருந்த அக்கறை எங்கே என்றெல்லாம் எண்ணி எண்ணி வருந்திக் கொண்டிருந்தேன்.





அவர் சொன்னபடி செய்தேன். என் மகன் மீண்டும் பழைய ஆளாகிவிட்டான்! உற்சாகமும் ஊக்கமும் நிறைந்து, எப் பொழுதும் துறு துறுவென்று துடிப்பாக இருக்கிறான். அவனுக்கு ஹார்லிக்ஸ் கொடுத்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று!

ஆடைச் சத்து நிறைந்த பாலுடன், கோதுமை மாவு, மால்ட்டட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்து கூடியது

# எவ்வளவு பெரிய மாற்றத்தை தருகிறது ஹார்லிக்ஸ்!






# ஹார்லிக்ஸ்

அதிக சக்தியை அளிக்கிறது!

சக்தி இல்லாமையால், குழந்தைகள் எதிலும் அக்கறை இல்லாமல் சலித்துப் போயிருப்பார்கள். செலவழிந்த சக்தியை மீட்டுத்தருவதற்குப் போதுமான போஷாக்கு, அவர்களுக்கு வழக்கமான ஆகாரத்தில் கிடைக்காமலி ருப்பதுதான் பெரும்பாலும் இதற்குக் காரணம். இங்கு தான் ஹார்லிக்ஸ் அருமையாக உதவுகிறது! பூரண போ ஷாக்குச்சத்துகொண்ட இயற்கை உணவுப் பொருள்களி லிருந்து, அவை விரைவில் சுலபமாக ஜீரணமாகும்படி யாக விசேஷ தயாரிப்பு முறையினால் உருவாக்கப்படுவது தான் ஹார்லிக்ஸ். அதை அருந்தியதும் உற்சாகம் கூடி சுறுசுறுப்புடன் விளங்கலாம். எனவேதான் குழந்தைகளு க்கும் பெரியவர்களுக்கும் ஹார்லிக்ஸ் கொடுக்கும்படி டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள்.

# அவள் கதை!

## வாழ்க்கைச் சித்திரம். 11

உறவுக் கென்றொரு கதை சொன்னாள்; - என்
உணர்வுக் கென்றொரு கதை சொன்னாள்!
இரவுக் கென்றொரு கதை சொன்னாள்; - என்
இளமைக் கென்றொரு கதை சொன்னாள்!
நிறைவுக் கென்றொரு கதை சொன்னாள்; - என்
நெஞ்சுக் கென்றொரு கதை சொன்னாள்!
வரவுக் கென்றொரு கதை சொன்னாள்; - என்
வாழ்வுக் கென்றொரு கதை சொன்னாள்!




தமிழழகன்

'...துக்கத்துக்கு வந்து விட்டுப் போகிற போது, 'போய் வருகிறேன்' என்று சொல்லிக் கொள்ளக் கூடாது என்பார்கள். கல்யாணி அழகான பெண். குணசாலியாகவும் இருப்பாள் என்று தோன்றுகிறது? சிறுமாறு என்னுமல் வைத்துக் கொண்டு குடும்பம் நடத்து. பட்டணத்தில் ஜாகை வைத்தால் என்னால் முடிந்த வரையில் கவனித்துக் கொள்கிறேன்.' —

இவ்வாறு மோகனிடம் சொல்லி விட்டுக் கிளம்பினாலும் ரயிலில் அமர்ந்ததும் மீனாட்சியின் மனதில்அழுகையும் ஆத்திரமும் அலைமோதத் தொடங்கின. அவளுடைய அந்த உணர்ச்சிகளை மேலும் வளர்க்கிற முறையில் சிவசாமி வாயைத் திறவாமல் 'சிவமே' என்று அமர்ந்து கிடந்தார்.

அவர் ஏதாவது பேசினால் தனக்குச் சற்றே ஆறுதலாக இருக்கும் என்று அவள் நினைத்தாள். குறிப்பாக, லீலா — மோகன் —கல்யாணி பற்றி அவர் பேச வேண்டும் என்று அவள் உள்ளம் விரும்பிற்று. அவ்வாறின்றி அவர் வேறு ஏதாவது பேசினால் கூடத் தான் வலிய அந்தப் பேச்சை இணைக்கலாம் என்றும் நினைத்தாள். அவரோ சோதனை செய்பவர் போல், வஞ்சம் தீர்த்துக் கொள்பவர் போல் கம்மென்று இருந்தார்.

கம்மென்று இருந்தாரா? கடைக்கண்ணால் மீனாட்சியைப் பார்த்து அவள் படுகிற அவதியைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தார். அவள் ஏன் அந்தப் பாடுபடுகிறாள் என்பதை ஊகித்து உணர்ந்தும் இருந்தார். அவளுக்காக இரங்கினார். ஒரு முறை அவள் அவரைப் பார்த்து முகத்தைச் சிணுங்கிய போது அவர் வந்த சிரிப்பை அடக்கமாட்டாமல் குபீரென்று சிரித்துவிட்டார்.

''தங்கையைப் பறிகொடுத்த தமையனின் செயலா இது ?''

''என்ன?''

''எதற்குச் சிரித்தீர்கள் ?'

''இது ஒரு குற்றமா ?''

''குபீரென்று சிரிக்கக் காரணம்?''

''உலகத்தின் போக்கை நினைத்தேன்; சிரிப்பு வந்தது.''

''சொந்த மருமகனின் திருமணம் மாமாவுக்கு அறிவிக்கப்படாததை எண்ணியா?''

மறுபடியும் சிவசாமி சிரித்தார். ''நான் நினைத்தது சரியாகி விட்டது. எது பற்றிப் பேசினாலும் நீ அது பற்றித்தான் பேசுவாய் என்று எனக்குத் தெரியும். ரயிலில் ஏறினது முதல் நீ விடுகிற பெருமூச்சுக்களையும் படுகிற அவஸ்தைகளையும் கவனித்துக் கொண்டு தானே வருகிறேன் ?''

''என் நிலை உங்களுக்குக் கேலியாக இருக்கிறது: அதனால்தான் அப்படிக் குபீர் என்று சிரித்தீர்கள் — இல்லையா ?''

சிவசாமி மீண்டும் சிரித்தார். ''நூற்றுக்கு நூறு உண்மை. இல்லாததையும் பொல்லாததையும் கற்பனை செய்து கொண்டு அவதிப்படுகிறவர்களைப் பார்த்துச் சிரிக்காமல் என்ன செய்வது? முன்பே நான் சொன்னேன்; நீ பொருட்படுத்தவில்லை. அப்போதாவது ஒரு நிலை உண்டு; பொருள் உண்டு. இப்போது... நான் என்ன? யாருமே சிரிக்கத் தான் செய்வார்கள், உன்னுடைய நிலையை அறிந்தால்.

''குத்துவிளக்குப் போல் மனைவி வாய்த்திருக்கிறாள் மோகனுக்கு. அதை எண்ணி எண்ணி மகிழ்வதை விட்டு... அப்படி யாவது மோகனோ, அவன் பெற்றோரோ நமக்கு உறுதிமொழி கொடுத்து மாறிவிட்டார்களா ? எல்லாம் நீயாகச் செய்து கொண்ட கற்பனைதானே ? லீலாவுக்கு மோகனை விட்டால் உலகில் வேறு யாருமே கிடைக்கமாட்டார்களா? 'கிடக்கிறது' என்று தள்ளுவாயா, அதைவிட்டு....''

கிண்டலும் கேலியுமாகப் பேச்சைத் தொடங்கினாலும் முடிவில் பொன்னே போல் சிவசாமி உதிர்த்த சில ஆறுதல் மொழிகள் மீனாட்சிக்கு மிகவும் இதமாக இருந்தன. சிறிது நேரம் பொறுத்து, ''உண்மைதான்; நீங்கள் சொல்வது மிகவும் சரி !'' என்றாள்.

அவள் முகத்தில் சிறுகச் சிறுகத் தெளிவு கூடலாயிற்று.

(இன்னும் வரும்)

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 20-00 | 10-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40-00 | 20-00 |
| | இலங்கை நாணய மதிப்புப்படி | |
| இலங்கை | 21-00 | 10-50 |

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

மானேஜர் :

கல்கி காரியாலயம் :: சென்னை -10



# மனம் தளராதே

"பாவம்! ஆண்டவன் இந்தப் பின்ளைக்கு மூன்றாவது வயதிலேயே கண்களைப் பிடுங்கிக் கொண்டு விட்டான்!"

"கண் தெரிந்தால் இந்த வயதில் இவன் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருப்பான்!"

"இவனை யொத்த பையன்கள் இப்பொழுது மூன்றும் வகுப்புப் படிக்கிறார்கள்!"

"இவனோ பெற்றோருக்குப் பாரமாயிருந்து கொண்டிருக்கிறான். போதாக் குறைக்கு ஏழைமை வேறு!"

"நன்றாய்ச் சொன்னாயே! கோழிக்குத் தன் குஞ்சு பாரமாயிருப்பதுண்டா?"

"அதற்குச் சொல்லவில்லை. பெற்றோர் காலத்துக்குப் பின் இவன் என்ன என்ன கஷ்டங்கள் படவேண்டியிருக்குமோ? அந்த ஆற்றாமையினால்தான் சொல்லுகிறேன்!"

இப்படிப் பலர் பலவாறாக அவன்மீது அநுதாபத்தைப் பொழிந்து கொண்டிருந்தார்கள். அநுதாபப்படுவதைத் தவிர அவர்களால் வேறு என்ன செய்ய முடியும்? ஆனால் இந்த அநுதாபச் சொற்கள் பார்வை இழந்த அந்தப் பாலகனின் மனத்தைப் பெரிதும் புண்படுத்தின. யோசித்துப் பார்த்ததில் பெற்றோருக்குப் பெருஞ்சுமையாக உயிர் வாழ்வதைக் காட்டிலும் உயிரை விட்டுவிடுவதே மேல் என்று தோன்றியது.

எண்ணத்தைச் செயலாற்றும் உறுதியுடன் மெதுவாகத் தட்டித் தடவிக் கொண்டு கொல்லைப்புறம் சென்றான். அங்கே ஒரு கிணறு. அந்தக் கிணற்றில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளத்தான் அவன் முன்னேறினான்!

"நில்! மேலே போகாதே. கிணறு இருக்கிறது. விழுந்து விடுவாய்!" என்று எச்சரித்தது ஒரு குரல். அந்தப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்த பெரியவர் ஒருவர்தான் அப்படி எச்சரித்தவர்.

"தெரியும். கிணற்றில் விழத்தானே நான் போய்க் கொண்டிருக்கிறேன்!" என்றான் பையன்.

"இந்தச் சின்னஞ்சிறு வயதில் அப்படி என்னப்பா உனக்கு விரக்தி வந்துவிட்டது? உயிரையே மாய்த்துக் கொள்ளத் துணிந்து விட்டாயே!" என்று அவன் கரத்தைப் பற்றிக் கொண்டு கேட்டார் பெரியவர்.

"எனக்கோ கண்ணும் கிடையாது. காசும் கிடையாது. பெற்றோருக்குப் பாரமாக இருப்பானேன் என்றுதான்...."

பையன் பேச்சைத் தொடர முடியாமல் இழுத்தான்.

"கண் இருந்தால் நல்லதுதான். ஆனால் கண் இல்லாதது தவறு ஒன்றும் இல்லையே! கண் இருந்தும் உலகத்தில் எத்தனையோ பேர்கள் கண் தெரியாதவர்களாக நடந்து கொள்ளுகிறார்கள். கண் இல்லாதிருந்தும் பலர் கண் படைத்தவர்களாக நடந்து கொள்ளுகிறார்கள். இதை ஒரு குறையாக எண்ணி மனத்தைத் தளர விடாதே!"—என்றார் பெரியவர்.

"கண் குருடாகி விடவே மனமும் குருடாகி விட்டது. என்னால் படித்து அறிவை வளர்த்துக் கொள்ளக்கூட முடியாதே!" என்றான் பையன்.

"யார் சொன்னார்கள்? கண் இல்லாவிட்டாலும் நீ படிக்கலாம்; பட்டம் பெறலாம். பெரிய பெரிய பதவிகள்கூட வகிக்கலாம். மனத்தைத் திரிய விடாமல் அடக்கி வை. புறக் கண் ஒளி தராவிட்டாலும் அகக் கண் ஒளி தரும்!" என்று அவன் மனத்தை மாற்றிய பின்னரே அந்தப் பெரியவர் நகர்ந்தார்.

தற்கொலை செய்து கொள்ளப் போனவன் திரும்பினான். உள்ளத்தை ஒருநிலைப்படுத்தி, நண்பர்களின் உதவி கொண்டு இஸ்லாமிய மறையான குர்ஆனைப் படித்தான்; மனப்பாடமே செய்தான். உள்ளத்திலே தெளிவு பிறந்தது. மேலே மேலே படித்துப் பல நூல்களைப் பயின்றான். பல பரீட்சைகள் கொடுத்தான். பி. எச்டி. பட்டம் முதற்கொண்டு பெற்றான். எத்தனையோ பல்கலைக் கழகங்கள், 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு அவனுக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்தன.

எகிப்து நாட்டு அரசாங்கத்தில் அவன் மந்திரியாகக்கூடப் பணியாற்றினான். அதுவும் என்ன மந்திரியாகத் தெரியுமா? கல்வி மந்திரியாக. ஏழைச் சிறுவர்களுக்கு இலவசக் கல்வி அளிக்கவும் மாணவர்களுக்கு வாழ்க்கையில் பயன்படும்படி கல்வி வசதி அளிக்கவும் அவன் செய்த காரியங்கள் உலகப் புகழ் பெற்றவை.

கண் போய் விட்டதே என்று கண்களைக் கசக்காமல் பெரியவர் சொல்லைக் கேட்டு வாழ்க்கையில் முன்னேறிய அவனை 1953ம் ஆண்டு யுனெஸ்கோவின் பொதுக் காரியதரிசியாகப் பணியாற்றுமாறு அழைத்தார்கள்.

ஆனால் அவன் பிறந்த மண், "எங்கள் தஹா ஹுஸேனை விட முடியாது!" என்று சொல்லிவிட்டது என்றால் அவன் புகழ் எத்தகையது? புறக் கண்ணை இழந்தபொழுதிலும் அகக் கண்ணின் ஒளி படைத்த டாக்டர் தஹா ஹுஸேன் எத்தனை எத்தனையோ பார்வை இழந்தவர்களுக்கு உலகம் போற்றும் வழிகாட்டி ஆவார். —ரா. வீ.

# பறவைக் காதலன்



இந்தாலி நாட்டு
நாடோடிக் கதை

ஒரு ராஜா; அவருக்கு ஒரு பெண். சிறு பிராயத்தில் தாயார் இறந்துவிடவே, ஒரு சிற்றன்னை வாய்த்தாள். அவளுக்கு அந்தப் பெண்ணைக் கண்டால் கட்டோடு பிடிக்காது. எனவே, அந்தப் பெண்ணைப் பற்றி அரச ரிடம் ஓயாமல் ஒழியாமல் ஏதாகிலும் கோள் சொல்லிக் கொண்டே யிருந்தாள். 'இந்தக் குற்றம் செய்தாள்; அந்தக் குற்றம்செய்தாள்' என்று. அரசனோ தன் பெண்ணை மிகவும் நேசித்தான். ஆயினும் தன் மனைவியை மீறி அவளால் நடக்க முடியவில்லை. அவள் விருப்பப் படி பெண்ணை ஒதுக்கி வைக்கத் தீர்மானித் தான். ஆனால் ஒரு நிபந்தனை விதித்தான், யாரும் அவளைத் துன்புறுத்தக் கூடாது என்று. ''அதைப் பற்றி நீங்கள் கவலைப் படாதீர்கள், நான் இருக்கிறேன், பார்த்துக் கொள்கிறேன்'' என்று அரசனுக்குச் சமா தானம் கூறி, அந்தப் பெண்ணைக் காட்டின் நடுவிலே உள்ள ஒரு கோட்டையினுள் அடைத்து வைத்தாள் அரசி. அவளுக்குக் காவலாகச் சில பெண்களை நியமித்தாள்.. இளவரசி கோட்டைக்கு வெளியே போகாத படி அவர்கள் காவல் புரிந்து வந்தனர்.

அரசன் மட்டும் அடிக்கடி பெண்ணைப் பற்றித் தன் மனைவியிடம் விசாரிப்பான். தான் அடிக்கடி போய்ப் பார்த்து வருவ தாகவும், அவருடைய மகள் மிகவும் சந் தோஷமாக இருப்பதாகவும் ஆறுதல் சொல் வாள் அரசி.

உண்மையில் அந்தக் கோட்டை அறையில் தன்னந் தனியாகப் பேச்சுத் துணைக்குக்கூட ஆளில்லாமல் அடைக்கப்பட்டிருந்ததால், இளவரசி சோகமே உருவானாள். சாளரத்தின் வழியே வெறித்துப் பார்த்தால் வெறும் வனாந்தரமே தென்படும். கூர்ந்து நோக்கினால் ஓர் ஒற்றையடிப் பாதை செல்வதும் தெரியும். வேட்டையாட வருபவர்கள் நடந்து நடந்து தேய்ந்ததனால் ஏற்பட்டது அது.

ஒரு நாள் ஓர் அரசகுமாரன் காட்டுப் பன்றி ஒன்றைத் துரத்திக் கொண்டு அவ்வழியே வந்தான். மஞ்சள் உடை அணிந்திருந்த அவன் வேடனைப் போல் தோற்றமளித்தான். கோட்டையை நெருங்கியதும் அவன் திகைத்து நின்றான். ஏனெனில் அங்கு மனிதர்கள் யாருமே வசிப்பதில்லை என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். கோட்டை யின் விளிம்பில் மக்கள் அணியும் ஆடை தென்பட்டதோடு, சமையற்கூடத்திலிருந்து புகை போக்கி வழியாகப் புகையும் வந்து கொண்டிருந்தது. சாளரம் வேறு திறந் திருக்கவே, பார்வையை ஓட்டினான். அழகான இளம் பெண் ஒருத்தி உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் உதடுகளில் ஒரு புன்னகை தோன்றியது. அதுவே பிரதிபலிப்பதுபோல் அவளும் பதிலுக்கு முறுவலித்தாள். இரு வருடைய விழிகளும் பேசத் தொடங்கின. இடையிலிருந்த தூரம் இருவரையும் பிரித் தாலும் ஒரு மணி நேரமும் இப்படியாக ஓடி விட்டது என்பதைப் புரிந்து கொள்ள அவர்களுக்கு நேரம் பிடித்தது.

மறுநாள் அரசகுமாரன் வழக்கம்போல் மஞ்சள் உடை அணிந்து அங்கு வந்து சேர்ந் தான். அன்று ஒரு மணி இரண்டு மணியாக வளர்ந்தது. பிரியும்போது இருவருடைய இதயங்களும் பரஸ்பரக் காதல் பிரமாணமே செய்து கொண்டன. மூன்றாவது நாள் மூன்று மணி நேரம் என்றும் நான் காவது நாள் நான்கு மணி என்று கணக்குப் போடக் கூடாது. ஏனெனில் திடீரென்று ''ஹஹ்ஹஹா, ஹஹ்ஹா''

என்று எங்கிருந்தோ ஒரு சிரிப்பொலி கேட்டது. அரச குமாரன் திரும்பிப் பார்த்தான். பக்கத்திலிருந்த மரத்தின் மறைவிலிருந்து ஒரு கிழவி வெளிப்பட்டாள்.

அவளைப் பார்த்த அரச குமாரன், ''நீ யார்? எதற்காகச் சிரித்தாய்?'' என்று கேட்டான்.

அவள், ''உங்களைப் போன்ற முட்டாள் காதலர்களைக் கண்டதில்லை. ஒருவரை விட்டு ஒருவர் இவ்வளவு தூரம் விலகியிருந்து எப்படிக் காதலிக்க முடியும்?'' என்றாள்.

''பாட்டி, என்ன செய்வது? அவளிடம் நெருங்கிப் போக எனக்கு வழி தெரியவில்லையே!'' என்றான் அரச குமாரன்.

கிழவி, ''உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. என்னாலான உதவி செய்கிறேன்'' என்றவள், கோட்டைக்குப் போய்க் கதவைத் தட்டினாள். காவலிருந்த மாதர்களில் ஒருத்தி கதவைத் திறந்தாள். கிழவி அவளிடம் ஒரு மிகப் பழைய பெரும் புத்தகம் ஒன்றைக் கொடுத்து, ''இதை இளவரசிக்குக் கொடுங்கள். பொழுது போக ஏதாகிலும் படிக்க விரும்பினால் இது அவளுக்கு உபயோகமாக இருக்கும்'' என்றாள்.

புஸ்தகம் இளவரசிக்கு அனுப்பப்பட்டது. அதைப் பிரித்துப் பார்த்த இளவரசிக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது.

''இது ஒரு விந்தையான மந்திரப் புத்தகம். இதைத் தொடக்கத்திலிருந்து புரட்டினால் மனிதன் பறவையாவான். அடிப்பக்கத்திலிருந்து திருப்பிக்கொண்டு வந்தால் பறவை மனிதனாகும்''

என்று எழுதியிருந்தது.

இளவரசி ஒரே ஓட்டமாகத் தனது அறைக்குச் சென்று சாளரத்தின் முகட்டில் உட்கார்ந்துகொண்டு புத்தகத்தை ஆரம்பத்திலிருந்து புரட்டினாள். அப்படிச் செய்த போது அவள் பார்வை வெளியே நின்று கொண்டிருந்த அரச குமாரன் மீது பதிந்தது. அவனுடைய கைகளிரண்டும் மறைந்து சிறகுகள் முளைத்துப் படபடவென்று அடித்துக்கொண்டன. சிறிது நேரத்தில் பறவையாக மாறி வானத்தில் பறந்து மர உச்சிகளைத் தாண்டி அவள் உட்கார்ந்திருந்த சாளரத்தின் வழியாக உள்ளே நுழைந்து அவள் தலையணை மீது அமர்ந்து விட்டான். அழகிய அந்த மஞ்சள் நிறப் பறவையைக் கையிலெடுத்து அன்போடு நீவி முத்தமிட்டாள். அப்பொழுதுதான் அவளுக்கு அது வெறும் பறவையல்ல; ஓர் இளைஞன் என்ற நினைவு வந்தது. ஒரே வெட்கமாகிவிட்டது. அதைத் தொடர்ந்து வேறொரு நினைவு எழவே, அவள் புஸ்தகத்தை எடுத்துக் கடைசிப் பக்கத்திலிருந்து புரட்டத் தொடங்கினாள். பறவை இளைஞனாக மாறிவிட்டது. அரச குமாரன் தன்னுடைய உண்மையான உருவத்தை அடைந்தான். மஞ்சள் உடையணிந்து வீர வேடனாகத் தோற்றமளித்த அவன், அவளருகில் அமர்ந்து உரையாடத் தொடங்கிவிட்டான்.

மாலையாகி, இருள் கவியத் தொடங்கிய போதுதான் இருவருக்கும் சுய உணர்வு வந்தது. சட்டென்று அவள் புத்தகத்தை எடுத்துப் பக்கங்களைப் புரட்டினாள். அவளையே பார்த்துக் கொண்டிருந்த அவன் நொடியில் பறவையாக மாறிச் சாளரத்தின் கண் வழியே வெளியேறி விண்ணில் பறந்து முதலில் நின்றிருந்த மரத்தின் கிளையில் வந்தமர்ந்தான். ராஜகுமாரி மீண்டும் மந்திரப் பத்தகத்தைப் புரட்டினாள். பறவையுருவில் இருந்த அரச குமாரன் தன் சுய உருவத்தைப் பெற்றான். தான் அமர்ந்திருந்த மரக் கிளையை விட்டுக் குதித்து ஒருவித ஒலி எழுப்பினான். அவனைக் காணாமல் தேடிக் கொண்டிருந்த அவனுடைய வேட்டை நாய்கள் ஓடோடி வந்து அவனைச் சூழ்ந்து கொண்டன. பின்னர் கோட்டைச் சாளரத்தில் அமர்ந்திருந்த அரச குமாரியை நோக்கி விண்வெளியில் ஒரு முத்தம் ஈந்துவிட்டு அவன் ஒற்றையடிப் பாதை வழியே திரும்பிச் சென்றான்.



இப்படி ஒவ்வொரு நாளும் அவர்கள் சந்திப்பதும், பிரிவதும் வழக்கமாகி விட்டது.

ஒரு நாள் அரசி தன் சக்களத்தி மகளைப் பார்க்க வந்தவள், எதேச்சையாகச் சாளரத்தின் அருகில் சென்று கதவுகளைத் திறந்தாள். வெளியே ஒற்றையடிப் பாதையிலே ஓர் அழகிய அரசகுமாரன் வேட்டை நாய்கள் புடைசூழக் கோட்டையின் சாளரத்தையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

''ஓ! இவள் இந்தச் சாளரத்தின் வழியே காதல் நாடகம் நடத்துகிறாளா? அப்படியானால் மறக்க முடியாதபடி ஒரு நல்ல பாடம் கற்பிக்க வேண்டியதுதான்'' என்று மனத்துள் கருவிக் கொண்டாள். இளவரசியைப் பார்த்து ''எனக்குத் தாகமாக இருக்கிறது. கீழே சென்று ஏதாகிலும் இனிய பானம் கொண்டு வருவாயா?'' என்று கேட்டாள். இளவரசியும் கீழே சென்றாள். அந்தக் கொடுமனம் படைத்த ராணி சட்டென்று தனது கொண்டையிலிருந்து இரண்டு ஊசிகளை எடுத்துச் சாளரத்தின் அருகிலிருந்த பஞ்சணையில் ஊசிகளின் கூரிய பகுதி வெளியே தெரியாதபடி மேல் நோக்கியவாறு குத்தி வைத்தாள். இளவரசி அந்தத் தலையணி மீது முகத்தையோ கையையோ பதித்து வெளியே நோக்கினால் ஊசியின் பகுதிகள் அவள் முகத்திலோ கையிலோ குத்திக் காயப்படுத்திவிட வேண்டும் என்பது அவள் நோக்கம். இப்படி அவள் தனது கொடிய செயலைச் செய்து முடிக்கவும் கீழே சென்றிருந்த ராஜகுமாரி இனிப்புப் பானத்துடன் வந்து சேரவும் சரியாக இருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம், ''நேரமாகி விட்டது. உன் அப்பா காத்துக் கொண்டிருப்பார். வருகிறேன்'' என்று கூறி விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டாள்.

சிற்றன்னை அகன்றதும் ராஜகுமாரி மந்திரப் புத்தகத்தைப் புரட்டினாள். வெளியில் நின்று கொண்டிருந்த ராஜகுமாரன் பறவையாக மாறி அம்பைப் போல் பாய்ந்து வந்து ஜன்னலோரத்திலிருந்த தலையணையின் மீது அமர்ந்தான். அவ்வளவுதான். 'வீல்' என்று அடுத்த கணம் வலி தாங்காமல் வீறிட்டான். நெஞ்சத்திலிருந்து தாரையாக ரத்தம் பெருகி அவனுடைய மஞ்சள் சிறகுகளை நனைத்தது. இந்த விபரீதத்தை நிகழ்த்தியது அந்தக் கொண்டை ஊசிதான். பறவை உருவிலிருந்த அரச குமாரன் மீண்டும் பறந்து வெளியேறிச் சுழன்று சுழன்று ஓய்ந்து கீழே விழுந்தான். இதைப் பார்த்த அரசகுமாரி பயந்து போனாள். அவளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அவள் அந்த மந்திரஜாலப் புத்தகத்தை எடுத்துப் பக்கங்களைப் புரட்டினாள். பறவை தனது சுய உருவத்தை மீண்டும் பெற்றால் அந்தக் காயங்கள் மறைந்து போகலாம் என்ற நைப்பாசை. ஆனால் அரசகுமாரன் சுய உருவத்தைப் பெற்ற பின்பும் அந்தக் காயங்கள் அப்படியே இருந்தன. ரத்தம் பெருகுவதும் நிற்கவில்லை.

இதைக் கண்டு அவனது வேட்டை நாய்கள் ஊளையிடவே, வேட்டைக்காரர்கள் ஓடி வந்து அரண்மனைக்கு அவனைத் தூக்கிச் சென்றனர்.

அரண்மனையில் அரசகுமாரனுக்கு ராஜ வைத்தியம் நடந்தது. யாராலும் அவன் காயத்தை ஆற்ற முடியவில்லை. ஆகவே, மன்னன் தனது புதல்வனைக் குணப்படுத்துபவர்களுக்குத் தக்க பரிசுகள் வழங்கப்படும் என்று நகரம் முழுதும் பறையறைவித்தான்.

இதற்கிடையில், வனத்தில் சிறையிருந்த அரச குமாரி தனது காதலனைக் காணாமல் தவித்தாள். அவனுக்கு என்ன நேர்ந்ததோ என்று ஏங்கினாள். எனவே, எப்படியாவது வெளியேறி அவனைக் காணத் துடித்தாள். ஆனால் அதற்கு வழிதான் தோன்றவில்லை. திடீரென்று ஒரு நாள் ஒரு யோசனை தோன்றியது. அதன்படி தனது படுக்கையிலிருந்த போர்வையை எடுத்து நீளம் நீளமாகக் கிழித்தாள். அவற்றையெல்லாம் ஒன்றோடொன்று சேர்த்து முடிந்து நீளக் கயிறு போல் ஆக்கினாள். அதன் உதவியால் ஒரு நாள் இரவு சாளரத்தின் வழியே இறங்கினாள். ஒற்றையடிப் பாதையில் நடந்தாள். இரவோ கனந்தகாரமாக இருந்தது. ஆங்காங்கு ஓநாய்களின் பயங்கர ஊளைச் சத்தம் கேட்டது. ஆகவே, அவள் அந்த இருளில் நடப்பதில்லை; பொழுது விடியும் மட்டும் எங்கேயாகிலும் தங்கியிருப்பது என்று முடிவு செய்தாள். சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய பொந்துள்ள ஆலமரத்தைக் கண்டவள் அந்தப் பொந்தில் ஏறியமர்ந்தாள். சிறிது நேரத்தில் உட்கார்ந்தபடியே தூங்கியும் போய் விட்டாள். நள்ளிரவு நேரம் இருக்கும். எங்கிருந்தோ ''ஊ!'' என்று ஊதல் சத்தம் கேட்டது. விழித்துக் கொண்ட ராஜகுமாரி சத்தம் வந்த திசையை நோக்கினாள்.

ஒளியோடு நான்கு மெழுகுவத்திகளின் ஒளிகள் வருவது தெரிந்தது. அந்த ஒளிகளின் பின்னால் நான்கு மந்திரவாதிக் கிழவிகள் இருந்தனர். அவர்கள் நால்வரும் உலகின் நான்கு பக்கங்களிலிருந்தும் வருபவர்கள். அவர்கள் அந்த ஆலமரத்தடியில் சந்தித்து அளவளாவுவது வழக்கம்.

அன்றும் அப்படித்தான் பல மூலைகளிலிருந்தும் உலகில் தாங்கள் கொண்டு வ்ந்த விந்தை விநோதச் செய்திகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர்.

ஒருத்தியின் பேச்சில் அரசகுமாரன் அடிபட்டான். நடந்ததை நடந்தபடியே வர்ணித்த அவள் ''அவனைக் குணப்படுத்தும் மருந்து எனக்குத்தான் தெரியும்'' என்றாள்.

''அது என்ன மருந்து?'' என்று கேட்டாள் இன்னொருத்தி.

''அந்த ராஜகுமாரன் படுத்திருக்கும் அறையில் ஒரு ரப்பர் தட்டு இருக்கிறது. அந்தத் தட்டுக்கடியில் மாய சக்தி பொருந்திய மருந்து இருக்கிறது. அதைத் தடவினால் ராஜகுமாரனின் காயங்கள் நொடியில் மறைந்து போகும்'' என்றாள் அவள்.

இதை ஒளிந்திருந்து கேட்டுக் கொண்டிருந்த ராஜகுமாரிக்கு ஒரே சந்தோஷம்.

பொழுது விடியும்வரை பொறுத்திருந்து ராஜகுமாரி நகரத்தை நோக்கி நடந்தாள். முதலில் அவள் பார்த்த ஒரு கடையில்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்



அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.

காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல, குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!





## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள **டால்கம் பவுடர்**

கால்கேட்டின் தரமான தயாரிப்பு



''நீங்க சினிமாப் படம் எடுத்துக் கடனாளியாகி விட்டதாகக் கேள்விப் பட்டேன்......''

''படம் எடுக்கலீங்க. படத்துக்கு ஆரம்பப் பூஜை தான் போட்டேன்!''

- கற்பூரம்

நுழைந்து வைத்தியருக்குரிய உடை ஒன்றை வாங்கிக் கொண்டாள். நேரே அரண்மனையை நோக்கிச் சென்றாள். அரண்மனைக் காவலர்கள் அவளுடைய விந்தை உடையைக் கண்டு அவளை உள்ளே அனுமதிக்க மறுத்தனர். அரண்மனை வாசலில் ஏதோ சலசலப்பு கேட்கவே மன்னரே வாசலுக்கு வந்து விட்டார். அங்கிருந்த நிலவரத்தைப் புரிந்து கொண்டவர், ''என் மகனின் நிலை இப்பொழுது மோசமாகிவிடாது. அதனால் அந்த வைத்தியரை உள்ளே அனுமதியுங்கள். அவரால் ஆனதைச் செய்து பார்க்கட்டும்'' என்றார். இப்படி உள்ளே நுழைந்த வைத்தியர், தான் நோயாளிக்கு வைத்தியம் செய்யும் பொழுது அறையில் வேறு யாருமே இருக்கக் கூடாது என்று கேட்டுக் கொண்டார். மன்னரும் அக்கோரிக்கைக்கு இணங்கினார்.

அறைக்குள் நுழைந்தவள் முதல் காரியமாக மூலைமுடுக்கெல்லாம் தேடி ரப்பர் தட்டினால் மூடப்பட்டிருந்த மருந்தைக் கண்டு பிடித்தாள். அவசரம் அவசரமாக அரசகுமாரனின் புண்களில் தடவினாள். தடவிய உடனேயே காயங்கள் மறைந்தன. அப்பொழுது அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி சொஞ்சநஞ்சமல்ல. அவள் மன்னனை அழைத்தாள். காயங்கள் நீங்கித் தம் மகன் நிம்மதியாகத் தூங்குவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த மன்னர், ''உங்களுக்கு விருப்பமானதைக் கேளுங்கள். தரத் தயாராக இருக்கிறேன்!'' என்றார் வைத்தியரைப் பார்த்து.

''உங்கள் ராஜ்ய இலச்சினை பதித்த கேடயமும் கொடியும், அவருக்குக் காயம் ஏற்பட்டபோது அணிந்திருந்த ரத்தக் கறை படிந்த அங்கியும் கொடுத்தாலே போதுமானது'' என்றார் வைத்தியர். மன்னர் மாறு சொல்லாமல் விரும்பியதைக் கொடுத்தார். அவற்றைப் பெற்றுக் கொண்டு மீண்டும் தனது கோட்டைக்கு அரசகுமாரி தான் சென்ற வழியாகவே வந்து சேர்ந்தாள்.

சில நாட்கள் கழித்து இளவரசன் வேட்டைக்குப் புறப்பட்டான். இந்தத் தடவை ராஜ குமாரியிருந்த கோட்டை வழியாகச் சென்ற அவன் இருந்த சாளரம் பக்கம் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. ஆனால் இளவரசி உடனே தனது மந்திரப் புத்தகத்தை எடுத்துப் பக்கங்களைப் புரட்டினாள். ராஜகுமாரன் பறவையாகி, விருப்பமில்லாவிட்டாலும் ராஜகுமாரியின் அறைக்குச் சென்றான். உடனே ராஜகுமாரி புத்தகத்தைப் புரட்டி அவனை ராஜகுமாரன் ஆக்கினாள்.

''என்னை ஏன் இங்கு வரவழைத்தாய்? எனக்கு நீ ஏற்கனவே இழைத்த துன்பம் போதாதா? இன்னும் வேறு இழைக்க விரும்புகிறாயா?'' என்று கடிந்தான். ஆம், ராஜகுமாரன் இளவரசிதான் தனக்கு நேர்ந்த துன்பத்துக்கெல்லாம் காரணம் என்று நினைத்திருந்தான்.

ராஜகுமாரன் கூறிய கடும் சொற்களைக் கேட்ட இளவரசிக்கு மனத்தை என்னவோ செய்தது.

''நானா உங்களைத் துன்புறுத்தினேன்? சொல்லப் போனால் உங்களை நான் அல்லவா காப்பாற்றியிருக்கிறேன்! காயங்களையெல்லாம் போக்கிக் குணப்படுத்தியிருக்கிறேன்'' என்றாள்.

''எதற்குப் பொய் சொல்லுகிறாய்? என்னைக் காப்பாற்றிய வைத்தியரை எனக்கு நன்றாகத் தெரியும்: அவர் எவ்விதப் பிரதி உபகாரமும் எதிர்பார்க்காமல் எங்கள் ராஜ்ய இலச்சினை பதித்த கேடயத்தையும் எனது ரத்தக் கறை படிந்த மஞ்சள் அங்கியை மட்டுமே வாங்கிக் கொண்டு போயிருக்கிறார்!'' என்றான் அரசகுமாரன்.

''இதோ இருக்கிறது, உங்கள் கேடயம், உங்கள் கொடி, உங்கள் மஞ்சள் அங்கி. நான்தான் வைத்தியராக வந்தவள். உங்களைக் காயப்படுத்திய கொண்டை ஊசிகள் என் கொடிய சிற்றன்னையினால் இந்தத் தலையணையில் பதிக்கப்பெற்றவை'' என்றாள் இளவரசி.

இதைக் கேட்ட இளவரசன் வியப்பினால் ஒரு கணம் திணறிப் போய் விட்டான். அவளையே விழுங்கிவிடுவது போல் கூர்ந்து பார்த்தான்.

அன்றிரவு இளவரசன், தன் உயிரைக் காப்பாற்றிய பெண்ணையே மணக்க விரும்புவதாகத் திட்டவட்டமாகக் கூறிவிட்டான்.

அரசர் மறுக்காமல் முகூர்த்த நாள் நிச்சயித்தார். அரசர்களுக்கெல்லாம் அழைப்புக்கள் அனுப்பப்பட்டன. இளவரசியின் தந்தையும்கூடத் தமது மகள்தான் மணப் பெண் என்று தெரியாமலே வந்து சேர்ந்தார். மணப் பந்தலில் தம் மகளை மணப் பெண் கோலத்தில் கண்ட அவருக்கு ஒரே வியப்பு. ''அம்மா, குழந்தாய்!'' என்று கூறி அணைத்துக் கொண்டார்.

இதைப் பார்த்த ராஜகுமாரனின் தந்தை வியப்போடு, ''என் மருமகள் உ ன் மகளா? சொல்லவேயில்லையே!'' என்றார்.

''என் சிற்றன்னை என்னைச் சிறையில் வைக்க அனுமதித்தவரின் மகளாக நான் அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. அதனால்தான் சொல்லவில்லை!'' என்றாள் அரச குமாரி.

உணர்ச்சிவசப்பட்ட தந்தை மகளிடம் அளவுகடந்த பரிவும், கொடிய மனைவியின் பால் அளவுகடந்த வெறுப்பும் கொண்டார். மகளுக்குச் சிறைத் தண்டனை அளித்த மனைவிக்குச் சிறைத் தண்டனை அளித்தார்.

ஆனால் அரசகுமாரி என்ன செய்தாள், தெரியுமா? சிற்றன்னையைத் தன் கல்யாணத்தைச் சாக்கிட்டு விடுவித்து மகிழ்ச்சிச் சிறையில் போட்டு விட்டாள்! - எஸ். வி. எஸ்.

# மஞ்சுளா காதலிக்கப் போகிறாள்!

இருகூரான்

மஞ்சுளாவுக்கு 'வயது பதினெட்டு:

கோயமுத்தூர் மாவட்டக் கலெக்டர் அலுவலகத்திலே ஓர் எழுத்தராக வேலை பார்த்து வந்தாள்.

அவள் அம்மா ஒரு தனிச்சி. மஞ்சுளா சின்னப் பெண்ணாக இருக்கும் போதே கணவனை இழந்தவள்.

கணவன் உயிரோடு இருந்த காலத்தில் பத்து ரூபாயை முழுசாகப் பார்த்து அறியாதவள். இப்போது — பெண் மாசம் இருநூறு ரூபாய் சம்பாதிக்க ஆரம்பித்ததும்— நோட்டு நோட்டாகப் பெட்டியில் வைத்துச் செலவு செய்யத் தொடங்கினாள். அதனால் அவளுக்குத் தன் மகளின் சாமர்த்தியத்தில் ஒரு பெருமிதம்.



மஞ்சுளாவின் இளமைப் பருவம் வழக்கம் போல் சில இளைஞர்களின் கண்களுக்கு விருந்து ஆயிற்று. அந்த அழகிய விருந்தை அநுபவித்துச் சுவைப்பதில் ஒரு சிலர் பருந்தாகவும் மாறி வட்டமிட ஆரம்பித்தார்கள். ஆனால் மஞ்சுளா யாரையும் ஏறெடுத்துப் பார்ப்பதோ, பேசுவதோ கிடையாது!

காலையில் அவள் சரியாக ஒன்பது மணி முப்பது நிமிடத்துக்கு வீட்டருகே வந்து நிற்கும் பதினெட்டாம் நம்பர் பஸ் வரவுக்காகக் காத்து நிற்பாள். மாலை ஐந்து மணி நாற்பதாவது நிமிடத்தில் வந்து நிற்கிற ஏதாவது ஒரு பஸ்ஸில் வந்து இறங்குவாள். இதுதான் அவள் புறப்படுகிற — வருகிற முறை. நாள்பட நாள்பட இதுவே இயந்திர மயமானதாக மாறிவிட்டது. மற்றபடி அவள் தன் வீட்டைவிட்டு எங்கேயும் போனதில்லை.

ஞாயிற்றுக்கிழமைகளில் பக்கத்திலிருக்கும் சினிமா தியேட்டரில் என்ன படம் நடக்கிறதோ அதைப் பார்ப்பாள். சில சமயங்களில் அந்தத் தியேட்டரில் புதிய படங்கள் ஓடும்; சில சமயங்களில் பழைய படங்கள் நடக்கும்! மஞ்சுளாவின் பொழுதுபோக்கு லட்சியப்படி ஏதாவதொரு படம் பார்க்க வேண்டும்! அவ்வளவுதான்.

இது மாதிரி அவள் செட்டாக வாழ்ந்த காரணத்தால் இந்த ஓராண்டில் அவள் அம்மா முந்நூறு ரூபாய் மீதம் செய்து வைத்திருந்தாள். அதில் ஒரு நகை செய்து மகளுக்குப் போட்டுப் பார்க்க வேண்டும் என்பது அவளுக்கு ஆசை.

இதைத் தாயார் தன் மகளிடம் தெரிவித்த போது மஞ்சுளாவுக்கும் திருப்தியாக இருந்தது. தன் தோழிகளில் ஒருத்தி சமீபத்தில் போட்டுக் கொண்டு தன் முன்னால் வந்து பெருமை அடித்துச் சிரித்தாளே.... அது போல் – ஒரு மாங்காய் மாலை வாங்கிக் கழுத்து நிறையப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டாள்: இதைத் தவிர அவளுக்குப் பெரிதாக வேறு ஆசைகள் எதுவும் இடையாது.

ஒருநாள் நகை எடுக்கப் போகலாம் என்று மஞ்சுளாவை அரை நேரம் லீவு போடச் சொன்னாள், தாயார்க்காரி. அதுவரையில் எதற்கும் லீவு போட்டறியாத மஞ்சுளா, அன்றைக்கு அரை நேரம் லீவு போட்டாள் !

தாயாருடன் நகையெடுக்கப் புறப்பட்டுக் கொண்டிருந்த போது ஒரு புதுக் குரல் உள்ளே கேட்டதை உணர்ந்தாள், அவள். இத்தனை நாளும் எந்த ஆண் வாடையும் வீசாத தன் வீட்டில் ஒரு புதிய நடமாட்டத்தைக் கண்ட அவள் முகம் சுழித்தது.

''அது யாருமில்லே மஞ்சு ! தெரிஞ்ச தம்பிதான். நகையைப் பார்த்து வாங்கலாமே என்று வரச் சொல்லியிருந்தேன். தங்கத்திலே நோட்டம் தெரிஞ்ச ஆசாமி!'' என்றாள் தாயார்.

அதற்கு மேல் மஞ்சுளா எதுவும் பேசவில்லை.

மூவருமாகச் சேர்ந்து நகை வாங்கப் போனார்கள். போகும்போதாவது ஒரு தடவை அவள் அந்த ஆளை நிமிர்ந்து பார்த்திருக்கக் கூடாதா?.... பார்க்கவில்லை.

நகைக் கடையில் மூவரும் நுழைந்தார்கள். மஞ்சுளா தனக்குப் பிடித்த மாங்காய் மாலையை எடுத்து வைத்தாள். நகையை நிறுத்துப் பார்த்துவிட்டு நகையின் விலை, செய்கூலி ஆக எல்லாவற்றுக்குமாக ரூபாய் நானூற்றி முப்பது ஆகும் என்று சொன்னார் கடைக்காரர். மாலையின் விலையைக் கேட்டதும் பிறகு வந்து வாங்கலாம் என்று தோன்றிவிட்டது மஞ்சுளாவின் தாய்க்கு. மஞ்சுளாவுக்கோ சும்மாக் கிடந்த சங்கை ஊதிப் பார்த்த .மாதிரி இருந்தது.

'இன்று நகையெடுக்கப் போகிறோம்!' என்று அவள் தன் தோழிகளிடம்—அந்த மாங்காய்மாலைக்காரியின் காதுக்கும் படுகிற மாதிரிச் சொல்லிவிட்டு வந்திருந்தாள். எனவே, அந்த நகையை அப்போதே வாங்கி அணிந்து பார்க்கத் தோன்றி விட்டது மஞ்சுளாவுக்கு.

மத்தியானம் நகையை அணிந்து கொண்டு அலுவலகத்துக்குப் போக வேண்டுமென்கிற ஆசை.

''மீதி நூற்றிமுப்பதுதானேம்மா.... அப்புறம் கொடுப்பதாகச் சொல்லேன் !'' என்றாள் மஞ்சுளா.

'கூலி விலை' என்றும், 'இன்று ரொக்கம்' என்றும் போர்டுகள் கொட்டை கொட்டையாக எழுதித் தொங்கவிடப்பட்டிருந்த நகைக் கடை அது. மேலும் தங்கச் சாமான்களுக்கு அவ்வப்போது விலைகள் ஏறிக் கொண்டிருக்கிற படியால், நகைகள் கடனுக்குக் கொடுக்கப் படமாட்டாது என்று திட்டவட்டமாகக் கூறி விட்டார், கடைக்காரர்.

''நூற்றிமுப்பதுதானே அக்கா? நான் எதிர்க்கடையிலிருந்து வாங்கித் தருகிறேன்: வீட்டிலே பணம் இருக்கிறது: சமாளித்துக் கொடுக்கிறேன். நீங்கள் கையில் சேர்ந்த பிறகு கொடுங்கள் !'' என்று சொல்லிவிட்டு மஞ்சுளாவோடு நகை பார்த்து வாங்க வந்த சரவணன் நகைக் கடையிலிருந்து எதிர்க் கடையை நோக்கிப் போனான்.

அதுவரை அவனை நிமிர்ந்து பார்க்காத மஞ்சுளா அப்போது நிமிர்ந்து பார்த்தாள். அவன் உருவம் சட்டென்று அச்சில் விழுந்தது போல் அவள் கண்களில் பதிந்தது.

சுமார் இருபத்தி ஐந்து வயது இளைஞனை அவனையும், அவன் முகத்தில் சின்னதாகக் கோடு போட்ட மாதிரித் தென்பட்ட இள மீசையையும் பார்த்த மஞ்சுளாவுக்கு இலேசாகச் சிரிப்பு வந்தது.

''நல்ல சமயத்திலே உதவினீங்க சார் ! இந்தப் பணத்தை இரண்டு மாதத்திலே மீதம் செய்து உங்களுக்குத் திருப்பிக் கொடுத்துடறோம் !'' என்றாள் மஞ்சுளா நன்றியுடன் திரும்பி வந்த சரவணனிடம்.

''சமயத்திலே இப்படி ஓர் உதவி தேவையா இருக்கும்னுதான் எனக்கு உன்னையும் கூப்பிடத் தோணிச்சுபோல் இருக்கு !'' என்று வியப்பு மேலிடச் சரவணனைப் பார்த்தாள் மஞ்சுளாவின் தாயார்.

''நான் அப்படி பெரிசா என்ன அக்கா, உதவி பண்ணிவிட்டேன்? சமயத்திலே ஒருத்தருக் கொருத்தர் உதவிக் கொள்ளக்கூட முடியலேன்னு உலகத்திலே என்ன இருக்கு?'' என்று சரவணன் தனக்குக் கிடைத்த நன்றி மிக்க வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளக் கூசினாற்போல் ஏதோ பேசிவிட்டு அவர்கள் இருவரையும் புதுமார்க்கெட் வரையில் கொண்டு வந்து விட்டுவிட்டுக் குறுக்குத் தெருவுக்குள் நுழைந்து போனான்.

அன்று மத்தியானம் மாங்காய் மாலையோடு அலுவலகம் போன மஞ்சுளாவைச் சுற்றிலும் தோழியர்கள் வந்து குழுமிக் கொண்டார்கள். ஒரு புதுப் புடவை, ஒரு புது ஜாக்கெட் இப்படி ஒருத்தி அலுவலகத்துக்குள் நுழைந்து விட்டாலே வேலை செய்யும் பெண்களுக்கு இருப்புக் கொள்ளாது. புடவை விலை என்ன? ஜாக்கெட் விலை என்ன? எந்தக் கடையில் வாங்கினாய் என்று புதிசு உடுத்தியவளைப் பழசாக்கிவிட்டுத்தான் மறு வேலை பார்க்கத் தோன்றும்! இது இயல்பாகவே பெண் மனம் !

அப்படிப்பட்ட பெண்கள் வேலை பார்க்கும் ஒரு பகுதியில் ஒருத்தி மாங்காய் மாலை போட்டுக் கொண்டிருந்தால் மற்றவர்கள் வேலை செய்வார்களா ?

''இந்த நகை விலை ரூபாய் நானூற்றி முப்பது'' என்று ஒரு சீட்டில் எழுதித் தன் மேஜை மேல் வைத்துவிட்டு மஞ்சுளா வேலையைக் கவனித்தாள். அந்த நகையைப் பற்றி எல்லாரும் வந்து கேட்டுத் தன் வேலைக்கு இடையூறு செய்வதாக அவள் நினைப்பு.

இது சில பேருக்குச் சிரிப்பாக இருந்தது ! ஒருசிலருக்கு அவள் தன் இயல்பான கர்வத்தால் செய்யும் கேலியாகவும்பட்டது. அதனால் யாருமே அவள் பக்கம் தலைகாட்டவில்லை.

அவள் நகை வாங்கிக் கொண்ட நாலாவது நாள் ஒருத்தி அந்த அலுவலகத்தில் நாலு பேரைக் கூட்டி வைத்துக் கொண்டு ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள்.

''அடியே, இவளே.... நம்ப மஞ்சுளா போட்டிருக்காளே..... அந்த மாங்காய் மாலையை வாங்கிக் கொடுத்த ஆள் யார், தெரியுமா ?''

''தெரியாதே ! தானே சேர்த்து வைத்த பணத்தில் வாங்கினதாக அல்லவா அவள் தம்பட்டம் அடித்துக் கொள்கிறாள் ?'' என்றாள் ஒருத்தி பொறுக்கமாட்டாமல்!

''அதெல்லாம் சுத்த ஹம்பக்! அவள் பூனை மாதிரி கண்ணை மூடிக் கொண்டிருக்கிறாள்; இந்தப் பூலோகம் இருண்டுபோயிருப்பதாக அவளுக்கு நினைப்பு !''

விஷயத்தை ஊர்ஜிதப்படுத்தி விட்டு ஒன்றும் தெரியாதவள் போல் அவள் எழுந்து தன் இருக்கைக்குப் போனாள். கூடியிருந்தவர்கள் அவரவர் இருக்கைகளுக்குப் போனார்கள்.

''இந்தாடியம்மா...... உன்னைத்தான்! மூனூற்றி முப்பது கொடுத்து வாங்கினவள் நான். எனக்கு எவன் எடுத்துக் கொடுத்ததாக இங்கே பேசுகிறீர்கள் இப்போது ?'' என்றாள் அவள் பொதுவில்.

''எவன் கொடுத்தானோ.... உனக்குத் தானே தெரியும்? எங்களைக் கேட்டால் ?'' என்று தாடையை இழுத்துக் கொண்டாள் எதிரே இருந்தவள்.

அவர்களை யெல்லாம் அப்படியே தின்று விடவேண்டும் போல் ஒரு ராட்சசப் பசி மஞ்சுளாவுக்கு.

ஆவேசமாக மகள் மாலை ஐந்து மணிக்கே வீட்டுக்கு வரவும், மஞ்சுளாவின் தாய் அதிசயித்தாள். ''அம்மா! அந்தச் சரவணனை நல்லவன் என்று எண்ணி அவனிடம் போய்க் கைமாற்று வாங்கினேனே. எனக்கு இந்த நகையை அவன்தான் எடுத்துக் கொடுத்ததாகச் சொல்லித் தம்பட்டம் அடித்திருக்கிறான் ! ஆபிசிலே என் மானம் போகிறது!'' என்று கத்தினாள் மஞ்சுளா.

''சே, சே! இருக்காதும்மா ! அந்தப் பையன் நல்ல பையன்!'' என்று பதறினாள் தாய்.

''உன் சர்டிபிகேட் வேண்டாம், புறப்படு உடனே !'' என்றாள் மஞ்சுளா.

அவள் எவனையாவது இதுவரையில் காதலித்திருக்கிறாளா.... எவனோடாவது சிரித்துப் பேசியிருக்கிறாளா? இல்லாத ஒன்றை எல்லாருமாகச் சூழ்ந்து கொண்டு பேசினால் என்ன அர்த்தம்?

தாய்க்கு ஒன்றுமே புரியவில்லை.

''அந்தத் தம்பி அப்படியெல்லாம் சொல்ற தம்பி இல்லையே !'' என்று மறுபடியும் ஏதோ முனகினாள் தாய்.

எதையும் மஞ்சுளா காதில் போட்டுக் கொள்ளவில்லை. தூக்கின காலை நிலத்தில் வைக்காமல் ஒரே குறியாக நின்றாள் அவள்:

''இப்போதே போய்க் கேட்டாக வேண்டும் அவனை ! என்னய்யா.... நீயா எனக்கு நகையெடுத்துக் கொடுத்தாய் என்று !''

மகளை அழைத்துக் கொண்டு புதுமார்க்கெட் முனையில் இருந்த சரவணனின் கடைக்கே வந்து விட்டாள், தாய்க்காரி. ஆத்திரம் தீர நாலு கேள்வி அவனைக் கேட்க வேண்டும் என்று அவளுக்கும்கூடத் தோன்றிவிட்டது. சரவணனின் மீதிருந்த நல்ல அபிப்பிராயம் எல்லாம் கரைந்து போய் இப்போது மகளின் பேச்சே அவள் காதில் திரும்பத் திரும்ப வந்தது: 'சம்பாதிக்கிற மகள், உத்தியோகம் பார்க்கும் இடத்தில் பட்ட அவமானம் எவ்வளவு பெரிய கொடுமை ?'

''இந்தா தம்பி.... சரவணா.... நீதான் என் பெண்ணுக்கு நகை எடுத்துக் கொடுத்ததாக ஊர் முழுக்கத் தம்பட்டம் போட்டுக் கொண்டாயாமே, இதெல்லாம் உனக்கு அடுக்குமா ?''

மஞ்சுளா பதறிக் கொண்டு வந்தவள், இப்போது எதுவும் கேட்க முடியாமல் பதறிக் கொண்டே நின்றிருக்க அவள் அம்மாதான் துணிச்சலாகத் தன் மகளுக்காகப் பரிந்துசென்று கேட்டாள் !

''இதென்னக்கா, கூத்து ? யார்கிட்டே நான் சொன்னேன்? உங்களுக்கென்ன

## மாடர்ன் ஆர்ட்டிஸ்ட்



பைத்தியமா?'' என்றான் சரவணன், கடையை விட்டு வெளியே வந்து நின்று.

அவன் கடை தங்கம் கில்ட் கொடுக்கிற சின்னப் பெட்டிக்கடை. எழுந்து வந்த வேகத்தில் அவன் கால் பட்டுப் பித்தளைப் பொருள்களைத் துலக்குவதற்காக ஊறப் போட்டு வைத்திருந்த மெருகு பேசன் தளும்பிச் சிந்திற்று.

''எங்களுக்கெல்லாம் பைத்தியம் பிடிக்கவில்லே, சார்! என்கூட வேலே பார்க்கும் லீலாவதி சொன்னுளே....!''

''லீலாவதியா.... யார் அது?''

''ஆஹா.... ஒன்றுமே தெரியாதா உங்களுக்கு....?''

''தெரியாதும்மா!'' என்றான் அவன்.

''உங்க அப்பாவித்தனத்தையும் பேச்சையும் பார்த்தால் பெரிய யோக்கியர் மாதிரி தான் இருக்கு! ஆனல் இவ்வளவு பெரிய அவமானத்தை வதந்தி பண்ணி விட்டிருக்கிறீர்களே...!'' படபடவென்று பதறினவாறு சொன்னுள் மஞ்சுளா.

''நான் என் தொழில் மேலே சத்தியமாச் சொல்றேனக்கா! உங்க பொண்ணு சொல்ற மாதிரி எதுவும் நான் சொல்லல்லே!'' என்றான் அவன் மீண்டும்.

தாயும் மகளும் கேள்வி கேட்க முடியாமல் நின்றார்கள். அப்போது எதையோ யோசித்தான், சரவணன். ஒரு முடிவுக்கு வந்தவன் போல் வெகு வேகமாக அவர்களைக் கடையருகே விட்டு விட்டு ஓடினான்.

ஐந்து நிமிஷத்தில் திரும்பி வந்தவன், ''நானுக இதிலே எதுவுமே சொல்லாமல் எப்படி இவ்வளவு தூரம் வந்ததின்னு எனக்கு ஆச்சரியமாயிடுச்சு அக்கா! இப்பத்தான் இந்த வதந்திக்கு யார் காரணம்னு தெரியுது! போதாத பணத்துக்கு நகைக் கடை எதிரே இருந்த பெட்டிக்கடையிலே கைமாற்று வாங்கினேன் இல்லேயா? அந்தப் பெட்டிக் கடைக்காரர்தான் இப்படி அதைத் தப்பாக எடுத்துக்கிட்டாராம். அவர் பெண் லீலாவதிகிட்டே அவர்தான், ஒருகால் எனக்கும் உங்க பெண்ணுக்கும் சிநேகமோ என்று தெரிந்து கொள்வதற்காகக் கேட்டுவிட்டாராம். அப்படியெல்லாம் மஞ்சுளா நடக்க மாட்டாள்னு அந்தப் பெண் அவள் அப்பாகிட்டே வாதாடினப்போ, அவரேதான், 'இல்லேம்மா.... என்கிட்டே போதாத பணத்துக்குக் கைமாற்று வாங்கி அந்தச் சரவணன் அவளுக்கு எதிர்க்கடையிலே நகையெடுத்துக் கொடுத்தானே....' என்று சொன்னராம். அதுதான் காது மூக்கு வைத்து இப்படி ஒரு வதந்தியா ஆகிப் போயிடுச்சு!'' என்று மஞ்சுளாவின் அம்மாவிடம் மூச்சைப் பிடித்துக் கொண்டு சொன்னான் சரவணன்.

''அவர் ஏன் இப்படி யெல்லாம் நினைக்கணும்?'' என்றாள் மஞ்சுளா.

''இதென்ன கேள்வி? கல்யாணமாகாத ஒரு பெண்ணுக்குக் கல்யாணமாகாத ஒரு வாலிபன் நகைக் கடையில் நகை வாங்கிக் கொடுக்க வந்தால், அதை அவள் வாங்கினதாகக் கருதுவார்களா? அல்லது அவன் வாங்கிக் கொடுத்ததாகக் கருதுவார்களா? அதற்குமேல் ஒரு காரியம் — நான் கைமாற்று வாங்கினது!''

சிரித்தவாறே சொல்லிவிட்டுத் தளும்பிப் போன பேசினைச் சற்றுத் தள்ளி வைத்துப் பெட்டிக் கடைக்குள் நுழைந்தான் சரவணன்.

''இதற்கெல்லாம் நீதானே காரணம்?'' என்று எரிந்து விழுந்தாள் மஞ்சுளா தாயிடம்.

தாய் ஒன்றும் புரியாமல் குழம்பிப் போய் நின்றாள்.

''சே.... சே! இந்த உலகம் ரொம்ப மோசமானது; கல்யாணமாகாமல் ஒருத்தி இருந்தால் அவளேயே கவனித்துக்கொண்டிருக்கிறது!'' என்றாள் ஒரு சலிப்புடன் மஞ்சுளா.

சரவணன் சிரித்தான்.

தாயை அழைத்துக் கொண்டு வெகு வேகமாக அங்கிருந்து புறப்பட்ட மஞ்சுளா சில தீர்மானமான முடிவுகளோடு தான் வீடு போனாள்.

அது வேறொன்றுமில்லே!

இனிமேல் நாமும் எவனேயாவது காதலிக்க வேண்டும்; ஆபிசிலிருந்து வரும்போது அவனோடு கொஞ்ச நேரம் எல்லாரையும் போல் பேசிச் சிரிக்க வேண்டும்! எல்லாரைப் போலவும் கல்யாணம் செய்து கொண்டுவிட வேண்டும் என்பதுதான் அந்த முடிவுகள்!

## மருதாசலம் – 11



# வட்டமேஜை

- நம்பிக்கை தகரலாமா?
- தத்துவ விளக்கம்
- புள்ளி விவரம்!

"தாமரை நெஞ்சம்" என்ற சினிமா "சவுண்ட் ஆப் மியூசிக்", "ஸ்லெண்டர் த்ரெட்" ஆகியவற்றின் தழுவல் என்று எழுதியிருக்கிறீர்கள்.

"கலாட்டா கல்யாணம்" என்ற சினிமா "மை ஷாதி கர்னே சலா ஜாதாஹூன்" என்ற ஹிந்தி சினிமாவையும், "டென் தௌஸண்ட் பெட் ரூம்ஸ்" என்ற ஆங்கிலப் படத்தையும் தழுவி எடுக்கப்பட்டிருக்கிறதே.

சென்னை — 14
16—6—68 எம். என். சாமி

"தாமரை நெஞ்சம்" விமரிசனத்தைக் கண்டு திடுக்கிட்டேன். அத்தி பூத்ததுபோல் தரமான தமிழ்ப்படம் ஒன்று ஆபாசமான களியாட்டங்கள் ஏதும் இல்லாமல் வெளி வருவது குறித்துத் தாங்கள் பாராட்டாமல், இருக்கின்ற சில குறைகளை மிகைப்படுத்தி




அபத்தமாக விமரிசனம் எழுதி, சிகரம் வைத்தாற்போல் படத்தின் வெற்றி இரவலின் வெற்றி என்று குறிப்பிட்டிருப்பது என்னைப் போன்ற ரசிகர்களின் உள்ளங்களைப் புண் படுத்திவிட்டது. பாலசந்தரைப் போன்ற இளைஞர்கள் உன்னதமான லட்சியப் படைப்புக்களை உருவாக்கும் பொழுது ஏன் உங்கள் குற்றம் காணும் கண்களை அகலத் திறந்து கொண்டு விமரிசிக்கிறீர்கள் என்பது புரிய வில்லை. நகரத்திலுள்ள சுத்தமான படம் 'தாமரை நெஞ்சம்தான்'. கல்கியின் நெடு நாளைய வாசகனாகிய எனக்குத் தங்கள் நடு நிலைமையில் வைத்திருந்த நம்பிக்கை தகர்ந்து விட்டதில் வருத்தமே.

சென்னை — 5
13—6—68 எம். ஜெ. ராமன்

(டைரக்டர் திரு கே. பாலசந்தரின் திறமையை நன்கு உணர்ந்திருந்ததால்தான் பல மாதங்களுக்கு முன்பே அவருடைய படத்தைக் கல்கி மேலட்டையில் போட்டுக் கௌரவித்திருக்கிறோம் என்பதை நினைவூட்ட விரும்புகிறோம். சுத்தமான படம் என்பதை விமர்சனத்தில் குறிப்பிட்டுப் பாராட்டி இருப்பதை நண்பர் ராமனின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறோம். தமிழகத்துக்கும் பெருமை தேடித்தரக் கூடிய உயர்ந்த படங்களை எடுக்கும் ஆற்றல் திரு கே. பாலசந்தருக்கு உண்டு. அந்த ஆற்றலை அவர் வழி தவறாமல் செவ்வனே பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பெரு நோக்கோடுதான் நிறைகளைக் குறைக்காமல் சொன்னதுடன் தாமரை நெஞ்சத்தில் உள்ள குறைகளையும் குறிப்பிட்டிருக்கிறோம்.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு -குறள்

நண்பர் ராமன் இன்னொரு முறை தாமரை நெஞ்சம் விமர்சனத்தைப் படித்துப் பார்க்க வேண்டும். ஆசிரியர்]

இராமபிரான் வாலியை மறைந்திருந்து அம்பெய்து கொன்றது சரியா? பல உள்ளங்களில் இன்றளவும் சர்ச்சைக்கிடமாகி வரும் கேள்வி இது.

இது போலவே தன் கடமையை உரிய காலத்தில் நிறைவேற்ற வந்த காலனைக் காலால் உதைத்துத் தண்டித்தது முக்கண்ணனுக்கு முறையாகுமா என்ற வினவுக்கு விடையாக, 'சிலையின் உயிரை'ச் சிருஷ்டித்திருக்கிறார் ஆசிரியர் ரா. கணபதி அவர்கள்.

நல்ல கற்பனை; தத்துவ விளக்கத்தில் ஆசிரியருக்கே உரிய தரமான நடை.

குன்றத்தூர்
31—5—68 வி. ச. வாசுதேவன்

சிறுகதை 'ஒரு ரூபா'யைப் பரிசீலனை செய்ததில் கண்டுபிடிக்கப்பட்ட ஆங்கிலச் சொற்கள் 28. அதில் முதலிடம் பெறுவது 11 முறை உபயோகிக்கப்பட்ட "பஸ்". அடுத்து (ரூபாய்) நோட்டு, நாவல் (ஆசிரியர்) போஸ்டாபீஸ் மும்மூன்று இடங்களிலும், பஸ் ஸ்டாண்ட், ஆபீஸ், ஹோட்டல், ஹெட் கிளார்க், ஸார் ஆகியவை இரண்டு இரண்டு இடங்களிலும், கண்டக்டர், கார், கிளார்க், கிளியரன்ஸ், சினிமா, சைக்கிள் ரிக்ஷா, டாக்ஸி, டாக்டர், டிரைவர், டின்னர், பேப்பர், போஸ்ட், மணியார்டர், ரோடு, ரேடியோ, ரிக்ஷா, ரைஸ் மில், ஸ்டாம்ப், அயிட்டம் — ஆகியவை ஒவ்வொரு முறையும் உபயோகிக்கப்பட்டுள்ளன. நான் ஆங்கில எதிரியும் இல்லை; தமிழ் வெறியனும் இல்லை. கூடுமானவரை தமிழிலேயே எழுதக்கூடாதா?

கோயமுத்தூர் — 11
1—6—68 டி. ரங்கஸ்வாமி


Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam




# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது

துவைத்த துணிகளை அலசுவதற்கு முன் நீரில் சிறிதளவு டினோபால் சேர்த்தால், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது— ஷர்ட்டுகள், புடவைகள், படுக்கை விரிப்புகள், டவல்கள் எல்லாம்!

இத்தனைக்கும் ஆகும் செலவுதான் என்ன? துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவே! துணிகளைப் பாழாக்காமல் சாஸ்திரீய முறையில் வெண்மை பளிச்சிடச் செய்வது டினோபால்.

டினோபாலின் மற்ற பேக்குகள்:



ஒரு வாளித் துணிக்கு ஒரு பேக்கெட்




புதிய எகானமி பேக்

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த. பெ. 965, பம்பாய் 1 பி.ஆர்.

®டினோபால் என்ற பெயர் ஜே. ஆர். கெய்கி எஸ். ஏ. பால் ஸ்விட்ஜர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

Shilpi SG 1A/68 Tam.

